# தேவன் ஏற்படுத்திய குடும்பம்

# GOD ORDAINED FAMILY



இயேசு ஜீவிக்கிறார் வெளியீடு

# தேவன் ஏற்படுத்திய குடும்பம்!
(GOD ORDAINED FAMILY)

தொகுத்தவர்
போதகர். S. ஜோசப் பாலச்சந்திரன்

இயேசு ஜீவிக்கிறார் வெளியீடு
அழகர் நகர்,
K. புதூர், மதுரை - 625 007.

## இப்புத்தகத்தில் உள்ள செய்திகளை எழுதியவர்கள் :-

| | | |
|---|---|---|
| பாஸ்டர். | N. | தாமஸ் (காட்டாத்துரை) |
| ,, | | ஜான் இளங்கோவன் (நீலகிரி) |
| ,, | | ராஜாமணி (மதுரை) |
| ,, | P. | ஸ்டீபன் (சென்னை) |
| சகோதரர் | | அந்தோணிராஜ் (சென்னை) |
| ,, | | சகரியா பூணன் (பெங்களூர்) |
| ,, | | பன்னீர் செல்வம் (கோவை) |
| ,, | | ஜோசப் பாலச்சந்திரன் (மதுரை) |
| ,, | | விக்டர் சுவாமிதாஸ் (சென்னை) |
| ,, | | ரிக்கி கார்டன் |
| ,, | | சாம் ஜெபத்துரை (சென்னை) |
| சகோதரி. | | ராஜகுமாரி ராஜ் (சென்னை) |
| ,, | | சுசிடேவிட் (சென்னை) |
| ,, | | கிரேஸ் இளங்கோவன் (நீலகிரி) |
| ,, | | பாரதி மணிமுத்து (தூத்துக்குடி) |

# முன்னுரை

உங்கள் கையிலிருக்கும் இப்புத்தகம் மதுரை K. புதூரிலும், பசுமலையிலும் உள்ள தேவ பிள்ளைகளின் ஜெபத்தினால் பிறந்த ஒன்றாகும்.

நாங்கள் கடந்த சில ஆண்டுகளாக ''எக்ளீஷியா'' என்ற தலைப்பில் உசிலம்பட்டி, வைகை அணை, திருமங்கலம், விருதுநகர், திண்டுக்கல், தூத்துக்குடி, பரமக்குடி, கோவில்பட்டி போன்ற இடங்களில் கர்த்தரிடத்தில் பெற்ற தரிசனத்தின்படியும், தேவனுடைய வழி நடத்துதலின்படியும் குடும்ப ஆசீர்வாத முகாம்களை நடத்தினோம்.

அது அநேக கிறிஸ்தவ குடும்பங்கள் வேத வசனத்தின்படி கட்டப்படுவதற்கும், சீர் பொருந்துவதற்கும், பரிசுத்தமடைவதற்கும், குடும்பப் பிரச்சனைகளிலிருந்து விடுதலை பெறுவதற்கும், குடும்பத்தின் அனைத்து அங்கத்தினரும் ஆசீர்வதிக்கப்படுவதற்கும் ஏதுவாக அமைந்தது.

இப்படிப்பட்ட முகாம்களில் எல்லாரும் கலந்து கொள்ள முடியாததால் இந்த குடும்பங்களைக் கட்டும் சத்தியங்களை புத்தக வடிவில் வெளியிட தீர்மானித்து சில ஆண்டுகளாக ஜெபித்துக் கொண்டு வந்தோம். கர்த்தர் ஏற்ற வேளையில் அருமையான சகோதரர் சாம் ஜெபத்துரை மூலமாய் இப்புத்தகம் அச்சிடவும் இந்த ஆண்டு, சென்னை புதுவாழ்வு அசெம்பிளீஸ் ஆப் காட் சபையில் வைத்து நடைபெறும் எக்ளீஷியா" 88 (மே 13, 14)ன் போது அந்நூலை வெளியிடவும் கிருபை செய்த தேவாதி தேவனுக்கு சகல கனமும் துதியும் உண்டாகவும், இந்நூல் அநேகமாயிரங்களுக்கு ஆசீர்வாதமாக அமையவும் கர்த்தருடைய பாதத்தில் படைக்கிறோம்.

செய்திகளைக் கொடுத்த, ஜெபித்த, உதவி செய்த யாவருக்கும் தேவன் பிரதிபலன் அளிப்பாராக.

இயேசு ஜீவிக்கிறார்
சுவிசேஷக்குழுவினர் சார்பில்,
**S. ஜோசப் பாலச்சந்திரன்**

மதுரை
1-5-1988

# பொருளடக்கம்

## அத்தியாயம் 1

# தேவன் ஏற்படுத்திய குடும்பம்!

''நானும் என் வீட்டாருமோவென்றால் கர்த்தரையே சேவிப்போம்'' (யோசுவா 24:15b).

இது யோசுவா பக்தனுடைய மிகுந்த தைரியமுள்ள விசுவாச அறிக்கை. யோசுவா வேதத்திலுள்ள விசுவாச வீரர்களில் ஒருவன். தன்னோடிருந்த பத்துப்பேர் துர்ச்செய்தி பரப்பிய போதும், விசுவாசத்தோடு நாம் போய் அதைப் பிடித்துக் கொள்ளலாம் என்று கூறுகிறான்.

யோசுவாவைப் போல் நான் மாத்திரமல்ல, என் வீட்டாரும் கர்த்தரையே சேவிப்போம் என்று சொல்லக்கூடியவர்கள் நம்மில் எத்தனை பேர் உண்டு? நானும் என் வீட்டாரும் இக்காரியத்தைச் செய்வோம் என்று சொல்லக்கூடியவர்கள் மிக சொற்பமே. நாம் யோசுவாவைப் போல ''நானும் என் வீட்டாரும்'' என்று சொல்லக் கூடியவர்கள் ஆகவேண்டும். அப்படியே ஆகப் போகிறோம் என கர்த்தருக்குள் நாம் அனைவரும் விசுவாசிப்போம். நாங்கள் ஒருமனதோடு வாழப் போகிறோம் என்று முழு நிச்சயமாய் விசுவாசிப்போம். இக் கட்டுரையை வாசித்து முடிப்பதற்குள்ளாக, இந்த விசுவாசம் உங்கள் குடும்பத்திலே கிரியை செய்யப்போகிறது. அந்த நம்பிக்கையோடு இதை எழுதுகிறேன். அதே நம்பிக்கையோடு நீங்களும் இதை வாசித்து விசுவாசித்து ஸ்தோத்திரியுங்கள்.

ஒருமனமற்ற குடும்பங்கள்:-

பரிசுத்தவான்களின் வாழ்க்கையிலும் கூட, முழு குடும்பத்தையும் தங்கள் அனுபவத்தில் கொண்டு வரத் தவறியிருக்கிறார்கள் என அறிவோம். ஏலி தேவனுடைய பெட்டிக்காக நடுங்கிக் கொண்டிருந்தவன். ஆனால் தன் பிள்ளைகளை

நல்லொழுக்கத்தில் நடத்தத் தவறியதால் அவன் மக்களாகிய ஓப்னியும், பினெகாசும் ஒரே நாளில் கொல்லப்பட்டார்கள்; மருமகள் இக்கபோத்தைப் பெற்றாள்; ஏலி மல்லாந்து விழுந்து பிடரி முறிந்துச் செத்தான்.

மோசேயும் தன் மனைவியையாகிலும், பிள்ளைகளையாகிலும் கர்த்தரின் வழியில் நடத்தியதாகத் தெரியவில்லை. ஆகவே, ஆசாரிய ஊழியத்தில் ஆரோனின் பிள்ளைகள் வந்தார்களேயல்லாமல் மோசேயின் பிள்ளைகள் வரவில்லை.

சாமுவேல் தேவனிடத்தில் கேட்டுப் பெற்றுக் கொள்ளப்பட்டவன், தேவ சந்நிதியில் வளர்ந்தவன். தேவசத்தம் கேட்டவன், தேவ மனிதன் என்று சாட்சி பெற்றவன். ஆனால், அவன் பிள்ளைகளைப் பற்றிய சாட்சி என்ன? அவனுடைய குமாரர் அவன் வழிகளில் நடவாமல் பொருளாசைக்குச் சாய்ந்து, பரிதானம் வாங்கி நியாயத்தைப் புரட்டினார்கள். "உம்முடைய குமாரர் உம்முடைய வழிகளில் நடக்கிறதில்லை" (I சாமு. 8:3,5). என்னே பரிதாபம்!

ஏனோக்கு தேவனோடே சஞ்சரித்துக் கொண்டிருந்து குமாரரையும், குமாரத்திகளையும் பெற்றான். அவன் காணப்படாமற் போனான்; தேவன் அவனை எடுத்துக் கொண்டார். அவன் பிள்ளைகள்? அவன் வழியில் இல்லையே! இவ்வளவு பெரிய மனிதன், தேவனால் சாட்சி பெற்ற தேவ மனிதனின் மனைவி எங்கே? பிள்ளைகள் எங்கே? பிரியமானவர்களே, நம்முடைய கண்களைக் கர்த்தர் திறப்பாராக. ஆமென்!

உலகை ஆதாயம் செய்தும் பிள்ளைகளை இழந்த பெற்றோர் எத்தனை? இரவு பகலாய் ஆத்துமாக்களுக்காக கண்ணீர் ஜெபம் செய்து தங்கள் சொந்த கணவன்மாரையும், பிள்ளைகளையும் சாத்தானுக்கு கையளித்த தாய்மார் எத்தனை! எத்தனை!! பெயர் பெற்ற ஊழியர் ஒருவரின் மகன் கொலை செய்து சிறையில் வாடுகிறான், மற்றொருவரின் மகன் R.S.S. இயக்கத்தில் இருக்கிறான். நம்முடைய பிள்ளைகள் நமது கவலையீனத்தினால் நமக்கு எதிராகவும், நமது விசுவாசத்

துக்கும், ஏன் நாம் நம்புகிற தேவனுக்கும் எதிராக எழும்பு வார்களானாலும் நமது தேவ பக்தியினுல் மேன்மை என்ன? வெறும் உணவும், உடையும் கொடுத்து நரகத்துக்கு நேராக நடத்தவா தேவன் நமக்கு விலையேறப் பெற்ற பிள்ளைகளைத் தந்தார்! (மல்கியா 2:15)ஐ வாசியுங்கள். கர்த்தர் தந்த நமது குடும்பத்தை நாம் கர்த்தரின் வழியில் நடத்த வேண்டாமா?

**ஒருமனமுள்ள குடும்பங்கள்:-**

புதிய ஏற்பாட்டில் கொர்நேலியு தன் வீட்டார் அனைவரோடும் தேவபக்தியுள்ளவனுயிருந்தான். அவனைப் பரலோகம் மறக்கவில்லை. புறஜாதிகளின் நடுவில் பரிசுத்த ஆவி இறங்குவதற்கு அவன் குடும்பத்தை கர்த்தர் தெரிந்து கொண்டார். ஏனெனில் அது ஒருமனமுள்ள குடும்பம்.

பழைய ஏற்பாட்டில் நோவா பக்தன் தேவ எச்சரிப்புப் பெற்ற பொழுது, பயபக்தியுள்ளவனுகி தன் குடும்பத்தை இரட்சிக்கத் தீர்மானித்தான். தன்னைக் காப்பாற்றினுன், தன் மனைவியைக் காப்பாற்றினுன், மூன்று பிள்ளைகளைக் காப்பாற்றினுன்! தன் மருமக்களையும் காப்பாற்றி விட்டான்!! அதோடு தேவனுக்குச் சித்தமான எண்ணிறந்த ஜீவராசிகளையும் காப்பாற்றினுன் (எபி. 11:7). ஆனுல் அவன் தன் குடும்பத்திற்காக மாத்திரம் வாழவில்லை. தேவனோடு சஞ்சரித்தான். தேவ சித்தம் செய்தான். அவர் சொல்லிக் கொடுத்தபடி பேழை செய்தான். 120 வருடம் பிரசங்கம் செய்தான். அதே வேளையில் தன் குடும்பத்தைப் பாவ உலகுக்கு அடிமையாகாமல் அவர்களையும் இரட்சித்து தேவ ஆலோசனைக்கு கீழ்ப்படியப்பண்ணினுன் ஆமென்!

பலர் கர்த்தருக்குள் வந்தும் தங்கள் குடும்பத்தை, முழுவதுமாக மறந்து ஆவியில் ஆடுண்டு அலைகிறார்கள். முடிவிலே தங்கள் குடும்பத்தையும், தங்கள் ஆத்துமாக்களையும் கெடுத்துப் போடுகிறார்கள். வேறு சிலர், கர்த்தருக்குள் வந்தும் தங்கள் மனைவி, தங்கள் புருஷன், தங்கள்

பிள்ளைகள் என்னும் சிறுவட்டத்துக்குள் தங்கள் வாழ்நாட்களைக் கழித்து வெறும் மனிதராக முடிவு பெறுகிறார்கள். தேவன் இரண்டையும் விரும்பவில்லை. தோவானைவப்போல் தேவ சேவை செய்யவும், தன் குடும்பத்தைக் காப்பாற்றவும் வேண்டுமென விரும்புகிறார் (1 தீமோ 3:3-5).

குடும்பம் என்பது தேவனால் நியமிக்கப்பட்டது. ஒரு நல்ல குடும்பத்தைக் கட்டி எழுப்புவது கர்த்தரின் பொறுப்பு. ஆயினும், மனிதனின் பொறுப்புகள் சில இருக்கின்றன. அதின் முதன்மையானது தேவன் குடும்பத்தில் வைத்திருக்கிற ஒழுங்கைக் கவனித்து அதை அங்கீகரிப்பதாகும். அதின் முதன்மையானது:-

**தேவனால் நியமிக்கப்பட்ட தலைவர்:-**

இவர் கணவர், பிள்ளைகளின் தகப்பன், குடும்பத்தின் பொறுப்பை எடுத்திருக்கும் தலைவன், இதை ஒவ்வொருவரும் ஒத்துக்கொள்ள வேண்டும். ஆனால் பலவேளைகளிலும் நான் அல்லவா குடும்பத்தை நடத்துகிறேன். இவர் என்ன தலைவர் என்று மனைவி நினைக்கிறாள். என்ன அப்பா, ஊர்சுற்றித் திரிகிறார், எங்களைப் பற்றியா கவலைப்படுகிறார்? என பிள்ளைகள் நினைக்கிறார்கள். இது சரியில்லை. அவரில் குறையிருக்கலாம். ஆனால், அவரை தேவன் தலைவராக நியமித்து விட்டாரே! ஆக அவரை அந்த ஸ்தானத்தில் வைத்தே பார்க்கவேண்டும்.

இந்த தலைவனின் அனுமதியில்லாமல், அவர் அறியாமல் ஒன்றும் நிகழக்கூடாது. அவர் சர்வாதிகாரியல்ல, அன்பினால் மற்றவர்களோடு இணைந்து இசைந்து ஆளுகைசெய்யும் அன்புத்தலைவர். இந்தியாவுக்கு ஒரு ஜனாதிபதியிருப்பது போல, அவர் கையெழுத்தில்லாமல் ஒன்றும் சட்டமாவதில்லையே! சரீரத்தில் நடக்கும் எல்லா வேலைகளும் மூளைக்குப்போய் வருகிறது. மூளை எல்லாவற்றையும் ஒழுங்கு செய்கிறது. அப்படியில்லாவிடில் என்ன நடக்கும்! நமது இரண்டு கால்களும், இரண்டு திசைகளில் செல்லும். நாம்

நடக்கமுடியுமா? கண்ணென்று காண கையொன்று செய்ய எல்லாம் குழப்பமாக முடியும்! ஆக, அவனே குடும்பத்தை இணைக்கும் சக்தி. இத்தலைவனை அங்கீகரியாத குடும்பம் எவ்வளவு பரிதாபமானது? மனைவி எங்கே போகிறாள் என்று புருஷனுக்குத் தெரியாது. பிள்ளைகள் எங்கே இரவைச் செலவழிக்கிறார்கள் என்று தகப்பனுக்குத் தெரியாது. இக்குடும்பத்தின் முடிவு என்ன? சிந்தியுங்கள்! வேதத்தில் ஒரு நிர்ப்பாக்கியமான வசனமும், அதைத் தொடர்ந்து பரிதாபமான வாழ்க்கையும் இருக்கிறது, படித்துப் பாருங்கள். ''அந்நாட்களில் இஸ்ரவேலிலே ராஜா இல்லை, அவனவன் தன் தன் பார்வைக்குச் சரிபோனபடி செய்து வந்தான்'' (நியா 17:6)

இந்த தலைவனே தேவனுக்கு கணக்கு ஒப்புவிக்கிறான். ஏவாள் பழத்தைப் பறித்து புசித்து கணவனுக்கும் கொடுத்தாள். ஆண்டவர் ''ஏவாளே, எங்கே இருக்கிறாய்!'' என்று கேட்டார்... இல்லையே! ''ஆதாமே நீ எங்கே இருக்கிறாய்?'' என்றல்லவா கேட்டார். ஆபிரகாமின் சந்ததியைக் கர்த்தர் தெரிந்து கொண்ட பொழுது, அவர் ஆபிரகாமை அழைத்தாரே தவிர, சாராளையும் கூட்டிக் கொண்டுவா என்று சொல்லவில்லையே. ஆபிரகாமின் அழைப்பு இருவருக்கும், பின்சந்ததிக்கும் பொதுவானது. ஆபிரகாம் தசமபாகம் கொடுத்தபொழுது அவன் அரையிலிருந்த லேவியும் கொடுத்தான் என்று ஆவியானவர் எழுதி வைத்திருக்கிறார். கணவன் இப்பொறுப்புகளை உணரவேண்டும், குடும்பம் இதை அங்கீகரிக்க வேண்டும், கர்த்தருக்குப் பயப்படுகிற மனிதனின் ஆசீர்வாதம் அவன் குடும்பத்தின் ஆசீர்வாதத்தில் இணைந்து கிடக்கிறது. இதை சங்கீதம் 128 நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

**அடுத்ததாக வருவது, தேவனால் நியமிக்கப்பட்ட துணைவி:-**

மனைவியை ஒரு ஸ்திரீயாக பார்க்க வேண்டாம். அவள் தான் புருஷனைப் பூரணப்படுத்துகிறவள். தேவன் ஆதாமிலிருந்து ஏவாளைப் பிரித்து அவனோடு இணைத்தபொழுது அவன்

சந்தோஷப்பட்டான். அவன் பூரண மனிதன். ஆனால் அவர்கள் இரண்டல்ல ஒன்று, ஒரே மாம்சம்! ஆகவே அவன்பிரிந்து இணைந்திருப்பான் என்று எழுதியிருக்கிறது (ஆதி 2:23,24).

மனிதனுக்கு எந்த துணையும் ஏற்ற துணையாக தேவன் காணவில்லை-மனைவியைத்தவிர-ஒரு மனிதனுடைய எந்தச் சூழ்நிலையிலும் அவனோடு வாழக்கூடியவள், உதவி செய்யக் கூடியவள், உடனிருக்கக் கூடியவள், அவனது மனைவியே. அவனுக்கு மறைவான ஒன்றும் அவளிடம் இல்லையே. ஆகவே தேவனால் நியமிக்கப்பட்ட மனைவி என்பவள் ஏற்றதுணை. அவர்கள் ஒருவருக்கொருவர் துணையாக இருத்தல் வேண்டும். ஒருவரிலொருவர் துணையைக் கண்டு கொள்ள வேண்டும்.

மனைவி கணவனை எஜமானாக எண்ணி கீழ்ப்படிய வேண்டுமென்பது ஒரு தப்பெண்ணமாகும். வீழ்ச்சிக்கு முன்னும் அவர்கள் இருவரும் சகலத்தையும் ஆளுகிறவர்களாகவே தேவன் நியமித்தார் (ஆதி 1:26). வீழ்ச்சிக்குப் பின்னும் "உன் ஆசை அவனைப் பற்றியிருக்கும், அவன் உன்னை ஆண்டு கொள்ளுவான் என்றார்" (ஆதி. 3:16). எனவே ஆபிரகாமை சாராள் ஆண்டவனே என்று சொல்லி கீழ்ப்படிந்திருந்தாள் (1 பேதுரு 3:6). மனைவி புருஷனுக்கு கீழ்ப்படிய வேண்டும் புருஷன் மனைவியினிடத்தில் அன்பாயிருக்க வேண்டும். இருவரும் ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்திருக்க வேண்டும் (எபே 5:21,22,25). ஒருவரையொருவர் தங்களிலும் மேன்மையுள்ளவர்களாக எண்ண வேண்டும் (பிலி 2:3). இரட்சிக்கப்பட்ட குடும்பங்களில் எஜமான், வேலைக்காரியென்றல்ல - மனைவியாகிய சகோதரி, நம் தோழி, நம் துணைவி, நம்மைப் பூரணப்படுத்துகிறவள், நமது உடன் வழியர் இருவரும் இணைந்து செயல்பட்டு, தேவன் தரும் குடும்பத்தைக் கட்டிக்காக்க வேண்டும். தோட்டத்தைப்(குடும்பத்தை) பண்படுத்தவும், காக்கவும் (ஆதி 2:15) தேவன் இவர்களை வைத்தார் என்பதை மறக்க வேண்டாம்.

**தேவன் கொடுத்த பிள்ளைகள்:-**

இந்த குடும்பத்தில் தேவன் நியமித்த பிள்ளைகள் உண்டு (சங் 127:4). ஒரு பிள்ளையும் இந்தக் குடும்பத்திலே பிறக்க

வேண்டும் என்று எண்ணி பிறக்கவில்லை. அது தேவனால் நியமிக்கப்பட்ட காரியம். தாவீது பெரும் யுத்தவீரன் இரத்தம் சிந்தினவன். ஆனால் சமாதான மகனாக தேவன் அவனுக்கு சாலொமோனைக் கொடுத்தார். தாவீது செய்த பாவங்களை உணரத்தக்க விதத்தில், தேவன் அவனுக்கு அப்சலோமை மகனாகக் கொடுத்தார். யோனத்தானுக்கு சப்பாணியான மகன் தேவன் கொடுத்தது.

எல்லாம் தேவன் நமக்கு தந்த பிள்ளைகள். நல்ல பிள்ளைகளும், கெட்டபிள்ளைகளும், பெலவீனமான பிள்ளைகளும், பெலமுள்ள பிள்ளைகளும், எல்லாருமே தேவன் தந்த பிள்ளைகள். இந்த பிள்ளைகள் நம் வீட்டை அழுக்காக்குவார்கள், திடீரென்று கூச்சல் போடுவார்கள், பல குறும்புகள் செய்வார்கள். வாலிபத்தின் சேட்டைகள் உண்டு, சில வேளை நம்மோடு பேசமாட்டார்கள். நன்றியில்லாமல் இருப்பார்கள். ஆனால் இவர்கள் தேவன் நமக்குத் தந்த பிள்ளைகள். இவர்களோடுச் சேர்ந்து நாம் தேவனை சேவிக்கப்போகிறோம். இவர்களது ஆத்மீக சரீர வாழ்விற்காக நம்மை செலவழிக்கப் போகிறோம். இவர்கள் வாழ்விலே நம்வாழ்வைக் காணப்போகிறோம். இவர்கள் நம்மோடு நித்திய ஜீவனை சுதந்தரிக்கப் போகிறார்கள். இவர்களே நமது பொக்கிஷம். ஒரு சமயத்தில் ஒரு ஐசுவரியமுள்ள குடும்பத்தைச் சேர்ந்த ஒரு தாய், ஒரு ஏழைத்தாயின் வீட்டிற்கு போயிருந்தாள். தன்னுடைய நகைகள், பொக்கிஷங்கள் எல்லாவற்றையும் குறித்து நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தாள். திடீரென்று அவள் அந்த ஏழை ஸ்திரீயைப் பார்த்து, ''நீ உன்னுடைய நகைகளை எனக்கு காட்டமாட்டாயா?'' என்று கேட்டாள். உடனே அவள் அமைதியாக எழுந்து தன் வீட்டிற்குள் சென்று, தன் இரு பிள்ளைகளையும் தன் இரு கையில் பிடித்துக்கொண்டு வந்தாள். மற்றவளிடம் இவைகளே என்னுடைய பொக்கிஷங்கள் என்று சொன்னாள். பிள்ளைகளைக் குறித்த இந்த அறிவு நமக்கு வேண்டும்.

**தேவன் ஏற்படுத்திய குடும்பம்:-**

தகப்பனும், தாயும், பிள்ளைகளும் யாவரும் தேவனும் நியமிக்கப்பட்ட குடும்பத்தில் உள்ளவர்களே. குடும்பத்தில் அவரவருக்கு தேவன் நியமித்த இடம் உண்டு அந்த இடத்தில் நின்று அவரவருக்கு நியமித்த கடமைகளை நிறைவேற்றும்பொழுது அக்குடும்பம் அழகாய் இருக்கும்.

இப்பொழுது நாம், நமது குடும்பங்களை கற்பனை செய்யப் போகிறோம். மனைவியைப்பற்றி பல குறைகளை சாத்தான் நினைக்கச் செய்யலாம். கணவனைப்பற்றி பல ஏமாற்றங்கள் நினைவுக்கு வரலாம். பிள்ளைகளைப்பற்றி பெருமூச்சுவரலாம். எல்லாவற்றையும் மறப்போம். தேவ வசனத்தை நினைப்போம். கர்த்தரை மையமாக வைத்து ஒரு அழகிய குடும்பத்தை நினைப்போம். யோசுவா பக்தனைப் போல் நானும், என் வீட்டாரும் என்று சொல்லுவோம். மறுபடியும் மறுபடியும் அதையே சொல்லி தியானிப்போம். நமக்கு ஒரு தலைவன், நமக்கு ஒரு தலைவி, நமக்கு பிள்ளைகள்-எல்லாம் கர்த்தர் தந்தது, நியமித்தது, ஒழுங்கு செய்தது அதன் நாயகராய் இருப்பது கர்த்தர். கர்த்தர்-தலைவன்-தலைவி-பிள்ளைகள். இதன் நடுவில் சந்தோஷம், சமாதானம் ஆசீர்வாதம். இது இன்று உங்களுக்குச் சொந்தம். விசுவாசித்து ஸ்தோத்திரியுங்கள். இந்த ஆசீர்வாதத்தை சுதந்தரியுங்கள். பேரம் தேசத்தை சுதந்தரித்துக் கொள்ளுங்கள்.

அத்தியாயம் 2

# இயேசுவை மையமாகக் கொண்ட குடும்பம்!

"குணசாலியான ஸ்திரீயைக் கண்டுபிடிப்பவன் யார்? அவளுடைய விலை முத்துக்களைப் பார்க்கிலும் உயர்ந்தது. அவள் புருஷனுடைய இருதயம் அவளை நம்பும்; அவன் சம்பத்து குறையாது. அவள் உயிரோடிருக்கிற நாளெல்லாம் அவனுக்குத் தீமையையல்ல, நன்மையையே செய்கிறாள்" (நீதி. 31:10-12).

ஒரு குடும்பத்திலுள்ள முதல் ஆளாக நான் மனைவியை குறித்தே பேச விரும்புகிறேன். நல்ல மனைவி வீட்டைக் கட்டுகிறாள் என்று வேதம் சொல்லுகிறது. "புத்தியுள்ள ஸ்திரீ தன் வீட்டைக் கட்டுகிறாள்; புத்தியில்லாத ஸ்திரீயோ தன் கைகளினால் அதை இடித்துப் போடுகிறாள்" (நீதி. 14:1). வீடு ஒரு ஸ்திரீக்கு மிக முக்கியமானது. அதுவே அவள் தொழில். உத்தியோகத்திலிருக்கும் ஸ்திரீக்குக்கூட தன் வீட்டு வேலை தன்னுடைய வேலையே.

சகோதரியே, நீ வீட்டைக் கட்டவேண்டுமென்று கருத்தாய் இருப்பாயாகுக! தேவனுடைய வார்த்தைக்கு செவி கொடுத்து; அவருடைய ஒவ்வொரு கற்பனைக்கும் கீழ்ப்படிய வேண்டும். வேதம் சொல்லுகிறது, "மனைவிகளே, கர்த்தருக்கேற்கும்படி உங்கள் புருஷருக்குக் கீழ்ப்படியுங்கள்" (கொலோ 3:18). அதாவது, மனைவிகளே தேவனைப் பிரியப்படுத்தும்படியாக உங்கள் புருஷருக்கு கீழ்ப்படியுங்கள். சுயநலமற்ற சேவையையும் குறைவற்ற உண்மையையும் இதுகாட்டுகிறது.

கணவனுக்கும் மனைவிக்குமுள்ள தொடர்பை, கிறிஸ்துவுக்கும் சபைக்கும் உள்ள தொடர்பாக வேதம் சொல்லுகிறது. கிறிஸ்து சபைக்கு தலையாயிருப்பது போல, புருஷன்

மனைவிக்குத் (குடும்பத்துக்கு அல்ல) தலையாய் இருக்கிறான் (எபே. 5:22-24). புருஷனும் மனைவியும் சிந்தனை, மனசாட்சி, அந்தஸ்து, சௌக்கியம், சுயாதீனம், மகிழ்ச்சி ஆகிய எல்லாவற்றிலும் சமமாயிருக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் இரண்டு பேரும் ஒன்றாயிருப்பார்களென்று வேதம் சொல்லுகிறது. தேவனுக்கு முன்பாக அவர்கள் சமத்துவமுடையவர்கள். வீட்டிலே அவர்கள் இரண்டு பேருக்கும் ஒரே அளவான அதிகாரம். ஆனால் வீட்டின் ஆளுகையில் வீட்டிற்கும், மனைவிக்கும் புருஷனே தலைவன்.

மனைவி தன் புருஷனுடைய உலகத்திற்குள் அமைந்து வாழ வேண்டும். ''உன் ஆசை உன் புருஷனைப் பற்றியிருக்கும், அவன் உன்னை ஆண்டுகொள்ளுவான்'' என்று ஆதி. 3:16-ல் கர்த்தர் சொன்ன வார்த்தையை அவர் இன்னும் மாற்றவில்லை. பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும், மனைவிகளே உங்கள் புருஷருக்கு கீழ்ப்படிந்திருங்கள் என்றே போதிக்கிறது. மனைவிகளே, கர்த்தருக்கு கீழ்ப்படிகிறது போல உங்கள் சொந்த புருஷருக்குக் கீழ்ப்படியுங்கள். கிறிஸ்து சபைக்கு தலையாயிருக்கிறது போல, புருஷனும் மனைவிக்கு தலைவனாயிருக்கிறான்; அவரே சரீரத்திற்கும் இரட்சகராயிருக்கிறார். ஆகையால் சபையானது கிறிஸ்துவுக்கு கீழ்ப்படிகிறது போல, மனைவிகளும் தங்கள் சொந்த புருஷர்களுக்கு எந்தக் காரியத்திலேயும் கீழ்ப்படிந்திருக்க வேண்டும். (எபே 5:22-24)...மனைவியும் புருஷனிடத்தில் பயபக்தியாயிருக்க கடவள் (எபே 5:3). அந்தப்படி மனைவிகளே உங்கள் சொந்த புருஷருக்கு கீழ்ப்படிந்திருங்கள் (I பேது. 3:1). மனைவிகளே......உங்கள் புருஷருக்கு கீழ்ப்படியுங்கள்.

(கொலோ. 3:1).

மேலே உள்ள வசனங்களில் மனைவிக்கு கொடுக்கப்பட்ட கட்டளைகளாக ஆறு வார்த்தைகள் வருகின்றன. 1. ஒப்புவித்து, கணவனுக்கு இசைந்து 2. தங்களை புருஷனுக்கு உட்படுத்தி 3. அடிமையாக கீழ்ப்படிந்து 4. கீழ்ப்படிதல் 5. பயபக்தி 6. அன்பு.

மனைவிகளாகிய உங்களுக்கு வேதம் சொல்லுகிறது என்ன வென்றால் இவைகளை நீங்கள் செய்யாவிட்டால் உங்கள் மூலம் தேவனுடைய நாமம் தூஷிக்கப்படுகிறது. உங்கள் ஜெபங்களுக்கு பதில் வராது (தீத்து 2:4,5; 1 பேதுரு 3:5, 6,7). இவைகள் எளிதானவைகள் அல்லவென்று நான் நன்றாக அறிந்திருக்கிறேன். ஏனெனில் புருஷர்கள் நல்ல கிறிஸ்தவர்களாக, நல் வாழ்க்கை செய்கிறவர்களாவும் இரா விடில், நாம் கீழ்ப்படிந்திருப்பது மிக சிரமம். ஆனால் நீங்கள் புருஷனுக்கு கீழ்ப்படிய வேண்டியது உங்களுடைய நிச்சய மான கடமையென்று வேதம் திட்டமும் தெளிவுமாய் போதிக்கிறது.

வேத புத்தகத்திலில்லாத சில நல் ஆலோசனைகளையும் மனைவிகளாகிய உங்களுக்கு சொல்ல விரும்புகிறேன். உங்கள் புருஷன் மாலையில் வீடு திரும்புகிறான். நீங்கள் பகல் முழு வதும் வேலைசெய்து களைத்து போனவர்களாக இருந்தாலும், வாசலில் போய் அவனை அன்புடன் வரவேற்றுப் பாருங் கள். இது வரையிலும் நீங்கள் செய்யாமல் இப்பொழுது நீங்கள் செய்யும் பொழுது, அது அவனுக்கு ஒரு அதிர்ச்சி யாக இருக்கும். ஆனாலும் பரவாயில்லை. சில மனைவிகள் சமையலறையில் இருந்த வண்ணமே, உள்ளே வந்து கதவை சாத்திவிடுங்கள் என்று சத்தம் போடுவார்கள். அதற்குப் பதிலாக நீங்கள் நல்லுடை அணிந்து, அவனை ஏன் வாசலில் போய் வரவேற்க கூடாது. நீங்கள் மிகவும் களைத்திருக் கிறீர்கள் என்று எனக்கு தெரியும். ஆனாலும் தன் மனைவி தன்னை வாசலில் வந்து வரவேற்று, அன்புடன் உபசரித்தால் கணவனுடைய உள்ளம் எவ்வளவு மகிழும்.

எந்த விலை கொடுத்தும் கணவனுடைய அன்பை விட்டு விலகாமல் உங்களை காத்துக்கொள்ளுங்கள். உங்கள் வாலிபத் தின் எளிமையையும், மென்மையும் இழந்துபோகவேண்டாம். கவர்ச்சியாக இருங்கள். அநேக மனைவிமார் தங்கள் புருஷ ருக்கு கவலையீனமாகவும், அருவருப்பாகவும், கசங்கிய வஸ்திரத்துடனும் பரட்டை தலையுடன் காட்சியளிக்கிறார்

கள். தங்கள் வீட்டை ஒழுங்காகவும், சுத்தமாகவும் வைக்கத் தவறுகிறார்கள். இதனால், அநேக கணவன்மார் தங்கள் வீட்டை இருதயத்தில் வெறுக்கிறார்கள். நீங்கள் அழகு ராணிமாராக இருக்கவேண்டுவதில்லை. ஆனால் உங்கள் சாதாரண முகத்தில் அன்பும், அமைதலும், ஆவியின் அழகும் வெளிப்படுமானால் எந்தப் பெண்ணும் தன் புருஷனுக்கு அழகுள்ளவளாகவே காணப்படுவாள்.

கொரியா யுத்தம் ஒரு வருடமாக நடந்து கொண்டிருக்கும் பொழுது, ஒரு ஸ்திரீ என் பிரசங்கத்தை கேட்டுவிட்டு, கொரியாவைப் பற்றி சொன்னீர்களே அங்கே என்ன நடக்கிறது என்று கேட்டாள். உலகம் எப்படியிருக்கிறது என்று அநேக ஸ்திரீகளுக்கு தெரியாது. உங்கள் கணவனை போல நீங்களும் சற்று அறிவை வளர்த்துக் கொள்ளுங்கள். கணவனுக்கும் மனைவிக்கும் பேசுவதற்கு விஷயமே இல்லை - ஊர் கதையை தவிர. அறிவான சம்பாஷணைகள் வரவேண்டுமானால் உலகத்தைப் பற்றியும், வேதத்தைப் பற்றியும் ஸ்திரீகளாகிய உங்களுக்கும் அறிவு வளர்ச்சியடைய வேண்டும். உங்கள் பிள்ளைகளுக்கு முன்பாக ஒரு நாளும் வம்புகளை பேச வேண்டாம். அவர்கள் வம்பு செய்கிறவர்களாக மாறுவார்கள். பல பெற்றோர் பிள்ளைகளுக்கு முன்பாக ஊழியர்கள், ஆசிரியர்களைப்பற்றி குறைவாக பேசுகிறார்கள். அப்படிப்பட்ட பெற்றோர் தங்கள் பிள்ளைகளுடைய படிப்பையும் ஆவிக்குரிய ஜீவியத்தையும் நாசம் பண்ணுகிறார்கள். அப்படியே உங்கள் முறுமுறுப்புகளும் உங்கள் வீடுகளை நாசம் பண்ணும்.

மதியற்ற ஸ்திரீ வாயாடியும் ஒன்றுமறியாத திர்மூடமுடாயிருக்கிறார்கள் (நீதி.9:13). மதிகேடாய் நடக்கிற அழகுள்ள ஸ்திரீ, பன்றியின் மூக்கிலுள்ள பொன் மூக்குத்திக்கு சமானம் (நீதி. 11:22). சண்டையோடு கூடிய வீடு நிறைந்த கொழுமையான பதார்த்தங்களைப் பார்க்கிலும் வெறும் துணிக்கையே நலம் (நீதி. 17:1). பகையோடிருக்கும் கொழுத்த எருதின் கறியைப் பார்க்கிலும் சிநேகத்தோடிருக்கும் இலைக்கறியே நல்லது (நீதி. 15:17). சண்டைக்

காரியும், கோபக்காரியுமான ஸ்திரீயுடன் குடியிருப்பதை பார்க்கிலும், வனாந்தரத்தில் குடியிருப்பது நலம் (நீதி. 21:19). சண்டைக்காரியோடே ஒரு பெரிய வீட்டில் குடியிருப்பதைப் பார்க்கிலும், வீட்டின் மூலையில் தங்கியிருப்பதே நலம் (நீதி. 21:9). அடைமழை நாளில் ஓயாத ஒழுக்கும், சண்டைக்காரியான ஸ்திரீயும் சரி. அவளை அடக்கப்பார்க்கிறவன் காற்றை அடக்கி, தன் வலது கையினால் எண்ணெயை பிடிக்கப் பார்க்கிறான் (நீதி. 27:15, 16).

நீங்கள் விரும்பினால், தேவனால் ஆசீர்வதிக்கப்பட்ட வீடு உங்களுக்கு அமையும். குடும்பத்தார் அனைவரும் சந்தோஷிப்பார்கள். அல்லது உங்கள் நாவினால் அந்த வீட்டை நாசமாகவும் மாற்றலாம். உங்களுக்கு உங்கள் வீடு முக்கியமானால் ஒரு வசனத்தைகூட நீங்கள் உங்கள் ஞாபகத்தில் கொள்ள வேண்டும். "வீடு ஞானத்தினாலே கட்டப்பட்டு விவேகத்தினாலே நிலைநிறுத்தப்படும்" (நீதி. 24:3). இந்த கடினமான காலத்தில் ஒரு தாயாகவும், மனைவியாகவும் இருப்பது மிக சிரமம். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் உதவியில்லாமல் நிச்சயமாக உங்கள் பொறுப்புகளை நிறைவேற்ற முடியாது. உங்கள் வாழ்க்கையை கர்த்தருக்கு ஒப்புக்கொடுத்து, ஒரு நல்ல தாயாய், மனைவியாய் மாறுங்கள். முற்றிலும் ஒப்புக்கொடுத்த ஒரு கிறிஸ்தவ மனைவி உங்கள் புருஷனுக்கு தேவை. ஒரு நல்ல கிறிஸ்தவ தாய் உங்கள் பிள்ளைகளுக்கு தேவை.

நான் என் தாயை நினைக்கும்பொழுது ஒரு அருமையான கிறிஸ்தவ அம்மாவை காண்கிறேன். அவர்கள் எவ்வளவாய் கர்த்தரை விசுவாசித்தார்கள் என காண்கிறேன். உங்கள் பிள்ளைகளில் சிலர் வீட்டைவிட்டு வெளியேற போகிறார்கள். அவர்கள் உங்களை எவ்விதம் நினைப்பார்கள். அன்பான தாய், ஜெபிக்கும் தாய், ஒழுங்காக ஆராதனையில் பங்கெடுக்கும் தாய், சுத்தமான தாய், அப்பாவை கனம் பண்ணும் தாய் — இயேசுவை போலுள்ள தாய் என நினைப்பார்களா? உங்களில் அவர்கள் இயேசுவை காண்பார்களா? ஒரு சகோதரி

இவ்விதமாய் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாள். "நான் என் புருஷனையும், என் பிள்ளைகளையும் குறித்து எப்பொழுதும் குறைவுபட்டுக் கொண்டிருந்தேன். என் வீட்டில் சந்தோஷம் இல்லை. ஏன் நான் திருமணம் செய்து கொண்டேன் என்று எண்ணினேன். இந்நிலையில் உங்கள் கூட்டத்திற்கு வந்து நான் எவ்வளவு கவலைக்காரி என்பதை கண்டேன். இம்மட்டும் நான் மற்றவர்கள் என்னை சந்தோஷப் பார்க்க வேண்டுமென்று எண்ணியிருந்தேன். இப்பொழுது இயேசு என்னை மாற்றினார். அவர்களை நான் சந்தோஷப்படுத்த விரும்புகிறேன். அவர்களும் என்னை சந்தோஷப்படுத்த தொடங்கிவிட்டார்கள். என் குடும்பத்தின் தோல்விக்கு நானே காரணம் என்பதை புரிந்து கொண்டேன்".

ஒரு வீட்டை நரகமாகவோ, மோட்சமாகவோ மாற்றும் பொறுப்பு ஸ்திரீயினுடையது. தங்கள் கணவன்மார்கள் குடிகாரர்களாகவும், துரோகிகளாகவும் இருந்த போதிலும் கூட தன் பிள்ளைகளுக்குத் தன் வீட்டைப் பரலோகமாக ஆக்கியிருக்கும் தாய்மாரை நான் அறிவேன். நீங்கள் வீட்டைக் கட்டும் குணசாலியான ஸ்திரீயா?

**புருஷர்களே:-**

"அந்தப்படி புருஷர்களே, மனைவியானவள் பெலவீனமான பாண்டமாயிருக்கிறபடியால், உங்கள் ஜெபங்களுக்குத் தடை வராதபடிக்கு, நீங்கள் விவேகத்துடனே அவர்களுடன் வாழ்ந்து, உங்களுடனே கூட அவர்களும் நித்திய ஜீவனுடைய கிருபையை, சுதந்தரித்துக் கொள்ள வேண்டியவர்களான படியால், அவர்களுக்குச் செய்ய வேண்டிய கனத்தைச் செய்யுங்கள்" (1 பேதுரு 3:7).

இன்றைய நாகரீகம் எக்காலமும் இல்லாத சுயாதீனத்தை பெண்களுக்கு வழங்கியிருக்கிறது. ஆயினும் சில இடங்களில், மனைவிகள் மந்தைகளாகவே மதிக்கப்படுகின்றனர். மனிதர் ஸ்திரீகளை மதித்தாலும், மதிக்காவிட்டாலும் தேவனுடைய ஒழுங்கு மாறாததாயிருக்கிறது. புருஷர்

களை தேவன் குடும்பத்தில் தலைவர்களாக நியமித்திருக்கிறார். சகோதரனே! தேவன் உன்னை குடும்பத்தின் தலைவனாக நியமித்திருக்கிறார். தலைவன் என்ற பொறுப்பை நீ நிறைவேற்ற விட்டால், நீ ஒரு கிறிஸ்தவனாகயிருக்கவில்லை. ஒரு ஸ்திரீ இந்த ஒழுங்கை எதிர்த்தால் அவள் தேவனுடைய சித்தத்திற்கு எதிர்த்து நிற்கிறாள். ஏனெனில், ''கிறிஸ்து சபைக்குத் தலையாயிருக்கிறது போல, புருஷனும் மனைவிக்கு தலையாயிருக்கிறான்; அவரே சரீரத்திற்கும் இரட்சகராயிருக்கிறார்'' (எபே. 5:23). ''நானும் என் வீட்டாருமோவென்றால் கர்த்தரையே சேவிப்போம்'' (யோசுவா 24:15). புருஷன் வீட்டிலே தேவனுடைய பிரதிநிதி என்று வேதம் போதிக்கிறது. ஒரு புருஷன் என்ற முறையில் குடும்பத்தின் தலைவனாயிருப்பது மிக பயங்கரமான பொறுப்பு.

புருஷன் குடும்பத்தை போஷிக்கிறவனும், காப்பாற்றுகிறவனும் என்று வேதம் சொல்லுகிறது. ஒருவன் தன் சொந்த குடும்பத்தை நடத்த தவறி விட்டால் அவன் அவிசுவாசியிலும் கெட்டவனாயிருக்கிறான் (1 தீமோ 5:8). பல புருஷர்கள் தன் வீட்டை மறந்து விட்டு பல்வேறு அலுவல்களில் சிக்கிக் கொள்ளுகிறார்கள். தான் ஒரு புருஷன், தகப்பன் என்பதை மறந்து விட்டு பணம் சம்பாதிப்பதிலேயே தன் பொழுதை கழிக்கின்றனர். கர்த்தர் கணக்கு கேட்பார். புருஷன் தன் மனைவியைக் கனம்பண்ண வேண்டுமென்று வேதம் சொல்லுகிறது. நீங்கள் அப்படி கனம்பண்ணுகிறீர்களா என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். உங்கள் அன்பை எவ்வளவாகிலும் வெளிப்படுத்தியிருக்கிறீர்களா?

உங்கள் மனைவி உங்களிடத்தில் எதிர்பார்ப்பது பெரிய காரியங்களையல்ல; அன்பை வெளிப்படுத்தும் சிறு காரியங்கள்தான். ஒரு மனிதன் என்னிடம் வந்து தன் மனைவிக்கு ஒரு கார் வாங்கி கொடுத்திருக்கிறேன். வேறு என்ன வேண்டுமானாலும் வாங்கிக் கொடுக்கிறேன். இதற்கு மேல் அவளுக்கு என்ன வேண்டும்? என்று கேட்டான். அவளுக்கு வேண்டியவை இவை அல்ல; அவளை நினைவில் வைத்து

செய்ய வேண்டிய சிறிய காரியங்களே. நீங்கள் அலுவலகத்தில் இருக்கும்பொழுது வீட்டிலிருக்கும் உங்கள் மனைவியோடு தொலைபேசி மூலம் அன்பாக ஒரு வார்த்தை பேசுங்கள். தூரத்திலிருந்தால் ஒரு கடிதம் போடுங்கள். நானெதாகிலும் உனக்கு உதவி செய்யவேண்டியது உண்டா என்று கேளுங்கள். உங்கள் அன்பைவெளிப்படுத்துங்கள். அவள் என்றும் இளமையாக இருக்க அவளுக்கு உதவுங்கள். பாரங்களை சுமப்பதற்கு துணை நில்லுங்கள்.

பிசினித்தனம் காட்டாமல், அவள் செலவு செய்ய கொஞ்சம் காசு கொடுங்கள். ஆனால் சில புருஷர்கள் ஒவ்வொரு காசுக்கும் கணக்கு கேட்பார்கள். உங்கள் மனைவி ஊதாரியாக இருக்கக் கூடாது என்பது உண்மைதான்; ஆனால் அதற்காக அவளை அடிமையாகவும் மாற்றக்கூடாது. நீர் உண்மையான கிறிஸ்தவ தலைவனாக குடும்பத்திலே நடந்து கொண்டால், மதிகெட்ட ஸ்திரீகள் மாத்திரம் தான் உங்களை வஞ்சிப்பார்கள். உங்கள் மனைவியுடன் மதிப்புடனும், ஜாக்கிரதையுடனும், அனுதாபத்துடனும் நடந்து கொள்ள வேண்டியது அவசியம். திருமணத்தோடு அவளுடைய முழுவாழ்க்கையும் உங்களுக்கு சொந்தமாயிற்று. ஆகையால் குடும்ப வாழ்க்கை அவளுக்கு மிகவும் இன்றியமையாதது. உங்களுக்கோ உங்கள் சொந்த தொழில், உங்கள் அலுவலகம் இன்னும் எத்தனையோ காரியங்கள் உண்டு. ஆனால் மனைவிக்கோ வீடு தான் உண்டு. இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

''புருஷர்களே, உங்கள் மனைவிகளில் அன்பு கூருங்கள்... அப்படியே, புருஷர்களும் தங்கள் மனைவிகளை தங்கள் சொந்த சரீரங்களாக பாவித்து, அவர்களில் அன்பு கூர வேண்டும்... எப்படியும், உங்களிலும் அவனவன் தன்னிடத்தில் அன்பு கூருவது போல, தன்னுடைய மனைவியிடத்திலும் அன்பு கூர கடவன்; மனைவியும் புருஷனிடத்தில் பயபக்தியாயிருக்க கடவள்'' (எபே 5:25, 28; 33).

ஒரு நல்ல திட்டத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். திருமண நாளில் நீங்கள் கொடுத்த வாக்குறுதிகளை வருடா வருடம் புதுப்பித்துக் கொள்ளுங்கள். உங்களில் சிலருக்கு இது ஞாபகம் கூட இருக்காது. திருமண நாளில் புருஷனும் மனைவியும் ஒருவருக்கொருவர் உடன்படிக்கை பண்ணிக் கொண்டதும் மாத்திரமல்ல, சபையோடும், தேவனோடும் கூட உடன்படிக்கை பண்ணிக்கொண்டார்கள். அந்த உடன் படிக்கை, தேவனுக்கு முன்பான பரிசுத்த உடன்படிக்கை. ஆகவே தேவனுடைய பார்வையில் உங்கள் விவாகம் மிகவும் புனிதமானது. ஒரு ஆணாலும், பெண்ணாலும் அந்த உடன்படிக்கையை மீறினால் மிக கடுமையான பாவம் செய் கிறார்களென்று வேதம் சொல்லுகிறது. தேவன் அவர்களை நியாயம் தீர்ப்பார். நரகம் அப்பேர்ப்பட்டவர்களால் நிறைந் திருக்கும். ஆண்டவரிடம் கேட்டு மன்னிப்பை பெற்றுக் கொள்ளுங்கள். உங்கள் குடும்பத்தின் ஆவிக்குரிய வாழ்க்கை யின் கணக்கைப் புருஷனும், தகப்பனுமாகிய உங்களிடமே கர்த்தர் கேட்பார். உங்கள் குடும்பத்தில் அனுதின ஜெபம் உண்டா? உங்கள் குடும்பத்தில் அனுதின வேதம் வாசிப்பு உண்டா? சாப்பிடும் பொழுது ஜெபிக்கிறீர்களா? இவைகளை செய்யாவிட்டால் தேவன் உங்களை நியாயத்தில் கொண்டு வந்து நிறுத்துவார். நீங்கள் உங்கள் குடும்பத்திற்கு தேவ னுடைய பிரதிநிதி. நீங்கள் உங்கள் குடும்பத்திற்கு ஊழியக் காரன். குடும்ப ஆராதனையை நீங்கள் நடத்தாவிட்டால் கர்த்தர் நிச்சயமாக உங்களிடம் கணக்கு கேட்கப்போகிறார்.

எத்தனையோ பல அருமையான சகோதரிமார் குடும்பத் தின் ஆவிக்குரிய பொறுப்புகளை எடுத்திருக்கிறார்கள். புருஷன் ஞாயிற்றுக்கிழமை ஆலயத்திற்கு செல்வான். ஆலயத்தின் பல பொறுப்புகளையும் வகிப்பான். ஆனால் குடும்பத்தில் தேவனுடைய மனுஷன் என்ற நிலையில் செய்ய வேண்டிய கடமைகளை செய்யமாட்டான். ஒரு சபையில் பொறுப்பு எடுக்க வேண்டியவன் எப்படிப்பட்டவனாயிருக்க வேண்டு மென்று வேதம் சொல்லுகிறது. ''தன் சொந்தகுடும்பத்தை நன்றாக நடத்துகிறவன்'' (I தீமோ. 3:4,5).

ஒருவேளை மனைவியைப் பார்த்து, நம்முடைய வீட்டில் குடும்ப ஜெபம் நடத்தவேண்டுமென்று சொல்வதே உங்களுக்கு கஷ்டமாயிருக்கலாம். ஏனென்றால் குடும்ப ஜெபம் பண்ணி வருடங்கள் பலதாகிவிட்டது. அதை கவலையீனமாக விட்டுவிட்டீர்கள். கடந்து போன நாட்களை நினைக்க வேண்டாம். மறுபடியும் முயற்சியெடுங்கள். குடும்ப ஜெபத்தை ஆரம்பியுங்கள். அது உங்கள் குடும்பத்தில் எவ்வளவு மாற்றத்தை கொண்டு வருகிறது என்பதை கவனியுங்கள். அது உங்கள் பிள்ளைகளிடத்தில் மாற்றத்தை கொண்டு வரும்.

உங்கள் வேதத்தை திறந்து ஒரு சங்கீதத்தை வாசித்து, ஒரு எளிய ஜெபம் செய்யுங்கள். அது உங்கள் வாழ்க்கையில் எவ்வளவு பெரிய மாற்றத்தை கொண்டுவருமென்று நீங்களே கண்டு கொள்ளலாம். குடும்ப ஜெபத்தினால் தீர்க்க முடியாத பிரச்சனை உங்கள் குடும்பத்தில் இருக்கவே முடியாது. உங்களுக்கு என்ன பிரச்சனை இருக்கிறது என்று எனக்குத் தெரியாது. எவ்வளவு பெரிய போராட்டத்தில் வைக்கப்பட்டிருக்கிறீர்கள் என்று நான் அறியேன். ஆனால் உங்கள் குடும்பத்தை கர்த்தரின் கையில் ஒப்புக்கொடுங்கள். அவர் உங்கள் குடும்பத்தின் தலைவராக இருக்கட்டும். உங்கள் பிள்ளைகளை ஓய்வுநாள் பள்ளிக்கு அனுப்பவேண்டாம், நீங்களே கூட்டிக்கொண்டு போங்கள். உங்கள் பிள்ளைகளுக்கு மாதிரியாக நீங்கள் போங்கள். நீங்கள் எல்லாவற்றிலும் பிள்ளைகளுக்கு மாதிரியாயிருங்கள். முந்தின நாட்களில் ஆலயங்கள் இல்லை, ஓய்வு நாள் பள்ளிகள் இல்லை. வெளிப்பிரசங்கங்கள் இல்லை. வீடுதான் சபையாகவும், ஞாயிறு பள்ளியாகவும் அன்று இருந்தது. இன்றும் பொறுப்பு மாறிவிடவில்லை. ஆகையால் என் அருமை சகோதரர்களே, நீங்கள் நல்ல புருஷர்களாய், நல்ல தகப்பன்மாராய், நல்ல தலைவர்களாய், தேவபிரதிநிதிகளாய், செயல்படுங்கள். கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார்.

## அத்தியாயம் 3

# மாதிரிக் குடும்பம்!

சங்கீதம் 128-ஐ படியுங்கள்; இதை வாசிக்கும் பொழுதே இக்குடும்பத்தை கற்பனை செய்யுங்கள். இப்பேர்ப்பட்ட குடும்பத்தைக் கர்த்தர் தர வாஞ்சியுங்கள். ஜெபியுங்கள்.

இந்த சங்கீதத்தில் ஒரு மனிதன் தான் கதா பாத்திரம். இதில் "..........நடக்கிறவன் எவனோ..........பாக்கியவான்..........நீ..........உனக்கு..........உன் மனைவி..........உன் வீடு..........உன் பிள்ளைகள்..........உன் பந்தி.......... உன்னை ஆசீர்வதிப்பார்..........நீ ஜீவனுள்ள நாளெல்லாம்.......... நீ உன் பிள்ளை.........." என வார்த்தைகள் வருவதைக் காண்கிறோம்.

இந்த மனிதன் தான் குடும்பத் தலைவன். அவனைத் தேவன் தன் ஆளாகப் பார்க்கிறார். தனக்கும் உலகிலுள்ள குடும்பங்களுக்கும் இணைப்பாக ஆசாரியனாகக் கர்த்தர் காண்கிறார். இவன் தேவனுடைய பார்வையிலும், மனிதர் பார்வையிலும், குடும்பத்தின் பார்வையிலும் மிகவும் உயர்ந்தவன். இவன் கர்த்தருக்குப் பயந்தவன் - நோவாவைப் போல, ஆபிரகாமை போல, பரிசுத்தவான்களைப் போல, கர்த்தருக்குப் பயப்படுகிற மனுஷன், மெய்யாய் ஆசீர்வதிக்கப்பட்டவன். இவன் பயப்படுகிறவன் மாத்திரமல்ல, அவர் வழியில் நடக்கிறவன். தன் குடும்பத்தை நடத்துகிறவன்.

ஆராதனைகளில் பங்கெடுப்பதில், கர்த்தரின் சேவையில், குடும்பத்தை வேத சத்தியத்திலே நடத்துவதில் முன்நின்றுநிற்கிறான். மனைவி, பிள்ளைகளைப் போஷித்துக் காப்பாற்றுகிறான். அவர்களை நேசித்துப் பராமரிக்கிறான். கர்த்தருக்கேற்ற சிட்சையிலும், போதனையிலும் நடத்துகிறான் உங்கள் கற்பனையில் இவர் மலைபோல் உயர்ந்து நிற்கிறார் அல்லவா?

இப்பொழுது இவர் பக்கத்தில் நிற்பது யார் என்று கவனியுங்கள். இவள் தான் அவரது வாழ்க்கைத் துணை.

அவள் தன் ஆசையை அவன் பேரிலேயே வைத்திருக்கிறாள். அவள் நேசிக்கப்படத்தக்க பெண்மானும், அவரைத் திருப்திப்படுத்தும் மாதும் ஆகிறாள். தேவனால் அருளப்பட்டவள். அவள் தன் கணவனுக்கு எல்லாக் காரியத்திலும் கீழ்ப்படிந்திருக்கிறாள். அவரைத் திருப்தி செய்வதிலும், சந்தோஷப்படுத்துவதிலும் கருத்தாய் இருக்கிறாள். கணவனை ஒருவர் புகழ்த்தும் பொழுது தன்னையே புகழ்த்துவதாக எண்ணி மகிழ்கிறாள். கணவனின் வாழ்வில் தன் வாழ்வைக் காண்கிறாள். அவளது ஊற்றின் தண்ணீர் தெருவிலே பாய்வதில்லை. அது அவள் கணவனுக்கே உரியது. அவள் அழகிய கனிகளைக் கொடுக்கிறாள்.

அநேக ஏழைகள் வந்து பலன் பெறுகிறார்கள். பிள்ளைகளைக் கருத்தாய் வளர்க்கிறாள். விருந்தினரை உபசரிக்கிறாள் கணவன் அவள் நிமித்தமாய் சந்தோஷப்படுகிறான். அவள் அவன் வீட்டோரங்களின் கனி தரும் திராட்சைச் செடி. திராட்சை ரசம் சந்தோஷத்தைத் தரும். அவள் அந்த வீட்டின் மகிழ்ச்சி; புருஷனுடைய இருதயம் அவளை நம்புகிறது. ஏழைகள் அவளை வாழ்த்துகிறார்கள். அவள் பிள்ளைகள் தாயை நினைத்து மகிழுகிறார்கள். ''அவளே'' எங்கள் அம்மா பாக்கியவதி என்கிறார்கள். புருஷன் அவளைக் குணசாலி என வாழ்த்துகிறான். அநேக வாசல்கள் (வீட்டார்) அவளைப் புகழ்ந்து. தங்கள் வீடுகளிலிருந்து அவளைப் புகழுகிறார்கள். அவளும் தன் வருங்காலத்தைப் பற்றி மகிழுகிறாள்.

அவர் பிள்ளைகள், அவரது பந்தியைச் சுற்றிலும் வளருகிறார்கள். அதற்குரிய பருவம் வரும் வரையிலும் அப்பாவுக்குக் கீழ்ப்படிந்து வளருகிறார்கள். அப்பாவுடைய விசுவாசத்தில் வளருகிறார்கள். ஒருவனாகிலும் வேசிக் கள்ளனாக, சினிமாப் பிரியனாக, துன்மார்க்கனாக வாழவில்லை. ஏற்றக் காலத்தில் இரட்சிக்கப்பட்டு, திருமுழுக்குப் பெற்று, அப்பாவுடனும், அம்மாவுடனும், குடும்ப ஜெபத்திலும், ஆராதனையிலும், ஊழியத்திலும் பங்கெடுக்கிறார்கள். ஒரே திருவிருந்து பந்தி

யில் பங்கெடுக்கிறார்கள். வீதியிலே போகும்பொழுது அவருடைய பிள்ளைகளைப் பற்றி புகழ்ந்து பேசுகிறார்கள், அவரது முகம் பிரகாசிக்கிறது. ஆகவேதான் அவர்களை ஒலிவ மரக்கன்றுகள் என்று வேதம் சொல்லியிருக்கிறது. உன் பந்தியைச் சுற்றிலும் ஒலிவ மரக்கன்றுகள், இந்தக் குடும்பம் உண்மையாகவே ஒரு மாதிரிக் குடும்பம்தான். இந்த மனிதன் பாக்கியவான்தான். இந்த மனைவி பாக்கியம் செய்தாள். இவர்கள் யார்? ... ... நீங்கள்தான். இந்தக் குடும்பத்தின் பிரயாசங்களை வைத்தியர்களும், வக்கீல்களும், காவல் துறையும், மதுக்கடையும், மருந்துக்கடையும், லஞ்சக்காரனும் சாப்பிட மாட்டார்கள். இக்குடும்பத்தார் சாப்பிடுவார்கள். கர்த்தருடைய ஊழியம் அவர்களால் வளரும். ஏழைகள் முகங்கள் அவர்கள் நிமித்தம் பிரகாசிக்கும்.

அவள் காண்பது ... ... எருசலேமின் வாழ்வு. பிள்ளைகள் மாத்திரமல்ல, பிள்ளைகளின் பிள்ளைகளை — ஒரு சந்ததியை உத்தம குடும்பத்துக்கு ஒரு சந்ததியுண்டு. கர்த்தர் அக்குடும்பத்தை மேய்ப்பார். அங்கே ஆசீர்வாதத்தையும், நன்மையையும் கர்த்தர் கட்டளையிடுவார். ஆமென்!

நீங்கள் இந்தக் குடும்பத்தில் அங்கம்தானா? ஒருவேளை நான் இப்பேர்ப்பட்ட தலைவனாக இல்லையே என்று ஏங்குகிறீரா? உம் ஏக்கத்தையும் தீர்க்கும் கர்த்தர் இப்பொழுது உம் அருகில் நிற்கிறார்.

நான் இப்பேர்ப்பட்ட மனைவியாக இல்லையே என எண்ணுகிறீர்களா? கலங்காதே! கர்த்தர் உன் அருகில் இருக்கிறார். இன்று உனக்குக் கர்த்தர் உதவி செய்வார்.

உங்கள் குடும்பத்தின் ஆசீர்வாதத்திற்கு நீங்கள் தடையாக இருக்கலாம். ஒரு வசனத்தை நினைவுக்கு கொண்டு வருவோம் (II தீமோ. 1:12). நான் அவரிடத்தில் ஒப்புக்கொடுத்ததை அவர் அந்த நாள் வரைக்கும் காத்துக்கொள்ள வல்லவராயிருக்கிறார். இந்நேரத்திலேயே

ஜெபத்துடனும், ஸ்தோத்திரத்துடனும் உங்களையும், உங்கள் குடும்பங்களையும் கர்த்தரிடத்தில் மனப்பூர்வமாய் ஒப்புக் கொடுத்து ஜெபித்து ஸ்தோத்திரியுங்கள்.

நீங்கள் ஒரு மாதிரித் தலைவனாக, மனைவியாக, பிள்ளைகளாக இருக்கவில்லை என்பதை ஒத்துக்கொள்ளுங்கள். புதிதாக ஒரு விசை ஒப்புக்கொடுங்கள். கர்த்தர் ஆசீர்வதிப்பாராக. ஆமென்!

ஜெபம் :- எங்கள் அன்புள்ள ஆண்டவரே, காலா காலங்களில் குடும்பங்களைக் கட்டி எழுப்பி பாதுகாத்தவரே, எங்கள் குடும்பத்தை ஒரு மாதிரிக் குடும்பமாக ஆக்க வாஞ்சித்து ஜெபிக்கிறேன். நான் என் பொறுப்பில் மிக தவறியிருக்கிறேன் என்பதை ஒத்துக் கொள்ளுகிறேன். அதற்காக கண்ணீருடன் மன்னிப்புக் கேட்கிறேன். இன்று உம்மிடத்தில் ஒப்புககொடுக்கும் என்னையும், என் குடும்பத்தையும் நீர் ஒரு மாதிரிக் குடும்பமாக அமைத்து காக்கிறதற்காக உம்மைத் துதிக்கிறேன். உம்மிடத்தில் ஒப்புவித்ததை நீர் அப்படியே செய்வீர். உம்மைத் துதிக்கிறேன்.

இயேசுவின் நாமத்தில் ஆமென்! ஆமென்!!

## அத்தியாயம் 4

# கிறிஸ்தவ குடும்பம் பரலோகத்தின் வாசல்!

கிறிஸ்தவ வீடு பயணிகள் தங்கும் விடுதியல்ல: அது கிறிஸ்துவின் குணங்கள், கோட்பாடுகள், சத்தியங்கள் கற்றுக்கொடுக்கப்படும் ஒரு கல்விக் கூடம். கிறிஸ்தவ வீடு, பசியைப் போக்கும் உணவகமல்ல; அது இயேசுவின் அன்பும், பண்பும் குடியிருக்கும் ஒரு அன்புப்பாசறை. கிறிஸ்தவ இல்லம் பரலோக வாசல். பரலோக பயணிகளுக்கு பயிற்சியளிக்கும் ஒரு பணித்தளம் என்று கூறினால் மிகையாகாது. வெறும் செங்கல்லினாலும், சாந்து (சிமெண்ட்) வினாலும் கட்டப்பட்ட நமது வீடுகள், கிறிஸ்துவின் அன்பு என்னும் சாந்துவினால் பிணைக்கப்பட்ட குடும்பத்தினர் ஒவ்வொருவரும் ஜீவனுள்ள கற்களாக மாறி, தேவன் தாபரிக்கும் ஸ்தலமாக இருக்கும்போது, அந்த வீடுகள் இல்லங்களாக மலர்கின்றது. குடும்பங்கள் கட்டிக்காக்கப்படும் போது, சபைகள் பலப்படுகிறது. நாட்டில் சுபிட்சம் நிலவுகிறது.

ஒரு பெரிய தனவந்தன், புகழ்வாய்ந்த ஓவியர், வர்ணந் தீட்டிய இயேசுவின் படத்தை அதிக விலைகொடுத்து வாங்கினார். அப்படத்தை வீட்டிலே மாட்டுவதற்கு முயற்சித்த போது, சரியான இடம் கிடைக்காமல் திண்டாடினார். உடனே ஒரு கட்டிடக் கலைஞனை அழைத்து ஆலோசனை கேட்டார். அவன் வந்து அந்தப் பணக்காரரின் பங்களாவின் சுவர், அறைகள் அனைத்தையும் ஆராய்ந்து பார்த்தான். இறுதியாக அந்தக் கட்டடக் கலைஞன், அந்த தனவந்தரைப் பார்த்து, ''ஐயா, இந்த இயேசுவின் வர்ணப் படத்தை வீட்டில மாட்டினால் பொருத்தமாயிருக்காது; அப்படி இப்படத்தை பொருத்த விரும்பினால், அதற்கு ஏற்றப்படி உங்கள் வீட்டை மாற்றியமைத்துக் கட்டுங்கள்"

என்று கூறிவிட்டு போய்விட்டாளும். ஆம்! இயேசு நம் வீட்டில் தங்க வேண்டுமானால் நமது வீட்டை நாம் சரிசெய்ய வேண்டும். தேவன் விரும்பும் குடும்பம் எப்படி இருக்க வேண்டும் என்பதை இக்கட்டுரையில் சிந்திப்போம்.

**கணவன்:-**

தேவன் விரும்பும் குடும்பத்தில் நாம் முதலில் சந்திப்பவர் கணவனும், தகப்பனுமாயிருக்கிற குடும்பத்தலைவன். இவரது கடமையை முதலாவது சிந்திப்போம்.

கிறிஸ்து சபைக்கு தலையாயிருக்கிறது போல, புருஷனும் மனைவிக்கு தலையாயிருக்கிறான். "ஒவ்வொரு புருஷனுக்கும் கிறிஸ்து தலையாயிருக்கிறாரென்றும், ஸ்திரிக்கு புருஷன் தலையாயிருக்கிறானென்றும், கிறிஸ்துவுக்கு, தேவன் தலையாயிருக்கிறாரென்றும் நீங்கள் அறியவேண்டுமென்று விரும்புகிறேன்" *(I கொரி 11:3).*

**புருஷன் மனைவிக்கு தலையாயிருக்கிறான்**

மனைவிக்குப் புருஷன் தலையாயிருக்கிறான் என்று சொன்னவுடனே ஆணுக்குப் பெண் அடிமையா என்ற கேள்வி அநேகரது உள்ளங்களில் எழுகிறது. ஆனால் மேலே கொடுக்கப்பட்ட வசனத்தை சற்று ஆராய்ந்து பார்த்தால் இந்த கேள்வி எழ வேண்டிய அவசியமில்லை. I கொரி 11:3ன் வசனத்தின்படி, கிறிஸ்துவுக்குத் தேவன் தலையாயிருப்பது போல, ஸ்திரிக்கு புருஷனும் தலையாயிருப்பான். இதிலிருந்து புருஷனுக்கு ஸ்திரீயானவள் அடிமையென்று விளக்கம் கொடுப்போமானால், கிறிஸ்துவும் தேவனுக்கு அடிமையென்று சொல்வோமா? நிச்சயமாக இல்லை. திரித்துவத்தில் தேவனும் கிறிஸ்துவும் சமம் என்பதை நாம் அறிவோம். தேவனுடைய பார்வையில் ஆண்—பெண் இருவருடைய ஆத்துமாவும், இரட்சிப்பும் சமத்துவம் வகிக்கிறது. கிறிஸ்து சபைக்கு தலையாயிருக்கிறது போல புருஷனும் மனைவிக்கு தலையாயிருக்கிறான்.

இங்கு குடும்பத் தலைவனை கிறிஸ்துவுக்கும், குடும்பத்தை சபைக்கும் ஒப்பிட்டிருப்பதை பார்க்கிறோம். கணவன் குடும்

பத்திற்கு ஒரு பிரதான ஆசாரியனைப் போல இருப்பதை விளக்குகிறது. குடும்பத்தின் குற்றங்களுக்காக ஆண்டவரிடத்தில் பரிந்து பேசுவான். குடும்பத்தினர்கள் ஆண்டவருக்கு கனத்தையும், மகிமையையும் செலுத்தத் தவறும்போது, அதைக் கண்டித்துணர்த்துவதும் கணவனது கடமை. சுருங்கச் சொல்லின் குடும்பத்தினருக்காக ஆண்டவரிடத்திலும், ஆண்டவருக்காக குடும்பத்தினரிடத்திலும் பரிந்து பேசுவது குடும்பத் தலைவனின் பொறுப்பு.

தீர்மானம் எடுக்கும் பொறுப்பு:-

குடும்பத்தலைவனின் இன்னொரு பொறுப்பு தீர்மானம் எடுப்பது. எந்த குடும்ப விஷயத்திலும் கணவனும் மனைவியும் சேர்ந்து ஆலோசித்து தீர்மானம் எடுக்க வேண்டும். மனைவியின் அறிவான ஆலோசனைகளை கணவன் அலட்சியம் பண்ணாமல் மதிக்க வேண்டும். இதில் இருவருக்கும் நேர்மையான கருத்து வேறுபாடுகள் ஏற்படும்போது, கணவன் தான் இறுதியான தீர்மானம் எடுக்க வேண்டும் என்று தேவன் விரும்புகிறார்.

மனைவி ஒரு பலவீனமான பாண்டம் —பெண் புத்தி பின் புத்தி என்பதையும் நாம் நினைவில் வைக்க வேண்டும் என்று தேவன் விரும்புகிறார். குடும்பத்தில் எடுக்கப்படும் ஒவ்வொரு தீர்மானத்திற்கும் அதனுடைய விளைவிற்கும் கணவன் தான் முழுப்பொறுப்பு, இது தான் தேவனுடைய திட்டம். இதை உணராமல் இன்றைக்கு அநேக கணவன்மார்கள் தீர்மானம் எடுக்க பயந்து, அதை தங்கள் மனைவியினிடத்தில் ஒப்படைக்கும் போது, தேவன் தங்களுக்குக் கொடுத்த பொறுப்பை உதாசீனம் செய்து உதறி தள்ளுகிறார்கள். பின்பு அதன் மூலமாக வரும் விளைவிற்காக தங்கள் மனைவியுடன் சண்டை போடுகிறார்கள். குடும்பத்தின் தீர்மானங்களை புருஷனுக்குப் பதிலாக அவனது மனைவியோ, அல்லது வேறு உறவினர்களோ எடுக்க முயற்சிப்பது, இல்லத்தலைவனின் உரிமையைப் பறித்து, தேவன் தனக்கு நியமித்துள்ள கடமையை அவன் செவ்வனே நிறைவேற்றவிடாமல் தடுப்பதற்கு

சமானம். அப்படி குடும்பத் தலைவனின் உரிமை பறிபோகும் போது அக்குடும்பத்தின் சமாதானமும், மகிழ்ச்சியும் பறி போவது ஆச்சரியமில்லை.

**மனைவியினிடத்தில் அன்பு கூருங்கள்:-**

''புருஷர்களே உங்கள் மனைவிகளில் அன்பு கூருங்கள்''
(எபே.5:25).

''புருஷர்கள் தங்கள் மனைவியின் மேல் மாயமற்ற உண்மை யான அன்பு செலுத்தும்போது, மனைவி கணவனின் அதிகா ரத்திற்கு அடங்கி நடப்பதில் எந்தப் பிரச்சனையும் இராது" இதை பவுல் அப்போஸ்தலன் கிறிஸ்து சபையின் மேல் வைத்த அன்பிற்கு ஒப்பிட்டு எழுதுகிறார்'' (எபே. 5:2).

''நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித் ததிலே, தேவன் நம்மேல் வைத்த தமது அன்பை விளங்கப் பண்ணினார்" (ரோ.5:8).

எபேசியர் 5:25ம் வசனத்தை திருப்பி நோக்குவோம்.

''புருஷர்களே உங்கள் மனைவிகளில் அன்பு கூருங்கள் அப்படியே கிறிஸ்துவும் சபையில் அன்பு கூர்ந்து தம்மைத் தாமே அதற்காக (சபைக்காக) ஒப்புக் கொடுத்தார்''
(எபே. 25:5-27).

கணவன் தன் மனைவிக்காக தியாகம் செய்யவும், ஏன் தன் ஜீவனைக் கொடுக்கவும் ஆயத்தமாயிருக்க வேண்டும் என்று வேதம் கூறுகிறது. மார்ஸ் செருல்லா என்ற உலகப் பிரசித்தம் பெற்ற ஊழியக்காரர், ஆபிரகாமின் மனைவியை கேராரின் ராஜாவாகிய அபிமெலேக்கு ஆள் அனுப்பி, தன்னுடைய அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு வந்த சம்பவத்தைப் பற்றி (ஆதி. 20;2) விளக்கும்போது, அவர் உணர்ச்சியோடு கூறும் வார்த்தைகள்: ''ஆபிரகாமின் மனைவியைக் கேட்டது போல யாராவது என்னிடத்தில் வந்து உன் மனைவியைக் கொடு என்று கேட்டால் கம்பியை எடுத்து அவனை நையப் புடைத்து விரட்டாமல் விடமாட் டேன். ஒருவேளை ஒருபடையே வந்தாலும் என் செத்த

பிணத்தைக் கடந்துதான் என் மனைவியை அவர்கள் தொட முடியும்" என்று சொல்லுவார்.

தங்கள் மனைவிக்காக உயிரைக் கொடுக்க வேண்டிய சூழ்நிலை அவர்களுக்கு வராவிட்டாலும், தங்களது அன்பை வெளிப்படுத்த அனுதின வாழ்க்கையில் அடிக்கடி அநேக சந்தர்ப்பங்கள் வருவதை நாம் மறந்துவிடக்கூடாது. மனைவி சுகவீனமாய்ப் படுத்திருக்கும் சமயங்களிலும் உதவி செய்து உங்கள் அன்பை வெளிப்படுத்தலாம். மனைவிக்கு சமைய றையில் நீங்கள் உதவி செய்வதற்கு நீங்கள் சமையலறைக் கலைஞராக இருக்க அவசியமில்லை. உங்கள் மனைவி உங்க ளுக்கு உதவி செய்வதற்காக நீங்கள் பாராட்டி எவ்வளவு நாளாயிற்று?

**கணவன் தான் ஒப்புரவாவததற்கு முந்த வேண்டும்:-**

தேவனுக்கும்-மனிதனுக்கும் (சபை) இடையில் முறிவு, பிளவு ஏற்பட்டபோது, ஒப்புரவாகுவதற்கு ஏதுவான காரி யங்களை முதலில் ஆரம்பித்தவர் ஆண்டவர். அதே போல கணவனுக்கும் (தேவனுக்கும் ஒப்பனை) மனைவிக்கும் (சபைக்கும் ஒப்பனை) இடையில் பிணக்கு, மனக்கசப்பு ஏற் பட்டால் அதில் ஒப்புரவாகுவதற்கு, கணவன் தான் அடியை எடுத்து வைக்க வேண்டும் என்பது இதிலிருந்து தெளிவா கிறது. ஒரு பிரசங்கியார் தனது பிரசங்கத்தில் இப்படியாகச் சொன்னார்: ''எனக்கும் என் மனைவிக்கும் இடையில் ஒரு தடவைகூட மனத்தாங்கல் ஏற்பட்டதே கிடையாது'' என்ற பிரசங்கியாரின் கூற்றை என் மனம் நம்ப மறுக்கிறது. இரு வருக்கிடையில் பிளவு ஏற்படாதபடி ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையோடு, நன்கு ஒருவரை யொருவர் புரிந்துகொண்டு, மனது புண்படாமல் நடந்து கொள்வது மிகவும் விரும்பத்தக்கது, மெச்சத்தக்கது, இலட் சியமானது. ஆனால் நம்முடைய நடைமுறை குடும்ப வாழ்க் கையில் பலவிதமான சூழ்நிலை அழுத்தங்கள் காரணமாக, பொருளாதார நெருக்கடியின் நிமித்தம் கணவன், மனைவிக் கிடையில் ஈசாக்கு ரெபேக்காளுக்கிடையில் ஏற்பட்டது

போல தீவிரக் கருத்து வேற்றுமை, மனஸ்தாபம் ஏற்படலாம். அப்படிப்பட்ட சூழ்நிலை வரும்போது, அந்த மனஸ்தாபத்திற்கு காரணம் என்ன? என்பதை ஆராய்ந்து ஆவன செய்வதில்தான் மகிழ்ச்சியான கிறிஸ்தவ குடும்பத்தின் ரகசியம் அடங்கியிருக்கிறது. குழப்பத்தை உண்டாக்கும் அப்படிப்பட்ட சூழ்நிலை திரும்ப குடும்பத்தில் உருவாகி, சிறிய பூசல் பெரிய புயலாக உருவெடுப்பதைத் தவிர்க்க வேண்டும். கணவன் ஒன்றுசொல்ல, மனைவி அதை வேறு அர்த்தத்தில் புரிந்துகொள்வது, மனைவியின் பேச்சில் குற்றம் கண்டுபிடிக்க கணவன் முயல்வது-இது போன்ற செயல்கள் கணவன் மனைவி உறவில் ஊனம் உண்டாக்குகிறது. புருஷர்கள் தங்கள் மனைவிகளை தங்கள் சொந்த சரீரமாக பாவிக்க வேண்டும். (எபே. 5:27,28) என்று வேதம் கூறுகிறது. அப்படியிருக்க தங்கள் மனைவிகளை மிருகத்தைப் போல அடிக்கிற கணவன்கள், தன் சரீரத்தை கல்லினால் காயப்படுத்தி கல்லறையில் குடியிருந்த லேகியோன் பிசாசு பிடித்தவனுக்கு ஒப்பாயிருக்கிறார்கள் என்றால் மிகையாகாது.

**மனைவி:-**

அடுத்தது மகிழ்ச்சியான குடும்பத்தில் நாம் சந்திக்க இருப்பது, மனைவி—தாய் ஸ்தானத்தில் உள்ள குடும்பத் தலைவி. மனைவிகளுக்கு வேதம் கூறும் ஆலோசனைகளைப் பார்ப்போம்.

**கணவனுக்குக் கீழ்ப்படியுங்கள்:-**

"மனைவிகளே, கர்த்தருக்கு கீழ்ப்படிகிறது போல உங்கள் சொந்த புருஷருக்கும் கீழ்ப்படியுங்கள்" (எபே. 5:22). "மனைவிகளே, கர்த்தருக்கேற்கும்படி உங்கள் சொந்த புருஷருக்கு கீழ்ப்படியுங்கள்" (கொலோ. 3:18). "மனைவிகளே, உங்கள் சொந்த புருஷருக்கு கீழ்ப்படியுங்கள்" (1 பேதுரு 3:1). மேலே கொடுக்கப்பட்டிருக்கிற மூன்று வசனத்திலும் திரும்பத் திரும்ப கொடுக்கப்பட்டிருக்கும் கட்டளை "மனைவிகளே புருஷருக்கு கீழ்ப்படியுங்கள்" நாம் ஏற்கெனவே சிந்தித்தப்படி தேவனுடைய பார்வையில்

ஆணும் பெண்ணும் சமத்துவம் வகிக்கிறார்கள். "யூதனென்றும், கிரேக்கனென்றுமில்லை. அடிமையென்றும், சுயாதீனனென்றுமில்லை. ஆணென்றும், பெண்ணென்றுமில்லை; நீங்களெல்லாரும் கிறிஸ்து இயேசுவுக்குள் ஒன்றாயிருக்கிறீர்கள்" (கலா. 3:28) என வேதம் சொல்கிறது. இது இப்படியிருப்பினும், வீட்டில் மனைவியானவள் தன் கணவனுக்கு கீழ்ப்படிந்து நடந்து, அவனது தலைமையின் கீழ் அவள் செயல்பட வேண்டுமென வேதம் நமக்கு வலியுறுத்துகிறது.

இந்த இடத்தில் ஒரு சில விசுவாசியான பெண்கள் கேட்கும் கேள்வி "என்னுடைய கணவன் கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளாதவர், அப்படிப்பட்ட கணவனுக்கு நான் கீழ்ப்படிய வேண்டுமா? இதற்கு வேதம் கொடுக்கும் பதில் "ஆணித்தரமான ஆம்" உன்னுடைய விசுவாசம் அப்படிப்பட்ட கடமைகளிலிருந்து உன்னை விடுதலையாக்குவதில்லை. மாறாக உன்னுடைய கணவன் அவிசுவாசியாக உன் கடமைப் பளு அதிகமாகிறது என்பதை மனதிற் கொள்ள வேண்டும். "கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்" என்ற தமிழ் சொலவிற்கிணங்க, கணவனுக்குரிய கனத்தையும், கடமைகளையும் விசுவாசியான மனைவி செலுத்த வேண்டும்.

"மனைவிகளே உங்கள் சொந்த புருஷர்களுக்கு கீழ்ப்படிந்திருங்கள். அப்பொழுது அவர்களில் யாராவது திருவசனத்திற்குக் கீழ்ப்படியாதவர்களாயிருந்தால் பயபக்தியோடுகூடிய உங்கள் கற்புள்ள நடக்கையை அவர்கள் பார்த்து போதனையின்றி மனைவிகளின் நடக்கையினாலே ஆதாயப்படுத்திக் கொள்ளப்படுவார்கள்" (1 பேதுரு 3:1,2).

ஆனால் இங்கு நாம் சற்று கவனமாயிருக்க வேண்டும். கணவன் கண்மூடித்தனமாக வேதவசனத்திற்கு நேர்மாறான காரியங்களைச் செய்யும் படியாக மனைவியை கட்டாயப்படுத்தினால் மனைவி கீழ்ப்படிய அவசியமில்லை. உதாரணமாக வேதம் வாசிக்கக்கூடாது, ஜெபம் பண்ணக்கூடாது, ஆலயத்திற்குச் செல்ல கூடாது, என கணவன் கண்மூடித்தனமாக கட்டளையிட்டால் இதற்கு மனைவி கீழ்ப்படிய அவசியம் இல்லை.

**கணவனுக்கு உறுதுணையாய் நிற்க வேண்டும்:-**

பின்பு தேவனாகிய கர்த்தர் ''மனுஷன் தனிமையாயிருப்பது நல்லதல்ல, ஏற்ற துணையை நான் உண்டாக்குவேன்'' என்றார் (ஆதி. 2:18). இங்கு துணை என்ற பதமும், எபிநேசர் இம்மட்டும் கர்த்தர் உதவி செய்தார் (I சாமு. 7:12). பதமும் ஒரே அர்த்தமுள்ள மூலவார்த்தைகளிலிருந்து வருகிறது. மனைவி கணவனுக்கும் ''துணை'' யாயிருப்பதினால் கணவனுக்கு அடிமை என விளக்கம் கொடுப்போமானால், தேவனும் நமக்கு துணையாயிருந்து அடிமையாயிருக்கிறார் என்ற அர்த்தமற்ற விபரீதமான விளக்கம் கொடுக்கும் நிர்ப்பந்தம் ஏற்படுகிறது.

அடுத்து, கணவனுக்கு மனைவி எப்படி உதவியாயிருக்க முடியும் என்று பார்ப்போம். ''ஓரல் ராபர்ட்ஸ் என்ற ஊழியக்காரர் தன்னுடைய ஊழியத்தை ஆரம்பித்த நாட்களில் பணக்கஷ்டத்தினால் ஊழியத்தை மூடி விடுவதாக முடிவு எடுக்கும் ஒரு இக்கட்டான சூழ்நிலை ஏற்பட்டது. அவ்வேளையில் அவரது மனைவி அதை உணர்ந்து அவரை உற்சாகப்படுத்தினார்களாம். அதுமல்லாமல் அவரது மனைவி துணிந்து நடந்து கொண்டிருக்க கூட்டத்தில், இடையே எழுந்து மைக் முன்னால் சென்று, ஓரல் உள்ளத்தில் உள்ள அனைத்தையும் ஜனங்களுக்கு எடுத்துரைத்து, ஊழியத்தை தாங்குவதற்கு முன்வரும்படியாக அவர்களுக்குச்சவால் கொடுத்தார். ஓரல் ராபர்ட்ஸ் தன்னுடைய புத்தகத்தில் ''சோர்வுக் குகையிலிருந்து'' தன்னை வெளியே கொண்டுவந்த தன் மனைவியின் இச்செயலைக் குறிப்பிட்டு எழுதும் போது, இதை தன்னுடைய ஊழியத்தின் ஒரு முக்கியமான மைல்கல் என்று குறிப்பிடுகிறார்.

ஆம்! தன்னுடைய வேலை ஸ்தலத்திலும், பழகும் சமுதாயத்திலும், சபையிலும், சொந்தக் குடும்பத்தின் சூழ்நிலையிலும், உற்றார் உறவினர் உறைவிடங்களிலும், உங்கள் கணவன் அநேக பொறுப்புகளையும், சவால்களையும் சந்திக்க நேரிடுகிறது. அவ்வேளைகளில் அப்படிப்பட்ட

சவால்களை அவர் சமாளிக்க முடியாமல் திணறி, திண்டாடும் சமயங்களில் ஆண்டவருக்கு அடுத்து நீங்கள் தான் உங்கள் கணவனுக்கு உறுதுணையாய் நிற்க வேண்டும். கணவனது துன்ப-சங்கிலியால் பிணைக்கப்பட்டால் தான் அவனது புகழ் மாலையிலும் உங்களுக்கு பங்கு கிடைக்கும். அநேக அமெரிக்க ஜனாதிபதிகள் தங்களது வாழ்க்கையில் சாதித்த அநேக சாதனைகளுக்கு தங்களது மனைவிகள் தான் காரணம் என்று கூறியிருக்கிறார்கள். மனைவி அவனது முதுகெலும்பாகவும் மாறி அவன் நிமிர்ந்து நிற்க உதவ வேண்டும்.

**கணவனது மறதி உங்களது ஞாபகம்:-**

"உங்களைப்போல மறதி இந்த உலகத்திலே யாரும் இருக்கமாட்டார்கள்" என்று தங்கள் கணவனைப் பார்த்து உலகத்திலுள்ள எல்லா மனைவிகளுமே சொல்லியிருப்பார்கள். இப்படி அங்கலாய்ப்பதற்குப் பதிலாக, 'இதற்காகவே நான் அவருடன் இருக்கிறேன்' என்று ஏன் நீங்கள் நினைக்க கூடாது? உங்கள் கணவன் ஊருக்குப் பிரயாணப்பட்டுப் போகும்போது, "ரிசர்வேஷன் டிக்கட்டை எடுத்துக் கொண்டீர்களா?" எனக் கேட்கும் மனைவிக்கு கணவன் மிகவும் கடமைபட்டிருக்கிறான்.

**விருந்தோம்பல்:-**

எதிர்பாராத விருந்தினர் உங்கள் வீட்டிற்கு வந்துவிட்டால் அதை ஒரு சங்கடமாகக் கருதுகிறீர்களா? அல்லது அதை சவாலாக நினைத்து சாராள் சமாளித்தது போல (ஆதி 18:6) சமாளிக்க முற்படுகிறீர்களா? அந்நியரை உபசரிக்க மறவாதிருங்கள். அதினாலே சிலர் அறியாமல் தேவ தூதரையும் உபசரித்ததுண்டு (எபி 13:2).

**மனைவி வேலைக்கு போகலாமா?**

பிள்ளைப்பெறுதல், பிள்ளைகளை பராமரித்தல், வீட்டை நிர்வகித்தல், உணவு தயாரித்தல், களைப்போடு மாலையில் வீடு திரும்பும் கணவனை இன்முகத்தோடு வரவேற்பது, கணவனுக்கு தோழியாகவும், ஆலோசனை கருவூலமாக, இருத்தல்—இது தான் மனைவியின் பிரதான கடமைகள்.

புருஷன் தான் குடும்பத்திற்குப் பாதுகாவலனாகவும், போஷகனாகவும் இருக்க வேண்டும். இதுதான் கடவுளின் திட்டம். ஆனால் நவீன காலத்து நாகரீகமும், பொருளாதார அழுத்தங்களும் சமுதாயத்தின் சவுகரிய சூழ்நிலைகளும் இந்த 20-ம் நூற்றாண்டின் கிறிஸ்தவ குடும்பங்களையும் பாதித்து விட்டது என்பதை நாம் ஒத்துக்கொள்ள வேண்டிய ஒரு உண்மை. எனவே பிற மதத்தினரை பார்க்கிலும் சற்று அதிகமாகவே இன்றைய கிறிஸ்தவ குடும்பத்திலுள்ள பெண்கள் வேலைக்குப் போய்க்கொண்டிருக்கிறார்கள். ஆனால் வீட்டிலே சிறுபிள்ளைகள் இருக்கும்போது, கணவன் கை நிறைய குடும்பத்தின் தேவைகளை சந்திப்பதற்குப் போதுமான அளவு சம்பளம் வாங்குபோது மனைவியை வேலை பார்க்க வேண்டும்—அதுவும் தூரமான இடத்திற்குச் சென்று வேலை பார்க்க வேண்டுமென்று கட்டாயப் படுத்தும் கணவன் (தேவனுக்கு விரோதமாகப் பாவம் செய்கிறான் என்று சொல்ல முடியாது). தவனுடைய திட்டத்திற்கு முரண்பாடான காரியத்தை செய்கிறான்.

"உன் மனைவி உன் வீட்டோரங்களில் கனிதரும் திராட்ச கொடியைப் போல் இருப்பாள்" (சங் 128:3). மனைவியின் சம்பாத்தியம் வீட்டோரத்திலே, காம்பௌண்ட் சுவருக்குள் இருக்கவேண்டும் என்று வேதம் நமக்கு ஆலோசனை கூறுகிறது. அதுவும் மனைவியின் சம்பளத்திற்காக கணவனும் மனைவியும் வேறு ஊர்களில் பிரிந்து வாழ்வது நிச்சயமாக தேவனுடைய வார்த்தைக்குப் புறம்பானது. தேவன் இணைத்ததை மனைவியின் சம்பளம் பிரிக்க நாம் அனுமதிக்கலாமா? அநேக வருடங்களாக கணவனும் மனைவியும் பிரிந்து வாழ்வதைப் பார்க்கிலும், செலவை குறைத்துக்கொண்டு ஒருவர் சம்பாத்தியத்தில் கணவனும் மனைவியும் ஒன்றாக ஒரே வீட்டில் வாழ்வது சாலச்சிறந்தது.

**கணவன் - மனைவி தொடர்பு:-**

இன்றைக்கு 70% மேலான குடும்பங்களில் பிரச்சனை தலைதூக்குவதற்கு முக்கிய காரணம் கணவன்-மனைவி இரு

வருக்குள்ளும் செய்தித் தொடர்பு அறுப்பட்டு போகிறது. கணவனும்-மனைவியும் ஒரே சரீரமாயிருக்க வேண்டும் என்று வேதம் போதிக்கிறது. நல்ல ஆரோக்கியமுள்ள சரீரத்தின் அவயவங்கள் ஒன்றின் செயலை இன்னொன்றிற்கு மறைத்து வைத்துக்கொண்டு இயங்காது. கணவன்-மனைவி இருவருக்கிடையில், ஒளிவு, மறைவு இரகசியங்கள் இருக்க அனுமதிக்காதீர்கள். இரண்டு மணி நேரம் பிந்தி கணவன் வீட்டிற்கு வந்தால், அவர் நுழையும் போதே ஏன் இவ்வளவு லேட்டாக வருகிறீர்கள் என்று கேட்காமல், அவர் உணவு அருந்தி முடிந்த பின்பு, ஏன் 2 மணி நேரம் பிந்தி வந்தார் என்பதைக் குறித்து அரைமணி நேரமாவது விளக்கம் கேளுங்கள். உங்கள் கணவன் வெளியூர் கூட்டங்களுக்கோ அல்லது விழாவிற்கோ போய்விட்டு வந்தால், அவ்விழாவில் நடந்த சிறுசிறு காரியத்தையும், நுணுக்கமாக விளக்கம் விசாரிக்கத் தவறாதீர்கள். அப்படி மனம்விட்டுப் பேசுவதில்தான், கணவன்-மனைவி உறவு பலப்படுகிறது. ஐக்கியப்படுகிறது. ஒருசிலர் இப்படி அடிக்கடி இருவரும் பேசியதால் தானே திருமணம் செய்து கொண்டீர்கள்; உண்மை அப்படி இருக்கும்போது, திருமணத்திற்கு பின்பு அடிக்கடிபேசும் பழக்கத்தை ஏன் நிறுத்த வேண்டும்.

**பிள்ளைகளை வளர்த்தல்:-**

"இதோ, பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்திரம், கர்ப்பத்தின் கனி அவரால் கிடைக்கும் பலன்" (சங். 127:7). இன்றைக்கு அநேக கிறிஸ்தவ இல்லங்கள் யுத்தகளங்களாய் மாறிவிட்டன. அவைகள் பரலோகத்தின் ஏணியாய் இருப்பதற்குப் பதிலாக, நரக வாசலாக மாறுவதற்குக் காரணம் பிள்ளைகள் - மன்னிக்கவும். பிள்ளைகளை சிறு வயதில் சரியாக வளர்க்காமல் விட்ட பெற்றோர்கள்தான். ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது என்பது நாம் யாவரும் அறிந்த உண்மை. பிள்ளையானவன் நடக்க வேண்டிய வழியிலே அவனை நடத்து அவன் முதிர் வயதிலும் அதை விடாதிருப்பான் (நீதி. 22:6). நாம் பிள்ளைகளை வளர்க்க வேண்டிய முறைகளை சுருக்கமாக கீழே தருகிறோம்.

**பெற்றோர்கள் பிள்ளைகளுக்காக நேரத்தை ஒதுக்க வேண்டும்:-**

ஒரு பெரிய ஆலயத்தில் தபால் பெட்டி ஒன்று வைக்கப்
பட்டிருந்தது. போதகர் தங்கள் வீட்டில் வந்து சந்திக்க
வேண்டும் என்று விரும்புகிற சபையின் அங்கத்தினர்கள்,
அந்தப் பெட்டியில் தம் விருப்பத்தை கடிதத்தில் எழுதி
அந்தப் பெட்டியில் போடுவது வழக்கம். ஒருநாள் அக் கடிதங்
களுக்குள், தன் சொந்த மகன் எழுதிய கடிதத்தையும்
பார்த்தபோது, அவருக்கு தூக்கி வாரிப் போட்டது. நம்
முடைய வேலை, வியாபாரம், தொழில், ஊழியம் இவற்றிற்
காக எத்தனையோ மணி நேரங்கள் செலவழிக்கிற நாம்,
பிள்ளைகளுக்காக சிறிது நேரத்தை ஒதுக்க தயங்கக் கூடாது.
இப்பொழுது நாம் அவர்களுடன் செலவிடும், முதலீடு செய்
யும் சில மணித்துளிகள், பிற்காலத்தில் அவர்கள் வளர்ந்த
பின்பு அவர்களோடு வாதாடி, போராடி, கண்ணீர்த்துளி
கள் சிந்த வேண்டிய நிர்ப்பந்தத்தைத் தடுக்க பெரிதும்
உதவி செய்யும்.

**பெற்றோர்கள் பிள்ளைகளின் முன்பில் முன் மாதிரியாக இருக்க வேண்டும்:-**

"முன்மாதிரி" ஆலோசனைக்கு முன்னும் செல்ல
வேண்டும். சொல்வது ஒன்றும் செய்வது முற்றிலும் வேறு
பட்டதாயும் இருக்கக் கூடாது. பஸ்ஸிலே குழந்தைக்கு அரை
டிக்கெட் எடுக்க வேண்டும் என்று கேட்ட கண்டக்டரிடம்
"குழந்தைக்கு வயது இரண்டரை ஆண்டுகள் கூட ஆக
வில்லை" என்று தாய் சொல்லுகிறாள். ஆனால் பஸ்ஸிலிருந்து
இறங்கி பள்ளி சென்றவுடன், "குழந்தைக்கு ஐந்து வயது
முடியாமல் பள்ளியில் சேர்க்க மாட்டோம்" என்ற தலைமை
ஆசிரியரிடத்தில், "குழந்தைக்கு ஐந்து வயது முடியப்
போகிறது" என்று அதே தாய் பதில் சொன்னால், குழந்தை
குழப்பம் அடையாமல் என்ன செய்யும். எதிரிகளை சிநேகிக்க
வேண்டும்; எல்லோரிடத்திலும் அன்பாயிருக்க வேண்டும்
என்று நம் பிள்ளைகளுக்கு போதிக்கிறோம். ஆனால் "பள்ளி
யில் இன்னொரு பையன் என் முகத்தில் ஓங்கி அடித்து விட்

டான்" என்று நம் பிள்ளை சொன்னவுடன், நாம் கொடுக்கும் பதில் "ஏண்டா, அடித்தவனைத் திரும்ப நீ அடிக்காமல் வந்தாய்?" என்று அதற்குப் பதிலாக, "அப்படி யாராவது அடித்தால், நீ திரும்ப அடிக்க கூடாதப்பா, நீ போய் உன் ஆசிரியரிடம் சொல்ல வேண்டும்" என்று அறிவுரை சொன்னால் எவ்வளவு நன்றாக இருக்கும்.

நான் ஒரு சமயம் (பிரசங்கி 10:1)-ம் வசனத்தைப் பிரசங்கித்தேன். தைலக்காரனுடைய பரிமள தைலத்தில் செத்த ஈக்கள் கிடந்ததற்குக் காரணம் தைலக்காரனுடைய பரிமள தைலத்தின் மூடி திறந்து வைக்கப்பட்டிருந்தது. அதனால்தான் ஈக்கள் உள்ளே விழுந்து செத்து விட்டன. என்று சொன்னேன். ஒரு வாரம் கழித்து ஒருநாள் என் வீட்டில் எண்ணெய் பாட்டில் மூடியைத் திறந்து எண்ணெய் தேய்த்து விட்டு, பாட்டிலை மூடி வைக்காமல் போய் விட்டேன். இதை கவனித்துக் கொண்டிருந்த எனது நான்கு வயது மகள் என்னைப் பார்த்து, "அப்பா சர்ச்சிலே மாத்திரம் தைலக்காரன் பாட்டில் மூடியைத் திறந்து வைக்கக் கூடாது என்று பிரசங்கித்தீர்களே! இங்கு வீட்டிலே நீங்க எண்ணெய் பாட்டில் மூடியைத் திறந்து வச்சிட்டீங்களே, எண்ணெய் பாட்டில் மூடியை மூடுங்கப்பா" என்று என் தலையில் ஆணி அறைந்தால் போல் கேட்டு, ஒரு குட்டிப் பிரசங்கமே எனக்கு செய்து விட்டாள். அப்பொழுதான் நான் என் தவறை உணர்ந்தேன். நாம் பிரசங்கிக்கிறபடி அநுதின வாழ்க்கையில் நடக்காவிட்டால் நம்மைப் பற்றி மற்றவர்கள் பிரசங்கிப்பார்கள் என்ற கூற்று என் நினைவிற்கு வந்தது.

நம்முடைய பிள்ளைகளுக்கு முன்மாதிரியாய் இருக்க வேண்டுமானால் நம் சொந்த வாழ்க்கையில் பல ஆண்டுகளுக்கு முன்பாக நடந்ததை கொஞ்சம் மனதில் வைத்து சிந்திப்பது நல்லது. 25 ஆண்டுகளுக்கு முன்பாக, உங்களது பெற்றோர்களைப் பற்றி நீங்கள் நினைத்துப் பார்க்கும்போது, அவர்களைப் பற்றி எப்படிப்பட்ட எண்ணங்கள் உங்கள் மனதில் பதிந்திருக்கிறது? அதேபோல இன்னும் 25 ஆண்டுகள்

குறித்து உங்களைப்பற்றி உங்கள் பிள்ளைகள் எப்படிப்பட்ட எண்ணங்கள் மனதில் வைத்திருப்பார்கள்? நீங்கள் காட்டிய இரக்க குணத்தையா? மன்னிக்கும் சுபாவத்தையா? மற்றவர்களுக்கு உதவிச் செய்ய வேண்டுமென்ற மனப்பான்மையா? தேவன் மேலும், அவரது வார்த்தையின் மேலும் நீங்கள் வைத்திருந்த அன்பையா? அல்லது இதற்கு மாறாக, நீங்கள் காட்டிய மூர்க்க குணத்தையா? நேர்மையற்ற, சுயநலமான பாவத்தையா? பொய் சொல்வதையா?

**பிள்ளைகளை கண்டித்தல்:-**

""பிள்ளைகளே, உங்கள் பெற்றோர்களுக்குக் கர்த்தருக்குள் கீழ்ப்படியுங்கள் இது நியாயம்" (எபே. 6:1). நம்முடைய பிள்ளைகளிடத்திலிருந்து கீழ்ப்படிதலை நாம் எதிர்பார்ப்பது நம்முடைய உரிமை மாத்திரமல்ல கடமையுங்கூட. அதற்காக நாம் அவர்களை கண்டிக்கலாம், தண்டிக்கலாம். அவர்களை நாம் தண்டிக்கும்போது ஒன்றை நாம் உணரவேண்டும். அவர்களை தண்டிப்பதற்கு எப்படி நமக்கு உரிமையிருக்கிறதோ அதே போல ""நாம் எக்காரணத்திற்காக அவர்களை தண்டிக்கிறோம்" என்பதை அவர்கள் அறிந்து கொள்வதற்கு அவர்களுக்கு உரிமையுண்டு என்பதை நாம் மறந்து விடக்கூடாது. எனவே அடுத்த தடவை உங்கள் குழந்தையை அடிப்பதற்கு முன் எதற்காக அடிக்கப் போகிறீர்கள் என்பதை விளக்கிச் சொல்லிவிட்டு பின்பு அடிக்க ஆரம்பியுங்கள்.

பெற்றோராகிய நாம், நம் பிள்ளைகளை அடிக்கும் முன் கவனிக்க வேண்டிய இன்னொரு ஒழுங்கு முறையும் உண்டு. அநேக ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பிரசங்கியார் இதுபற்றி பிரசங்கித்தது எனக்கு நினைவிற்கு வருகிறது. அவர் இப்படியாகச் சொன்னார்: ""உங்கள் பிள்ளைகளை அடிக்கும்போது மூர்க்கத்தோடும், வெறியோடும் அடித்தால் அதனால் உங்கள் கோபம் தணிவதைத் தவிர வேறெந்த பயனுமில்லை. அதற்கு பதிலாக, அடிப்பதற்கு முன் ஒரு நிமிடம் முழங்கால்படியிட்டு, 'நான் கொடுக்கும் அடியின் மூலமாக என் மகனைத் திருத்தும் ஆண்டவரே' என்று ஜெபித்துவிட்டு பின்பு அடியுங்கள்."

அடுத்து, பிள்ளைகளை அடிக்கும் போது பிள்ளையின் நன்மைக்காகத்தான் தண்டிக்கிறோம். என்பதையும் அவர்களுக்கு உணர்த்த வேண்டும். ''இடது கையால் உங்கள் பிள்ளையை அடிக்கும்போது வலது கை அவனை அரவணைக்கட்டும்'' என்று கூறுகிறது ஒரு யூதப்பழமொழி. ''அடிவாங்காத பிள்ளை அழிவது திண்ணம் என்று சொல்வது உண்மைதான். ஆனால் ஒரு கையில் தடியும் இன்னொரு கையில் ஆப்பிளும் இருக்கட்டும்" என்று மார்ட்டின் லூதர் கூறுகிறார்.

உங்கள் பிள்ளைகளை அருகில் வைத்துக்கொண்டு அவர்களுக்காக ஜெபியுங்கள். ஒரே தவறை உங்கள் பிள்ளை இரண்டு சமயங்களில் செய்யும்போது ஒரு முறை கண்டித்தும் இன்னொருமுறை கண்டும் காணாததுபோல பாராமுகமாகவும் இராதேயுங்கள். ''அப்பா தண்டிப்பது, அவரது மனநிலை (Mood) யைப் பொறுத்தது. அதற்கு சீரான அளவுகோல் கிடையாது" என்று உங்களைப்பற்றி உங்கள் பிள்ளை எண்ண இடம் கொடுக்கிறீர்கள். பிள்ளைகள் கேட்பதையெல்லாம் வாங்கிக் கொடுப்பது பெற்றோரிடத்தில் காணப்படும் ஒரு கெட்ட பழக்கம். அந்தக் காட்டிலும் கேடான இன்னொரு கெட்ட பழக்கம் பெற்றோரிடத்தில் உண்டு. அது என்னவென்றால் அதை வாங்கித் தருகிறேன் இதை வாங்கித் தருகிறேன் என்று பிள்ளைகளிடத்தில் சொல்லி விட்டு, பின்பு அதைவாங்கித்தராமல் இருப்பது, எதையும் வாங்கிக்கொடுப்பதாக எளிதில் வாக்குக் கொடுக்காதிருங்கள். அப்படி வாங்கிக் கொடுப்பதாக சொல்லிவிட்டால், அதை எக்காரணத்தை முன்னிட்டும் வாங்கிக் கொடுக்க தவறாதீர்கள்.

''பிதாக்களே—உங்கள் பிள்ளைகளை கோபப்படுத்தாமல் கர்த்தருக்கேற்ற சிட்சையிலும், போதனையிலும் வளர்ப்பீர்களாக" (எபே. 6:4). பிள்ளைகளே உங்கள் பெற்றோருக்குக் கர்த்தருக்குள் கீழ்ப்படியுங்கள் இது நியாயம் (எபே. 6:1). புருஷனானவன் தன் தகப்பனையும், தாயையும் விட்டுத் தன் மனைவியோடே இசைந்திருப்பான். அவர்கள் இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள். இவ்விதமாய் அவர்கள் இருவருமா

யிராமல் ஒரே மாம்சமாயிருக்கிறார்கள். ஆகையால் தேவன் இணைத்ததை மனுஷன் பிரிக்காதிருக்கக்கடவன். மனைவிகளே கர்த்தருக்குக் கீழ்ப்படிகிறது போல உங்கள் சொந்தப் புருஷருக்குக் கீழ்ப்படியுங்கள். புருஷர்களே உங்கள் மனைவிகளில் அன்பு கூருங்கள் (எபே. 5:22,25).

அத்தியாயம் 5

# குடும்பத்தின் குறைவும் இயேசுவின் நிறைவும்!

**வேத பகுதி**

**யோவான் 2:1-11**

"இயேசுவும் அவருடைய சீஷரும் அந்த கலியாணத்துக்கு அழைக்கப்பட்டிருந்தார்கள்"

திராட்சை ரசம் குறைவுபட்டபோது,

இயேசு அற்புதத்தைச் செய்து தம்முடைய மகிமையை வெளிப்படுத்தினார்.

**இயேசு அழைக்கப்பட்டது ஒரு சிறப்பு:-**

வசனம் இரண்டு இயேசு கானாவூர் கலியாண வைபவத்திற்கு அழைக்கப்பட்டிருந்தார் என்று கூறுகிறது. கானாவூரில் இயேசுகிறிஸ்துவின் நாட்களில் அநேக திருமணங்கள் நடைபெற்றிருக்கக் கூடும். ஆனால் மேற்கூறப்பட்டுள்ள திருமணம் முக்கியம் வாய்ந்ததாக, சிறப்பு வாய்ந்ததாக வேதாகம சரித்திரத்தில் இடம்பெற்ற மேன்மையுடையதாக இருக்கிறது.

காரணம், அந்த கலியாணத்திற்கு இயேசுகிறிஸ்து அழைக்கப்பட்டிருந்தார். கலியாணம் சாதாரணமானது தான். ராஜா வீட்டுக் கலியாணமும் அல்ல. பிரபு வீட்டுக் கலியாணமும் அல்ல. சாதாரண குடும்பத்தைச் சேர்ந்த கலியாணம் ஆயினும் தேவகுமாரன் இயேசுகிறிஸ்துவை அக்கலியாணத்திற்கு அழைத்திருந்தபடியால் சிறப்புடைய கலியாணமாகி விட்டது.

**இயேசுவை அழைத்தால் உங்கள் இல்லம் சிறப்புடையது:-**

பிரியமானவரே, இயேசுகிறிஸ்துவை உங்கள் இல்லத்திற்கு அழைத்தால், உங்கள் குடும்பம்விசேஷமாக அமையும்

சாதாரண குடும்பமாக, உங்கள் குடும்பம் இருக்கலாம். இயேசு உங்கள் குடும்பத்திற்கு அழைக்கப்பட்டிருந்தால், இயேசு கிறிஸ்துவுக்கு உங்கள் குடும்பத்தில் முக்கிய இடம் அளிக்கப்பட்டால், உங்கள் குடும்பம் சிறப்புடைய குடும்பமாக இருக்கும். இயேசு உங்கள் இல்லத்தில் இருக்கிறாரா? சகேயு வீட்டிற்குள் பிரவேசித்து தங்கின இயேசு உங்கள் வீட்டில் தங்கியிருக்கிறாரா? ஆராய்ந்து பாருங்கள். இயேசு கிறிஸ்து இல்லாத இல்லமாக உங்கள் இல்லம் இருந்தால், இன்றே இயேசு கிறிஸ்துவை வரவழையுங்கள். உங்கள் இல்லத்தில் இயேசு இருக்கும்படி பாருங்கள். இயேசு தங்கும் வீடு உன்னத வீடு — சிறப்புடைய வீடு அல்லவோ ஐயா!

**இயேசு இருந்த இடத்தில் குறைவு :-**

இயேசு அழைக்கப்பட்டிருந்த கலியாண வீட்டில் நடந்த முக்கிய சம்பவம் என்ன? இயேசு அழைக்கப்பட்டிருந்ததால் என்ன சிறப்பு ஏற்பட்டது?

மூன்றாவது வசனம் சொல்லுகிறது திராட்சைரசம் குறைவுபட்டது என்று. இயேசு அழைக்கப்பட்ட இடத்தில் குறைவு உண்டாயிற்று. இயேசு கலந்து கொண்ட வைபவத்தில் குறைவு. இயேசு இருக்கும் இடத்தில் குறைவு. இயேசு கலந்து கொண்ட இல்லற நிகழ்ச்சியில் நிறைவுக்குப் பதில் குறைவு உண்டாயிற்று.

அப்படியானால் இயேசுவை அழைத்தால் குறைவுதான் உண்டாகுமா? எல்லாவற்றையும் எல்லாவற்றாலும் நிரப்புகிறவரான இயேசு கிறிஸ்து இருக்கும் இடத்தில் குறைவா? குறைவு ஏற்படத்தான் இயேசுவை அழைக்க வேண்டுமா? கிறிஸ்து உள்ள இடம் குறைவுள்ள இடமா? கிறிஸ்து உள்ள இல்லம் நிறைவுள்ளதாக அல்லவா இருக்க வேண்டும்!

சகோதரனே, சகோதரியே,

இன்று கிறிஸ்து அழைக்கப்பட்ட வீட்டில், வாழ்க்கையில் குறைவு உண்டாகக் கூடாது என்று உலகம் நினைக்கிறது. ஏன் உலகம்? நீங்கள் நினைக்கிறீர்கள். ஆம்; உலகமும்

நீங்களும் கிறிஸ்து இருக்கும் இல்லத்தில் குறைவே இருக்கக் கூடாது என்று எதிர்பார்க்கிறீர்கள்.

விசுவாசிகள் குடும்பத்தில் ஒரு குறைவு வந்துவிட்டால்—ஒரு வியாதி வந்து விட்டால்—ஒரு நஷ்டம் ஏற்பட்டு விட்டால்—ஒரு கஷ்டம் வந்து விட்டால், இயேசுவை விசுவாசிக்கும் இந்தக் குடும்பத்தில் ஏன் வியாதி வந்தது? ஏன் கஷ்டம் வந்தது? ஏன் நஷ்டம் வந்தது? எப்போதும் ''கர்த்தர்'' ''கர்த்தர்'' என்று சொல்லும் இந்தக் குடும்பத்தில் மரணம் ஏற்படலாமா? இயேசு இருந்தால் இப்படி ஆகுமா? என்ற கேள்விகளை உலகம் கேட்கலாம்.

நீங்கள்கூட சில சமயங்களில் இயேசுகிறிஸ்து என் குடும்பத்தில் இல்லையோ? இயேசு என்னைவிட்டுப் போய்விட்டாரோ? இயேசு இருந்தால் இப்படி என் வாழ்க்கையில் கஷ்டம் வந்திருக்காதே! இப்படி குறைவு ஏற்பட்டிருக்காதே! என்றெல்லாம் புலம்பலாம்.

**குறைவு வராத வாழ்க்கை: இயேசு வாக்களிக்கவில்லை:-**

சகோதரியே, சகோதரனே, இயேசு இருந்த கலியாண வீட்டில் குறைவு உண்டாயிற்று. அதுவே அக்கலியாணத்தின் சிறப்பு. அதுவே அக்கலியாண வீட்டின் முக்கிய நிகழ்ச்சி. குறைவு வராத ஒரு வாழ்க்கை கொடுப்பேன் என்று இயேசு கூறவில்லை. பிரச்சனை ஏற்படாத வாழ்வு தருவேன் என்று இயேசு கூறவில்லை. வியாதி இல்லாத ஒரு வாழ்வு தருவதாக இயேசு வாக்களிக்கவில்லை.

**உபத்திரவம் உண்டு, சிலுவையை எடு என்று இயேசு கூறினார்:-**

''உலகத்தில் உங்களுக்கு உபத்திரவம் உண்டு என்று இயேசு கிறிஸ்து கூறினார்'' (யோவா 16:33). சிலுவையை எடுத்துக்கொண்டு தன்னைப் பின்பற்றிவா இயேசு கூறினார் (மத் 16:24). உங்கள் குறைவையெல்லாம் இயேசு கிறிஸ்துவுக்குள் தேவன் நிறைவாக்குவார் என்று பவுலடியார் (பிலி 4:19). கூறுகிறார்.

**எப்போதும் குறைவுதானு?**

கானாவூர் கலியாணத்தில் குறைவு உண்டானது. ஆனல் குறைவு குறைவாகவே இருந்துவிடவில்லே. ஏற்பட்ட குறைவினுல் நஷ்டம் பாதிப்பு உண்டாக்கவில்லே. குறைவின் முடிவு நிறைவு. குறைவின் முடிவு மகிமை. குறைவின் முடிவு மகிழ்ச்சி. குறைவின் முடிவு விசுவாசம் அல்லேலூயா! இயேசு இருக்கும் இடத்தில் ஏற்படும் குறைவு சிறப்புடையது. இயேசு இல்லாத இடத்தில் ஏற்படும் குறைவுதான் ஆபத்தானது. இயேசு இல்லாத குடும்பத்தில் ஏற்படும் குறைவுதான் தாங்க முடியாதது. குறைவு இருக்கிறதா என்பது முக்கியமல்ல. இயேசு கிறிஸ்து இருக்கிறரா? இல்லேயா? என்பதுதான் முக்கியம். உங்கள் இல்லத்தில் இயேசு நாதர் இருக்கிறரா? சோதித்துப் பாருங்கள். இயேசு இருக்கும் இடத்தில் ஏற்படும் குறைவு நல்லது இயேசு இருக்கும் வீட்டில் குறைவு ஏற்படலாம். வியாதி வரலாம். பிரச்சனே வரலாம்.

**குறைவின் மத்தியில் இயேசு இருக்கிறர்:-**

குறைவின் மத்தியில் இயேசு இருக்கிறர். இயேசு இருக்கும் இடத்தில் குறைவு வரலாம். குறைவு இயேசு இல்லே என்பதைக் காட்டும் பலகை அல்ல. குறைவு இயேசு கிறிஸ்து அற்புதம் செய்கிறவர், செய்யப் போகிறர் என்று அறிவிக்கும் எக்காளமாகும்.

**எப்படி நிறைவாயிற்று?**

கானாவூர் கலியாணத்தில் ஏற்பட்ட குறைவு எப்படி நிறைவாயிற்று என்பதைப் பார்ப்போம்.

**இயேசுவினிடத்தில் தெரிவித்தார்கள் :-**

திராட்சை ரசம் குறைவு பட்டபோது, முதலாவது இயேசு கிறிஸ்துவினிடத்தில் தெரிவித்தார்கள். உங்கள் குடும்பத்தில் குறைவு ஏற்படும் போது, முதலில் இயேசு கிறிஸ்துவினிடத்தில் தெரியப்படுத்துங்கள். திராட்ச ரசம்

குறைவுபட்டவுடன் திருமண வீட்டார் என்ன செய்வது என்று யோசிக்கவில்லை. சொந்த முயற்சியில் ஈடுபடவில்லை.

குறைவுபட்ட போது இயேசுவை நோக்கினார்கள். ஒத்தாசைக்காக இயேசுவை நோக்கினார்கள். உங்கள் குடும்பத்தில் குறைவு ஏற்படும் போது என்ன செய்கிறீர்கள்? கூடி ஆலோசனை செய்கிறீர்களா? உடனே வெளியே ஓடி மனித உதவியை நாடி குறைவை நீக்க முயற்சிக்கிறீர்களா?

அன்பானவரே,

குறைவு ஏற்பட்டவுடன் குறைவை நிறைவாக்க வல்லவரை நோக்குங்கள். அவரை நாடுங்கள். அவரிடம் போய் சொல்லுங்கள். குடும்பத்தில் ஒரு கஷ்டம், பிரச்சனை வியாதி வந்தால், உடனே குடும்பமாக இயேசுவின் பாதத்தண்டை செல்லுங்கள். அவரிடம் தெரியப் படுத்துங்கள்.

''நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்படாமல், எல்லாவற்றையும் குறித்து உங்கள் விண்ணப்பங்களை ஸ்தோத்திரத்தோடே கூடிய ஜெபத்தினாலும்; வேண்டுதலினாலும் தேவனுக்குத் தெரியப்படுத்துங்கள்" (பிலி. 4:6).

எந்தக் குறைவுக்கும் இயேசு கிறிஸ்துவை உடனே நாடும் பழக்கத்தை ஏற்படுத்திக்கொள்ளுங்கள். குறைவு, இயேசுவிடம் நெருங்கச் செய்யும் ஒரு தூண்டுதலாக மாறட்டும். கர்த்தர் குறைவை உங்கள் வாழ்க்கையில் அனுமதிப்பதே, நீங்கள் அவரண்டை வரவேண்டும் என்பதற்காக என்பதை அறிந்து கொள்ளுங்கள். இயேசுவண்டை தள்ளும் ஒரு உந்து சக்தி உங்கள் குடும்பத்தில் உண்டாகும் குறைவே ஆகும். குறைவு உங்களை குன்றிப்போக அல்ல, அசையாத குன்றாக மாற்ற வருகிறது. அல்லேலூயா!

**விருந்தாளியா? வீட்டுக்காரரா?**

இயேசு கலியாண வீட்டுக்கு அழைக்கப்பட்டிருந்தார். கலியாண வீட்டில் குறைவு உண்டாயிற்று. சாதாரணமாக, ஒரு விருந்தில் உணவுப்பொருள் குறைந்து விட்டால், உடனே விருந்தாளிகளுக்குத் தெரிவிக்காமல் மூடி மறைக்க முயற்

சிப்பது வழக்கம். இயேசு கிறிஸ்து சாதாரண விருந்தாளி யாக அல்ல; சிறப்பு விருந்தினராக அழைக்கப்பட்டிருந்தார். உங்கள் திருமண வீட்டிற்கு ஒரு சிறப்பு விருந்தாளியாக முதல் அமைச்சர் வந்திருக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங் கள். விருந்தில் பாயாசம் குறைந்து விட்டது. உடனே முதல் அமைச்சரிடம் போய் பாயாசம் இல்லை, என்ன செய்வது என்று கேட்பீர்கள்? சிறப்பு விருந்தாளிக்குத் தெரிந்து விடாமல் இருக்கும்படி காரியத்தை அடக்கிக் கொள்வீர்கள் அல்லவா? வீட்டார்கள் மட்டும் ஆலோசித்து, காரியத்தை நிறைவேற்ற முயற்சிப்பீர்கள் அல்லவா?

**விருந்தாளி வீட்டுக்காரர் ஆனார்:-**

ஆனால், கானாவூர் கலியாண வீட்டாரோ, குறைவு உண்டான போது உடனே சிறப்பு விருந்தாளியாகிய இயேசு விடத்தில் போய், திராட்சைரசம் இல்லையென கூறுகிறார் கள். விருந்தில் குறைவு உண்டானால் வீட்டின் தலைவரிடம் தான் போய் சொல்லுவது வழக்கம். சிறப்பு விருந்தாளிக்குத் தெரியாமல் மறைப்பது பழக்கம்.

இந்தக் கலியாண வீட்டில் இயேசு கிறிஸ்துவினிடத்தில் போய் சொல்வதற்குக் காரணம், அவர் விருந்தாளியாக அழைக்கப்பட்ட போதும், அவரை வீட்டுக்காரராக ஆக்கி விட்டார்கள். கலியாணத்தை நடத்தும் வீட்டின் தலைவராக இயேசு கிறிஸ்துவை அங்கீகரித்து விட்டார்கள்.

பிரியமானவரே, இயேசு உங்கள் இல்லத்தின் விருந் தாளியா? அல்லது வீட்டுக்காரரா? விருந்தாளி நிரந்தரமான வர் அல்ல. விருந்தாளி விருந்தைக் கவனிப்பவர் அல்ல. விருந்தாளி குறைவை உண்டாக்குகிறவர். குறைவைப் போக்குகிறவர் அல்ல. இயேசு இல்லத்திற்கு விருந்தாளி யாக வந்தாலும் வீட்டுக்காரராக ஏற்படுத்திவிடுங்கள். வீட்டின் தலைவராக ஏற்படுத்தி விடுங்கள். வீட்டின் தலைவ ராக ஆக்குங்கள்.

இயேசு உங்கள் வீட்டிற்கு இன்னும் மறைமுகமான விருந்தாளியாகத்தான் இருக்கிறாரோ? வீட்டின் தலைவராக

ஆகவில்லையோ? இப்போதே 'இயேசுவே நீர் எங்கள் வீட்டின் விருந்தாளி அல்ல; வீட்டின் தலைவர், உம்மை எங்கள் வீட்டின் தலைவராக ஏற்றுக் கொள்ளுகிறோம்" என்று கூறுங்கள்

**தலைவரின் பதில் பொறுப்பற்றதா?**

திராட்ரசம் இல்லை என்று இயேசு கிறிஸ்துவினிடத்தில் சொன்னவுடன் ''அப்படியா, இதோ அற்புதத்தைச் செய்கிறேன் பாருங்கள்'' என்று பதில் சொல்லாமல் மிக சர்வ சாதாரணமாக, கவலையில்லாதவர் போல, கரிசனை அற்றவர்போல, பொறுப்பில்லாதவர் போல ''என் வேளை இன்னும் வரவில்லை" என்று சொன்னார். எனினும், அவர் பதிலைக் கேட்டு பயப்படாமல் அவிசுவாசப்படாமல்; அவர் ஆவனம் செய்வார் என்ற நம்பிக்கையுடன், மரியாள் வேலைக்காரர்களுக்கு, ''அவர் உங்களுக்கு என்ன சொல்லுகிறாரோ, அதின்படி செய்யுங்கள்" என்று கட்டளையிட்டார்.

**அவர் கட்டளைக்குக் கீழ்ப்படியுங்கள்:-**

பிரியமான சகோதரனே, சகோதரியே, உங்கள் குறைவு நிறைவாக இயேசுவின் கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டும். கிறிஸ்து என்ன சொல்லுகிறாரோ அதன்படி செய்தால் உங்கள் குறைவு நீங்கும்.

**கீழ்ப்படிந்தார்கள்:-**

இயேசு வேலைக்காரரை நோக்கி, அங்கேயிருந்த தொட்டிகளில் தண்ணீரை நிரப்பச்சொன்னார். அந்தப்படியே அவர்கள் நிரப்பினார்கள். பின்பு அவர்களை நோக்கி மொண்டு கொண்டு போய் கொடுங்கள் என்று கூறினார். அவர்கள் இயேசு சொன்னபடியே கொண்டுபோய் கொடுத்தார்கள். என்ன ஆச்சரியம்!

இயேசு தண்ணீரில் கைவைத்து ஆசீர்வதிக்கவில்லை. திராட்சரசமாகும்படி ஜெபிக்கவில்லை. ஸ்தோத்திரம் செய்யவில்லை. வேலைக்காரர்கள் இயேசு சொன்னபடியெல்லாம்

செய்தவுடன் தண்ணீர் திராட்சரசமாக மாறினது. பந்தி விசாரிப்புக்காரன் கையில் கொண்டுபோய் கொடுத்தவுடன் தண்ணீர் திராட்சரசமாக மாறிவிட்டது.

**கீழ்ப்படிதல் அற்புதம் நிகழ்த்தியது:-**

வேலைக்காரர்கள் எதையும்பற்றி யோசிக்கவில்லை. எப்போதும் உள்ள தண்ணீர், எப்போதும் உள்ள தொட்டிகள். அவர்களே தண்ணீரைத் தொட்டியில் நிரப்பினார்கள். அவர்களே மொண்டார்கள். அவர்களே கொண்டு போய் கொடுத்தார்கள். தண்ணீரை எப்படி கொண்டு போய் திராட்சரசம் என்று கொடுப்பது என்றும் தயங்கவில்லை. இயேசு என்ன சொன்னாரோ அதன்படி அப்படியே கேள்வி கேட்காமல் கீழ்ப்படிந்தார்கள். கீழ்ப்படிதல் பூரணமான போது அற்புதம் நடந்தது. கீழ்ப்படிதல் பூரணமானபோது குறைவு நிறைவாயிற்று.

**கீழ்ப்படிதல் உண்டா?**

அன்பானவரே, உங்கள் குறைவு நிறைவாக கீழ்ப்படிதல் அவசியம் கர்த்தர் என்ன சொல்லுகிறாரோ அதன்படி செய்யுங்கள். கஷ்டமான காரியமாக இருந்தாலும் கர்த்தருக்குக் கீழ்ப்படியுங்கள். ஞானஸ்நானம் எடுக்க கர்த்தர் சொன்னால் உடனே கீழ்ப்படியுங்கள் தசமபாகம் கொடுக்க கர்த்தர் சொன்னால் உடனே கீழ்ப்படியுங்கள். நகைகளைக் கழற்ற கர்த்தர் சொன்னால் உடனே கீழ்ப்படியுங்கள். ஊழியத்திற்குப் போக வேலையை விட சொன்னால் விட்டுவிடுங்கள். உங்கள் மகனை ஊழியத்திற்கு அனுப்பச் சொன்னால் உடனே கீழ்ப்படியுங்கள். கர்த்தர் என்ன சொல்லுகிறாரோ, அதன்படி செய்யுங்கள் அற்புதம் நடக்கும். குறைவு நிறைவாகும். உங்களது நிறைவாக கர்த்தர் செய்யவேண்டியது இன்னும் ஒன்றுமில்லை நீங்கள் செய்ய வேண்டியதுதான். இன்னும் இருக்கிறது. கர்த்தர் சொல்லும் சில காரியங்களுக்குக் கீழ்படிய மனமில்லாமல் நீங்கள் இருப்பதினால் குறைவு நிறைவாகாமல் இருக்கிறது. உங்கள் குறைவுக்குக் காரணம்

கர்த்தர் ஜெபத்தைக் கேட்காதது அல்ல. நீங்கள் கீழ்படியாமலிருப்பதே ஆகும். எதிர்காலத்தைக் குறித்து யோசிக்காதிர்கள். மற்றவர்கள் என்ன நினைப்பார்களோ என்று நினைக்காதிர்கள். உங்கள் மூளையிலும் கணக்கு போடாதிர்கள். கர்த்தர் என்ன சொல்லுகிறாரோ அதன்படி செய்யுங்கள். குறைவு நிறைவாகும்." குடும்பம் நிறைவுபெறும். உங்கள்கீழ்ப்படிதலே அற்புதத்தை அனுபவிக்க வைக்கும், உங்கள் கீழ்ப்படிதல் இயேசுவின் அற்புதத்தை நிகழவைக்கும் பொத்தானாகும்.

**கீழ்படிவது கஷ்டம்:-**

சில சமயங்களில் கர்த்தருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிவது, நமது அறிவின்படி கஷ்டமானதாக இருக்கலாம். திராட்சரசம் குறைவை நீக்க கர்த்தர் தண்ணீரை, வெளியில் கைகால் கழுவ பயன்படுத்தும் தண்ணீர் வைக்கப்படும் தொட்டிகளில் ஊற்ற சொன்னார். திராட்சரசமாக மாற்ற எதையும் செய்யாமல், ஊற்றிய தண்ணீரை ஊற்றினவர்களே கொண்டு போய் கொடுக்க சொல்லுகிறார். தண்ணீரை எப்படி திராட்சரசமாக கொடுப்பது என்று வேலைக்காரர்கள் யோசிக்கவில்லை. அறிவை பயன்படுத்தவில்லை. தண்ணீரைப் பார்க்கவில்லை. இயேசுவின் வார்த்தைகளை மட்டும் நம்பி கீழ்ப்படிந்தார்கள். என்ன அற்புதம்! அற்புதத்தைக் காண்பதற்குமுன் கீழ்ப்படிந்தார்கள்.

பிரவாகித்து கரைபுரண்டுபோன யோர்தான் கர்த்தருடைய வார்த்தையால் இரண்டாக பிரியவில்லை. கர்த்தர் சொன்னபடி கீழ்படிந்து வெள்ளமாகப் விரைந்து ஓடின. தண்ணீர் மீது தைரியமாக உள்ளங்கால்களை ஆசாரியர்கள் வைத்தபோதுதான், யோர்தான் இரண்டாக பிரிந்து, உலர்ந்த தரையாக மாறி, இஸ்ரவேலர் கடந்து போக பாதையானது. யோர்தான் இரண்டாக பிரிந்த அற்புதம் கர்த்தருடைய வார்த்தைக்கு ஆசாரியர்கள் கீழ்ப்படிந்ததினால்தான் நடந்தது (யோசுவா 3:8, 15:17).

**எனது அனுபவம்:-**

1976-ம் ஆண்டு இறுதியில் கர்த்தர் அடிமையிடம் வேலையை ராஜினமா செய்யும்படி கூறினார். தயங்கினேன். எனது தகப்பனார் ஆறு மாதங்களில் வேலையிலிருந்து ஓய்வு பெறவிருந்தார். தங்கையின் திருமணம் நடைபெற வேண்டியதாக இருந்தது. தம்பி பயிற்சியில் இருந்தான். கடைசி தங்கை படித்துக் கொண்டிருந்தாள். சொந்த வீடு இல்லை. வயல் இல்லை. பேங்கில் பணம் இல்லை. சேமிப்பு இல்லை. ஓய்வுபெறும் அப்பாவுக்கு மொத்தமாக பத்தாயிரமே வரும். நான் குடும்பத்தின் தற்போதைய மூத்த மகன். குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்கவிருந்த நான் வேலையை விட்டால் முட்டாள்தனமாக இருக்குமே. இவ்வித சூழ்நிலையில் ஆண்டவர் அழைத்தார். குறைவு உள்ள இந்த சமயத்தில் எப்படி கீழ்ப்படிவது, இருவர் வேலை பார்த்தே பற்றாக்குறை. அப்படியிருக்க இருவரும் வேலையில்லாமல் இருந்தால் எப்படி காரியம் நடக்கும். யோசித்ததால் கீழ்ப்படிய முடியவில்லை. இறுதியில் என் அறிவுக்கு கீழ்ப்படியாமல் என் ஆண்டவரின் வார்த்தைக்குக் கீழ்ப்படிந்தேன்.

கீழ்ப்படிந்து எட்டு ஆண்டுகள் ஆகின்றன. ஆண்டவரின் அற்புதம் எல்லா குறைவுகளையும் நிறைவாக்கிற்று. தங்கையின் திருமணம் நடந்தது. தம்பியின் பயிற்சி முடிந்தது. அல்லேலூயா!

கடைசி தங்கை B. Sc, B. Ed முடித்தாள். சென்னையில் ஒரு சிறிய சொந்த வீடு உண்டானது.

சுருக்கச் சொன்னால் நான் வேலையை விட்டபின்புதான், என் அப்பா ஓய்வுபெற்ற பின்புதான் எங்கள் குறைவு நிறைவாகியது. கீழ்ப்படிதல் குறைவை நிறைவாக்குகிறது.

குடும்பங்களின் குறைவு நிறைவாக கீழ்ப்படியுங்கள். கர்த்தரின் வார்த்தையின்படி குடும்பத்தில் கீழ்ப்படிதல் காணப்படட்டும். குறைவுகள் அற்புதமாக நிறைவாகும் அல்லேலூயா!

கீழ்ப்படியும் குடும்பம் குறைவு நீங்கி நிறைவுடன் வாழும். அல்லேலூயா!

**குடும்பத்தின் குறைவுகள் இயேசுவினால் நிறைவாகும்.**

## அத்தியாயம் 6

# கர்த்தரையே சேவித்தல்!

ரோமர் 12:11-ல் ''அசதியாயிராமல் ஜாக்கிரதையாயிருங்கள், ஆவியிலே அனலாயிருங்கள், கர்த்தருக்கு ஊழியம் செய்யுங்கள்'' என்று வாசிக்கிறோம். நாம் ஊழியம் செய்வதற்கே இரட்சிக்கப்பட்டிருக்கிறோம். மறுபடியும் பிறந்த ஒவ்வொரு தேவனுடைய பிள்ளைகளையும் கர்த்தரை சேவிக்க வேண்டும். யோசுவாவின் அறிக்கையோ, தான் தன் வீட்டாருடன் கர்த்தரைச் சேவிப்பதே. (யோசுவா 24:15) ல் சொல்லுகிறார், ''நானும் என் வீட்டாருமோவென்றால் கர்த்தரையே சேவிப்போம்".

தேவனுடைய வசனத்திலிருந்து நாம் கர்த்தரை எப்படிச் சேவிக்க வேண்டும் என்பதை சுருக்கமாய் பார்ப்போம்.

### 1. கர்த்தரையே சேவியுங்கள்:-

முதன் முதலாக நாம் கர்த்தரையே சேவிப்பதை தீர்மானித்து தெரிந்தெடுக்க வேண்டும். யோசுவா தைரியமாய் அறிவிக்கிறார், ''நானும் என் வீட்டாருமோவென்றால் கர்த்தரையே சேவிப்போம்'' (யோசு. 24:15). ஆம்; நாம் கர்த்தரை மாத்திரம் சேவிக்க வேண்டும். நாங்கள் கர்த்தரையும் சேவிப்போம் என்று சொல்லுகிறவர்களும் சிலர் இருக்கிறார்கள். அதாவது, கர்த்தரை சேவிப்பதோடு வேறு யாரையும் சேவிப்பது என்று அர்த்தம். இது கூடாத காரியம்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சொன்னார், ''இரண்டு எஜமான்களுக்கு ஊழியம் செய்ய ஒருவனாலும் கூடாது; ஒருவனைப் பகைத்து மற்றவனைச் சிநேகிப்பான், அல்லது ஒருவனைப் பற்றிக் கொண்டு மற்றவனை அசட்டைபண்ணுவான்; தேவனுக்கும் உலகப் பொருளுக்கும் ஊழியம் செய்ய உங்களால் கூடாது'' (மத். 6:24). உலகத்தில் இரண்டு எஜமான்கள் உண்டு. ஒருவர் கர்த்தராகிய இயேசுகிறிஸ்து, மற்றது பிசாசு, அல்லது உலகம். நாம்

ஒருபோதும் இருவருக்கும் பிரியமாக நடக்க முடியாது. நீங்கள் ஒருவரை நேசித்து மற்றவரை வெறுக்க வேண்டும். அல்லது ஒருவரைப் பற்றிக் கொண்டு மற்றவரை அசட்டை பண்ண வேண்டும். நீ இயேசுவில் அன்பு வைத்து அவரைப் பற்றிக் கொண்டிருக்கிறாயா?

**2. முழு இருதயத்தோடும் கர்த்தரைச் சேவியுங்கள்:-**

இரண்டாவது, நாம் முழு இருதயத்தோடும் கர்த்தரைச் சேவிக்க வேண்டும் (உபா. 10:12)-ல் நாம் வாசிக்கிறோம்.

''இப்பொழுதும் இஸ்ரவேலே, நீ உன் தேவனாகிய கர்த்தருக்குப் பயந்து, அவர் வழிகளிலெல்லாம் நடந்து அவரிடத்தில் அன்பு கூர்ந்து, உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும் உன் தேவனாகிய கர்த்தரைச் சேவி''. உன் முழு இருதயத்தோடும் சேவிக்க வேண்டுமென்றே தேவன் எதிர்பார்க்கிறார். அரை மனதுடன் அல்ல, ஆனால் உன்னுடைய முழு மனதுடனே சேவிக்க வேண்டும். சாதாரணமாக குழந்தைகள், நாங்கள் 35% மதிப்பெண் எடுத்தால் மேல் வகுப்புக்கு மாற்றப்படுவார்கள் என்று சொல்வது வழக்கம். நம்முடைய தேவன் வைராக்கியமுள்ள தேவன். அவருக்கு நம்முடைய முழு இருதயமும் வேண்டும். நம்முடைய இருதயத்தின் 99% அல்ல, நம்முடைய இருதயத்தின் 100% தேவன் விரும்புகிறார். (கொலோ. 3:24)-ல் நாம் வாசிக்கிறோம், ''எதைச் செய்தாலும் அதை மனுஷருக்கென்று செய்யாமல் கர்த்தருக்கென்றே மனப்பூர்வமாய்ச் செய்யுங்கள்''. ஆகையால் நீ உன் முழு இருதயத்தோடும் கர்த்தரைச் சேவிக்க வேண்டும். மேலும் சத்திய வேதம் (I சாமு. 12:24) கூறுகிறது, ''நீங்கள் எப்படியும் கர்த்தருக்குப் பயந்து உங்கள் முழு இருதயத்தோடும் உண்மையாய் அவரைச் சேவிக்கக்கடவீர்கள்''.

**3. பயத்துடன் கர்த்தரைச் சேவியுங்கள்:-**

மூன்றாவது, நாம் பயத்துடன் கர்த்தரைச் சேவிக்க வேண்டும். சத்திய வேதம் சொல்லுகிறது (சங். 2:11);

"'பயத்துடனே கர்த்தரைச் சேவியுங்கள், நடுக்கத்துடனே களிகூருங்கள்". நாம் பயத்துடன் கர்த்தரைச் சேவிக்க வேண்டும். தேவன் நம்மை நரகத்துக்கு அனுப்பிவிடுவார் என்ற அந்த பயம் அல்ல, கனத்திற்குரிய பயம். ஒவ்வொரு கிறிஸ்தவனும் பயத்துடன் கர்த்தரைச் சேவிக்கக் கடமைப் பட்டவன். நாட்கள் செல்லச் செல்ல தேவ பயம் ஒரு விசுவாசியிடமிருந்தோ, அல்லது ஒரு தேவனுடைய ஊழியக்காரனிடமிருந்தோ மறைந்து கடைசியில் கொஞ்சம் கொஞ்சமாக இல்லாமலேயே போய்விடுகிறது என்பது மிகத் துக்கமான காரியம். நீ கிறிஸ்துவுக்குள் வளரும்போது நாளுக்கு நாள் தெய்வ பயம் கூடவேண்டும். எந்தவிதத்திலும் பயம் குறையக் கூடாது. வேதம் கூறுகிறது (நீதி. 8:1-3). ''தீமையை வெறுப்பதே கர்த்தருக்குப் பயப்படும் பயம்''. இந்த உலகத்திலுள்ள தீமையை வெறுப்பதற்குள்ள கிருபையை கர்த்தர் நமக்குக் கொடுப்பாராக. அதுதான் கர்த்தருக்குப் பயப்படும் பயம். யோசுவாவும் இதைத்தான் கூறுகிறார் (யோசு. 24:15).

''இப்பொழுது கர்த்தருக்குப் பயந்து அவரைச் சேவியுங் யுங்கள்'' ஆகையால் நாம் பயத்துடன் கர்த்தரைச் சேவிக்க கற்றுக்கொள்வோமாக.

**சுத்த இருதயத்தோடு, முழு மனதோடு கர்த்தரைச் சேவியுங்கள்:-**

நான்காவது, நாம் உத்தம இருதயத்தோடும், உற்சாக மனதோடும் கர்த்தரைச் சேவிக்கவேண்டும். நாம் அசுத்த இருதயத்தோடு அவரைச் சேவிக்கக்கூடாது. உத்தம இருதயத்தோடு கர்த்தரைச்சேவிக்கவேண்டும் என்று, தாவீது தன் மகன் சாலொமோனுக்கு புத்தி சொல்லுகிறார் (1 நாளா 28:9). ''உத்தமமும், உண்மையுமாய் கர்த்தரைச் சேவியுங்கள்" என்று யோசுவா கூறுகிறார் (யோசு 24:14). மனுஷருக்கென்று ஊழியஞ்செய்யாமல் கர்த்தருக்கென்று நல் மனதோடே ஊழியஞ் செய்யுங்கள் என்று பவுல் கூறுகிறார். உத்தம இருதயத்தோடும், உற்சாக மனதோடும் கர்த்தரைச் சேவிக்க அவர் நமக்கு கிருபை அளிப்பாராக.

**மகிழ்ச்சியுடன் கர்த்தரைச் சேவியுங்கள்:-**

ஐந்தாவது, நாம் மகிழ்ச்சியோடு கர்த்தரைச் சேவிக்க வேண்டும். இதைத்தான் தாவீது சங். 100:2-ல் கூறுகிறார். மகிழ்ச்சியோடே கர்த்தருக்கு ஆராதனை செய்து ஆனந்த சத்தத்தோடே அவர் சந்நிதி முன் வாருங்கள். நாம் மகிழ்ச்சியோடு கர்த்தரைச் சேவிக்க ஆரம்பிக்கும் போது சந்தோஷம் அதிகமாய் பெருகும். கர்த்தரைச் சேவிப்பதில் மகிழ்வது உண்மையிலேயே அற்புதமானது. கர்த்தரைச் சேவிப்பதில் ஈடுபட்டவர்கள் மட்டுமே இந்த சந்தோஷத்தை உணர்வார்கள். மற்றவர்கள் இதை அறிய மாட்டார்கள். நாம் மகிழ்ச்சியோடு கர்த்தரை சேவிப்போமாக.

பிள்ளைகளே, நீங்கள் விக்கிரகங்களுக்கு விலகி உங்களைக் காத்துக்கொள்வீர்களாக என்று, யோவான் விசுவாசிகளுக்குக் கட்டளை கொடுக்கிறார் (I யோ 5:21). நம்மை நாமே ஆராய்ந்து நம்மில் ஏதாவது விக்கிரகங்கள் உண்டா என்று பார்ப்போம்.

**மனத்தாழ்மையோடும் கண்ணீரோடும் கர்த்தரைச் சேவியுங்கள்:-**

கடைசியாக மிகுந்த மனதாழ்மையோடும், கண்ணீரோடும் சேவிக்க வேண்டும். அப்போஸ்தலனாகிய பவுல் இந்த விதமாகவே ஊழியஞ்செய்தார். அவர் எப்படி கர்த்தரை சேவித்தார் என்று சாட்சி கூறுகிறார். வெகு மனத்தாழ்மையோடும், மிகுந்த கண்ணீரோடும் கர்த்தரைச் சேவித்தேன் என்று பவுல் கூறுகிறார் (அப். 20:19). நாம் கர்த்தரைச் சேவிப்பதில் ஈடுபட்டிருப்பது தேவனுடைய கிருபை மாத்திரமே. இதைக் குறித்து நாம் பெருமைப்படத் தேவையில்லை. கர்த்தருடைய அளவற்ற கிருபையால் நாம் இரட்சிக்கப்பட்டிருக்கிறோம் (எபே. 2:8). கர்த்தருடைய இரக்கங்களால் நாம் நிர்மூலமாகாதிருக்கிறோம். தேவனுடைய கிருபையால் நாம் காக்கப்பட்டிருக்கிறோம் (புலம். 3:22). கிருபையால் நாம் கர்த்தரை சேவிக்கிறோம் (I கொரி. 15:10). ஆகையால் நாம் எல்லா தாழ்மையோடும், கண்ணீரோடும் கர்த்தரைச் சேவிப்போம். ஆமென்!

**விக்கிரகங்களைப் புறக்கணித்துவிட்டு கர்த்தரைச் சேவியுங்கள்:-**

ஆறாவது, விக்கிரகங்களைத் தூர எறிந்துவிட்டு கர்த்தரைச் சேவிக்க வேண்டும். உங்கள் பிதாக்கள் நதிக்கு அப்புறத்திலும், எகிப்திலும் சேவித்த தேவர்களை அகற்றி விட்டு, கர்த்தரைச் சேவியுங்கள் என்று யோசுவா சொன்னார் (யோசு 24:14). ஒரு விக்கிரகத்தையும் நான் சேவிக்கவில்லை என்று நீங்கள் சொல்லலாம். ஆனால் தேவனுக்கும் உனக்கும் இடையில் ஏதாவது வந்தால், அது தான் விக்கிரகம் என்று உனக்குத் தெரியுமா? ஜீவனும் சத்தியமுமுள்ள தேவனைச் சேவிப்பதற்கு விக்கிரகங்களை விட்டு தேவனிடத்தில் திரும்பின சிலரைப்பற்றி பவுல் எழுதுகிறார் (1 தெச. 1:9). இவைகள் வெளிப்படையான விக்கிரகங்கள்.

அத்தியாயம் 7

# வீட்டாரை கிறிஸ்துவுக்கென்று ஆதாயப்படுத்துவது எங்ஙனம்?

தேவனுடைய சித்தம் முழுக்குடும்பமும் இரட்சிக்கப்பட்டு, சத்தியத்தை அறியும் அறிவை அடைய வேண்டுமென்பதே. வேதாகமம் முழுவதும் தேவன் முழுக்குடும்பத்தையும் இரட்சிக்க சித்தமுள்ளவராயிருக்கிறார் என்பதைக் காண முடியும்.

தேவன் ஜலப்பிரளயத்தினாலே பூமியிலுள்ள சகல ஜீவன்களையும் அழிக்கச் சித்தமான சமயம், கர்த்தருடைய கண்களில் கிருபை கிடைத்த நீதிமானும், உத்தமனுமாகிய நோவாவை மாத்திரமல்ல, அவன் வீட்டார் அனைவரையும் இரட்சிக்கச் சித்தமுள்ளவராயிருந்தார் (ஆதி. 6:18, 7:1).

அதுபோலவே சோதோம் கொமோராவின் பாவத்தினிமித்தம் அதை அழிக்கத் தீர்மானித்தபோதும், லோத்தையும் அவன் குடும்பத்தையும் இரட்சிக்கச் சித்தமுள்ளவராயிருந்தாரென்பதைக் காண முடியும் (ஆதி. 19:15,16).

மேலும் எகிப்து தேசத்திலே பஸ்கா ஆட்டுக்குட்டியின் இரத்தம் பூசப்பட்ட வீட்டிலுள்ள அனைவரும் காப்பாற்றப் பட்டார்கள் (யாத். 12 : 13,29). விசுவாசத்தினாலே எரிகோவை வேவு பார்க்கப் போனவர்களை ஏற்றுக்கொண்ட ராகாப் மாத்திரமல்ல, அவளுடைய தகப்பன், தாய், சகோதரர்கள் அனைவரும் அவளுக்குள்ள யாவையும், அவள் குடும்பத்தார் அனைவரோடும் காப்பாற்றப்பட்டார்கள் (யோசுவா 6:17,23).

கர்த்தருடைய பெட்டி கித்தியனாகிய ஓபேத் ஏதோமின் வீட்டிலே மூன்று மாதம் இருக்கையில் கர்த்தர் ஓபேத் ஏதோமையும், அவன் வீட்டார் அனைவரையும் ஆசீர்வதித்

தார் (II சாமு. 6:11). உபவாசித்து ஜெபித்துக் கொண்டிருந்த கொர்நேலியுவினிடத்திலே அனுப்பப்பட்ட தேவ தூதன் சொன்ன செய்தியைக் கவனித்துப் பாருங்கள். "நீயும் உன் வீட்டாரனைவரும் இரட்சிக்கப்படுவதற்கேதுவான வார்த்தைகளைச் சொல்லக்கூடிய பேதுருவை அழைப்பிக்கும்படி கட்டளை பெற்றான்" (அப். 11:14).

இயேசுவைப் பார்க்க விரும்பிய சகேயுவின் வீட்டில் தங்க விருப்பம் தெரிவித்த இயேசுவை, சந்தோஷத்தோடே அழைத்துச் சென்ற சகேயுவை மாத்திரமல்ல, அவன் முழுக் குடும்பத்தையும் இரட்சித்தார். இன்றைக்கு இந்த வீட்டுக்கு (வீட்டாருக்கு) இரட்சிப்பு வந்தது என்றார் (லூக். 19:9).

பவுலையும், சீலாவையும் பார்த்து, "ஆண்டவமாரே இரட்சிக்கப்படுவதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்ட சிறைச்சாலைக் காரனுக்குச் சொல்லப்பட்ட பதில் என்ன? "கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி; அப்பொழுது நீயும், உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள்" (அப். 16:11). இரட்சிக்கப்பட நான் என்ன செய்ய வேண்டுமென்று கேட்டானேயொழிய, தன் வீட்டாரைப் பற்றிச் சிறைச்சாலைக்காரன் கேட்கவில்லை. ஆயினும் பரிசுத்த ஆவியானவர் பவுல், சீலா மூலமாய் சொன்ன பதிலிருந்து விசுவாசிக்கிறவனுடைய வீட்டாரனைவரையும் இரட்சிக்க கர்த்தர் சித்தமுள்ளவராயிருக்கிறார் என்றும், வீட்டார் அனைவரும் இரட்சிக்கப்படுவார்கள் என்றும் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

மேற்கூறப்பட்ட இத்தனை சம்பவங்களிலிருந்தும், தேவன் விசுவாசிக்கிறவர்களுடைய முழுக்குடும்பத்தையும் இரட்சிக்க சித்தமுள்ளவராயிருக்கிறார் என்றும், வீட்டார் அனைவரும் இரட்சிக்கப்படுவார்கள் என்பதும் திட்டவட்டமாக அறிந்து கொள்ளுகிறோம்.

**வீட்டார் இரட்சிக்கப்பட நாம் என்ன செய்ய வேண்டும்?**

முதலாவதாக கர்த்தரையும், அவருடைய வார்த்தைகளையும் (வாக்குத்தத்தங்களையும்) விசுவாசிக்க வேண்டும்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி; அப்பொழுது நீயும் உன்வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்ற வாக்குத்தத்தத்தை விசுவாசத்தோடு பிடித்துக் கொள்ள வேண்டும்.

''அவிசுவாசியான புருஷன் தன் மனைவியால் பரிசுத்தமாக்கப்படுகிறான். அவிசுவாசியான மனைவியும் தன் புருஷனால் பரிசுத்தமாக்கப்படுகிறாள்'' (1 கொரி. 7:14) என்ற தேவ வார்த்தையை அப்படியே விசுவாசிக்கவேண்டும். இரட்சிக்கப்படாத புருஷர்கள் பயபக்தியோடுகூடிய மனைவியின் நடக்கையைப் பார்த்து போதனையின்றி மனைவிகளின் நடக்கையினாலேயே ஆதாயப்படுத்திக் கொள்ளப்படுவார்கள் (1 பேதுரு 3:1,2). என்ற திட்டவட்டமான வாக்குத்தத்தத்தை அப்படியே விசுவாசிக்க வேண்டும். (ஒரு வேளை இரட்சிக்கப்பட்டாலும் படலாம் என்ற சந்தேகத்தில் அல்ல) இரட்சிக்கப்படாத மனைவியோ, புருஷனோ, பெற்றோரோ, சகோதர, சகோதரிகளோ, பிள்ளைகளோ யாராயிருந்தாலும் இவர்கள் உங்கள் வீட்டாராயிருப்பதினால் மாறாத தேவனுடைய வாக்குத்தத்தத்தின்படி அவர்கள் இரட்சிக்கப்படுவார்கள் என்பதை முழுமனதோடே விசுவாசிக்க வேண்டும்.

தன் வீட்டாரோடு இரட்சிக்கப்பட்ட ராகாப் என்னும் வேசி கர்த்தரே உயர வானத்திலும், கீழ பூமியிலும் தேவனானவர் என்றும், இஸ்ரவேலரிடத்திலே எரிகோவைத் தேவன் ஒப்புக்கொடுத்தாரென்றும் முன்பே விசுவாசித்தாள். வீட்டாரனைவரோடுங்கூட இரட்சிக்கப்பட்டாள்.

சில இரட்சிக்கப்பட்ட சகோதரிகள் சொல்லுவதைக் கேட்டிருக்கிறேன், ''என் புருஷன் ஒரு நாளும் இரட்சிக்கப்பட மாட்டார்'' என்பார்கள். ஒரு வேளை அவர்களுடைய நிலைமையைப் பார்த்து இப்படிச் சொல்லுகிறார்களோ தெரியவில்லை. ஆனால் எப்படிப்பட்டவர்களையும் கர்த்தர் இரட்சிக்க வல்லவர் என்பதை நாம் விசுவாசிக்கவேண்டும். சூழ்நிலையை பார்க்காமல் எந்த மனுஷனையும் (மனுஷியையும்) பிரகாசிப்பிக்க வல்லவர், வாக்கு மாறாதவர் என்பதை விசுவாசித்து அறிக்கை செய்ய வேண்டும்.

இரண்டாவதாக, நம்முடைய விசுவாசத்தைக் கிரியையிலே காண்பிக்க வேண்டும். ஏனெனில் கிரியையில்லாத விசுவாசம் செத்ததாயிருக்கிறது (யாக். 2:17,26). ராகாப் என்னும் வேசி கர்த்தரையும், அவருடைய வல்லமையையும் விசுவாசித்தாள். விசுவாசத்தினாலே ராகாப் என்னும் வேசி வேவுகாரரைச் சமாதானத்தோடே ஏற்றுக்கொண்டு கீழ்ப்படியாதவர்களோடே கூடச் சேதமாகாதிருந்தாள் (எபி. 11:32). வேவு பார்க்கப் போனவர்கள் ராகாபை நோக்கி:இதோ நாங்கள் தேசத்துக்குள் பிரவேசிக்கும்போது, நீ இந்த சிவப்பு நூல் கயிற்றை எங்களை இறக்கிவிட்ட ஜன்னலிலே கட்டி, உன் தகப்பனையும், உன் தாயையும் உன் சகோதரர்களையும், உன் தகப்பன் குடும்பத்தார் அனைவரையும் உன்னிடத்திலே உன் வீட்டில் சேர்த்துக்கொள் என்று சொல்லியிருந்தபடி (யோசு 2:17), அவன் செய்தபடியினால் பட்டணத்தை அக்கினியால் சுட்டெரிக்கும் முன்பாக ராகாபையும் அவள் தகப்பனையும், அவள் தாயையும், சகோதரர்களையும், அவளுக்குள்ள யாவையும், அவள் குடும்பத்தார் அனைவரையும் வெளியே அழைத்துக் கொண்டு வந்து, அவர்களை இஸ்ரவேல் பாளயத்துக்கும் புறம்பே இருக்கும்படி பண்ணினார்கள். அவள் இந்நாள் வரைக்கும் இஸ்ரவேலின் நடுவே குடியிருக்கிறாள் (யோசு 6:23:25).

தேவபிள்ளையே, ஒரு வேளை அவள் நிறைவேற்ற வேண்டிய பங்கை நிறைவேற்ற சோம்பலாய், அசதியாய் இருந்திருப்பாளென்றால் அவளும், அவள் வீட்டார் அனைவரும் அக்கினியால் சுட்டெரிக்கப்பட்டிருப்பார்கள். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். அவள் தன் பங்கை தன்னால் செய்ய முடிந்ததைச் செய்யத் தவறவில்லை.

இரட்சிக்கப்படாத நம்முடைய வீட்டாரை இரட்சிக்கும்படி நாம் கர்த்தரிடம் ஜெபிக்க வேண்டும். அதை நம்மால் செய்ய முடியும். எனக்குத் தெரிந்த இரட்சிக்கப்பட்ட ஒருவருடைய குடும்பத்தில் பல வருடங்கள் ஆகியும், ஒருவரும் இரட்சிக்கப்படாததற்கு காரணம் அவர் ஜீவனுள்ள தேவன் மேல் வைத்திருக்கிற விசுவாசத்தைக் கிரியையில் காண்பிக்

காதபடியினாலும், சாட்சியாக தான் முன் மாதிரியாக ஜீவிக்காதபடியினாலும் தான்.

மூன்றாவதாக, சுவிசேஷ ஊழியம் செய்த பிலிப்புவுக்கு, தீர்க்கதரிசனஞ் சொல்லுகிற கன்னியாஸ்திரீகளாகிய நாலு குமாரத்திகள் இருந்ததாக வாசிக்கிறோம் (அப். 21:9).

அவன் பரிசுத்த ஆவியும், ஞானமும் நிறைந்து, நற்சாட்சி பெற்றிருந்தவன் எனக் காண்கிறோம் (அப் 6:3). வீட்டாரை கிறிஸ்துவுக்கென்று ஆதாயப் படுத்துவதற்கு சுவிசேஷ ஊழியம் செய்தால், போதுமானதல்ல, நற்சாட்சியுள்ள வாழ்க்கை மிக அவசியம். வீட்டிலும், வேலை பார்க்கிற இடத்திலும் நற்சாட்சி பெற்றிருந்த கொர்நேலியுவின் வீட்டார் மாத்திரமல்ல, வேலைக்காரரும், போர்ச்சேவகரும், உறவின் முறையாரும், விசேஷித்த நண்பர்களும் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டு ஞானஸ்நானம் பெற்றார்கள் என்று பார்க்கிறோம் (அப் 10:22,44).

தேவபிள்ளையே, இரட்சிக்கப்படாத உன் வீட்டாருக்கு முன்பாக நற்சாட்சியுள்ள வாழ்க்கை செய்வீர்களானால், அவர்கள் அனைவரும் இரட்சிக்கப்படுவது நிச்சயம்.

எங்கள் வீட்டில் வேலைக்கு இரட்சிக்கப்படாத கத்தோலிக்க சகோதரி வந்தார்கள். என் மனைவியிடம் நான் சொன்ன காரியம் என்னவென்றால், எப்படியும் அச்சகோதரியை ஆதாயப்படுத்துவதற்கு நாம் சாட்சியாக நடந்து கொள்ள வேண்டும் என்றேன். என் மனைவி அப்படியே மிகச் சீக்கிரத்தில் அச்சகோதரியை ஆதாயப்படுத்தி விட்டார்கள். அச்சகோதரி இரட்சிக்கப்பட்டு, ஞானஸ்நானம் பெற்று, தன் கணவரையும் ஆதாயப்படுத்தி விட்டார்கள்.

நான்காவதாக, நம் வீட்டார் இரட்சிக்கப்படுவதற்காக நாம் இரட்சிப்பின் வழியை அறிவிக்கிற தேவ ஊழியர்களை, நம்முடைய வீட்டில் ஏற்றுக்கொள்ளுகிறவர்களாயும், அவர்களை உபசரிக்கிறவர்களாயும், அவர்களுக்கு உதவி செய்

கிறவர்களாயும் இருக்கும்போது, கர்த்தர் வீட்டார் அனைவரையும் இரட்சிப்பது உண்மை.

வீட்டாரனைவரோடு இரட்சிக்கப்பட்டு ஞானஸ்நானம் பெற்ற லீதியாள் பவுலையும், அவருடன் இருந்தவர்களை என் வீட்டிலே வந்து தங்கியிருங்கள் என்று வருந்திக் கேட்டுக் கொண்டாள் என்று வாசிக்கிறோம் (அப் 16:15).

வீட்டாரனைவரோடு இரட்சிக்கப்பட்டு ஞானஸ்நானம் பெற்ற சிறைச்சாலைக்காரன், நடுராத்திரியிலே பவுலையும், சீலாவையும் வீட்டிற்கு அழைத்துக் கொண்டுபோய், அவர்களுக்கு போஜனங்கொடுத்து, தன் வீட்டார் அனைவரோடுங் கூடத் தேவனிடத்தில் விசுவாசமுள்ளவனாய் மனமகிழ்ச்சியாயிருந்தான (அப் 16:34).

உண்மையான ஊழியர்களை ஏற்றுக்கொண்டு உபசரிக்கிற குடும்பம், முழுவதும் இரட்சிக்கப்படாமற் போவதில்லை.

நாங்கள் பல தேவனுடைய ஊழியக்காரர்களாய் இராமேசுவரம் பாம்பனில் சுவிசேஷக்கூட்டங்களினிமித்தம் சென்றிருந்த சமயம், இரட்சிக்கப்படாத கத்தோலிக்க சகோதரர், எங்களை ஏற்றுக்கொண்டு, எங்களுக்கு அளித்த உபசரிப்பு கொஞ்சமல்ல. அன்றே நான் மற்றவர்களிடம் இந்தக் குடும்பம் முழுவதும் இரட்சிக்கப்படுவது நிச்சயம் என்று விசுவாசத்தோடே சொன்னேன். அப்படியே அந்த சகோதரரும், அவரது மனைவியும் இரட்சிக்கப்பட்டு, அபிஷேகம் பெற்று இன்று விசுவாசிகளாய் இருக்கிறார்கள்.

ஐந்தாவதாக, நாம் அறிந்த சத்தியத்திற்கு கர்த்தரிடத்தில் நாம் உண்மையாயிருக்க வேண்டும். ஆற்றினருகே ஜெபம் பண்ண போன இடத்தில், உள்ளம் திறக்கப்பட்ட லீதியாள், வீட்டாரையும் ஞானஸ்நானத்திற்கு ஆயத்தப்படுத்தினதாக வாசிக்கிறோம். அவள் சுத்த மனச்சாட்சியோடே, கர்த்தரிடத்தில் உண்மையுள்ளவளென்று எண்ணினால், எங்கள் வீட்டில வந்து தங்கியிருங்கள் என்று பவுல் அப்போஸ்தலனை பார்த்து சொல்லுமளவுக்கு உண்மையாய் இருந்திருக்கிறாள்.

தேவபிள்ளையே, நீங்கள் கர்த்தருக்கு முன்பாக அறிந்த சத்தியத்திற்கு உண்மையாய் இருப்பீர்களானால், உங்கள் வீட்டாரனைவரும் உங்களோடுகூட கர்த்தரைப் பின்பற்று வது உறுதி.

ஆறுவதாக, தன் வீட்டாரையும் தன் உறவின் முறையா ரையும், வேலைக்காரர்களையும், போர்ச்சேவகர்களையும், விசேஷித்த நண்பர்களையும் ஆதாயப்படுத்தின இரகசியம் கர்த்தர் தூதன் மூலம் பேதுருவை அழைப்பிக்கும்படி பெற்ற கட்டளைக்கு உடன் கீழ்ப்படிந்ததுதான். தேவனால் உங்க ளுக்குச் சொல்லப்பட்ட தேவனுடைய வார்த்தைக்கு, சத்தியத்திற்கு உடனடியாக, பூரணமாக கீழ்ப்படியும்போது, நம் வீட்டார் இரட்சிக்கப்படுவது திண்ணம்.

கடைசியாக வீட்டாரை கிறிஸ்துவுக்கென்று ஆதாயப் படுத்த வேண்டுமானால், நம்மை நாம் தாழ்த்துவதற்கு ஆயத்தமாயிருக்க வேண்டும். எப்படியாகிலும் சிலரை இரட்சிக்கும்படி நான் எல்லோருக்கும் எல்லாமானேன் என்ற பவுல் ,நான் அதிக ஜனங்களை ஆதாயப்படுத்திக் கொள்ளும் படி என்னைத் தானே எல்லாருக்கும் அடிமையாக்கினேன் என்கிறார் (I கொரி 9:19,22).

தன் வீட்டாருடைய இரட்சிப்புக்கு கவனமாயிருக்கிற கொர்நேலியு நூற்றுக்கதிபதியாக இருந்தும், பேதுருவைக் கண்டவுடன் அவருக்கு எதிர் கொண்டு போய், அவன் பாதத்தில் விழுந்து, பணிந்து கொண்டான் என்பதை வாசிக் கும் போது (அப். 10:25), எவ்வளவு தாழ்மை உள்ளவராய் இருந்திருக்க வேண்டும் என்று பார்க்கிறோம். நம் வீட்டாரை கிறிஸ்துவுக்கென்று ஆதாயப்படுத்த வேண்டுமானால், அவர் களுக்கு முன்பாக தாழ்மையாக நடந்துகொள்ள வேண்டும்.

மேற் கூறப்பட்ட நிபந்தனைகளை நாம் நிறைவேற்று வோமானால், நாம் அனைவரும் இரட்சிக்கப்படுவது நிச்சயம். ஆமென். கர்த்தர் உண்மையுள்ளவர்.

## அத்தியாயம் 8

# தாம்பத்ய உறவு!

கணவன் மனைவியின் பாலுறவு தேவனால் அங்கீகரிக்கப்பட்டது. திருமணம் தேவனால் ஏற்படுத்தப்பட்டதென்றால் பாலுறவும் தேவனால் ஏற்படுத்தப்பட்டதென்பதே பொருள் (எபி. 13:4). பாலுறவை தரக் குறைவாக எண்ணுகிறவர்கள்தான், திருமண வாழ்க்கையை கனவீனமாக எண்ணுகின்றனர். இவர்களைப் பற்றி வேதம் மனச்சாட்சியில் சூடுண்ட பொய்யரென்றும், வஞ்சிக்கிற ஆவியுள்ளவர்களென்றும், பிசாசுகளின் உபதேசமுடையவர்களென்றும் கூறுகின்றது (1 தீமோ. 4:1-3).

**பரிசுத்தவான்களின் உதாரணம்:-**

தேவ சாயலில் படைக்கப்பட்ட பரிசுத்தமான ஆதாமுக்கு, பாவம் பிரவேசிக்குமுன்பாகவே, தேவன் ஏவாளை மனைவியாக கொடுத்தார். பாலுறவு தவறு என்று தேவன் எண்ணியிருந்தால் ஏவாளை சகோதரியாக கொடுத்திருப்பார். "ஆதாம் சேத்தைப் பெற்றபின் எண்ணூறு வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும் குமாரத்திகளையும் பெற்றான்" (ஆதி. 5:4). அவன் தாம்பத்ய வாழ்வில் தளர்ச்சியடையவில்லை.

மரணத்தைக் காணாமல் எடுத்துக் கொள்ளப்பட்ட பரிசுத்த ஏனோக்கு, முந்நூறு வருடம் தேவனோடு சஞ்சரித்துக் கொண்டிருந்தாலும், மனைவியுடன் தாம்பத்ய உறவில் ஈடுபட தவறவில்லை, அதனால்தான் குமாரரையும், குமாரத்திகளையும் பெற்றான். தேவனோடு உறவாடிய நோவா, ஐந்நூறு வயதான போதிலும் "பிரிந்து" வாழாததினால் தான் சேம், காம், யாப்பேத் என்பவர்களைப் பெற்றான். விசுவாசிகளின் தகப்பனாகிய ஆபிரகாம், திருமண வாழ்வில் நெருக்கமாய் இருந்தபடியினால் தான் நூறுவயதிலும் ஈசாக்கைப் பெற முடிந்தது.

ஈசாக்கு, யாக்கோபு, யோசேப்பு, மோசே, யோசுவா, காலேப் பிரதான ஆசாரியனாகிய ஆரோன், சாமுவேல், தாவீது, யோபு, தீர்க்கதரிசிகள் அப்போஸ்தலர் முதற்கொண்டு யாவரும் திருமண வாழ்வில் ஈடுபட்டவர்களே! சிலர் திருமணம் செய்யாமல் இருந்திருக்கலாம். ஆனால் அதை வேதம் மேலான பரிசுத்தம் என கூறவில்லை. விவாக மஞ்சம், அதாவது கணவன் மனைவி பாலுறவு அசுத்தமானதல்ல என்று தேவனே கூறும்போது, தேவனையும் மிஞ்சிப் பரிசுத்தம் பேசுகிறவர்கள், மகா பரிசுத்த ஸ்தலம் தாண்டி கொல்லைப்புறம் சென்ற பரிசுத்தவான்களே.

**பாலுறவை விரும்பாதவர்கள் திருமணம் செய்யக் கூடாது:-**

திருமண வாழ்க்கைக்குத் தகுதியில்லையென்றால் (ஆண், பெண் தன்மையற்றவர்கள்) நீங்கள் திருமணம் செய்து இன்னொருவருடைய வாழ்க்கையை கெடுக்கக் கூடாது. வெளிப்படையாகக் கூறி ஒதுங்கிவிட வேண்டும். இதுபோலவே கணவன் மனைவி தாம்பத்ய உறவு தவறு என்ற கருத்துடையவர்கள், திருமணம் செய்து இன்னொருவருடைய வாழ்க்கையை வீணாக்கக் கூடாது. இப்படிப்பட்ட கருத்துடையவர்களைத் திருமணம் செய்து கொண்டவர்களுடைய குடும்பம், எப்போதும் பிரச்சினைகள்தான். பாலுறவினால் ஒருவர் திருப்தியடையாவிட்டால் வேறு எதிலும் நிம்மதியாக இருக்க மாட்டார்.

## கணவன் மனைவி பாலுறவு சம்பந்தமாக எழும் பிரச்சினைகளுக்கு சில அடிப்படைக் காரணங்கள்

1. **உடற்கூறு சம்பந்தமான காரணங்கள்:-**

   1. ஆண், பெண் தன்மையற்றவர்களாயிருத்தல்
   2. அளவுக்கு மீறி உடல் பருத்து பாலுறவில் நாட்டமின்மை.
   3. தாம்பத்திய உறவுக்கு தடையான வியாதிகள்.

இப்படிப்பட்டவர்கள் திருமணம் செய்யக் கூடாது. இப்படிப்பட்டவர்களைத் திருமணம் செய்திருந்தால், போதகரோடும், அனுபவமுள்ளவர்களோடும் ஆலோசித்து ஆவன செய்யுங்கள். வெளிச் சொல்ல வெட்கப்பட்டு வாழ்க்கையை கெடுத்துக் கொள்ள வேண்டாம்.

**2. மனோதத்துவ காரணங்கள்:-**

உடலுறவைப் பற்றிய பயம், சந்தேகம், வெறுப்பு உடையவர்கள் அநேகருண்டு. இப்படிப்பட்டவர்களைத் திருமணம் செய்துள்ளவர்கள் மிகுந்த வேதனைகளுக்கு மத்தியில் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். முதல் பரிகாரம் கணவனும் மனைவியும், இதைக் குறித்து வெளிப்படையாகப் பேச நேரம் எடுக்க வேண்டும். அதிலும் தெளிவடையாவிட்டால், ஆண்கள் நல்ல குடும்ப வாழ்க்கை செய்யும் ஆண்களிடமும், பெண்கள் நல்ல குடும்ப வாழ்க்கை செய்யும் பெண்களிடமும் மனம் திறந்து பேசி தெளிவடைய வேண்டும்.

**3. ஆவிக்குரிய காரணங்கள்:-**

திருமண வாழ்க்கையும், தாம்பத்ய உறவும் பரிசுத்தக் குறைவானது, மாம்சத்திற்குரியது என்ற போதனையை கேட்டுப் பழகினவர்களைத் திருமணம் செய்யும்போது, பிரச்சினை உண்டாகிறது. குளிப்பதும், துணி உடுத்துவதும், தண்ணீர் குடிப்பதும், புசிப்பதும், படுப்பதும், வேலைக்குப் போவதும், உலகப் பொருளை காணிக்கையாகக் கொடுப்பதும், வாங்குவதும் மாம்சத்திற்குரியதுதான். பின்பு பரிசுத்தம் பேசும் இவர்கள், மேற்சொன்னவைகளை ஏன் செய்ய வேண்டும்? வேதத்தை விளங்காதவர்கள் போதிக்கும் விளங்காத போதனைகள். போதனை மட்டும் விளங்காததல்ல, போதிக்கிறவர்களும் விளங்க மாட்டார்கள். இப்படிப்பட்ட கருத்துடையவர்களை திருமணம் செய்து கொண்ட விசுவாசிகள் மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல், துப்பவும் முடியாமல் திண்டாடிக் கொண்டிருக்கின்றனர். இப்படிப்பட்டவர்களைத் திருமணம் செய்தால்

வாழ்க்கையில் வெந்து, நடத்தையில்பின் மாற்றம் அடைந்தவர்களும் உண்டு. தெளிவான போதனைகளைக் கேட்டு சீர் திருந்துங்கள். திருமணம் செய்யாதவர்களிடம் போய் யோசனை கேட்காதீர்கள், அவர்கள் குட்டையை குழப்பி விடுவார்கள்.

4. பழைய பால பழக்க வழக்கங்களினால் ஏற்பட்ட விளைவுகள் காரணமாகவும்:-

   1. ஒரு பால் சேர்க்கையில் பழக்கப்பட்டவர்கள் (ஆணுடன் ஆண், பெண்ணுடன் பெண்)

   2. சுய புணர்ச்சி

   3. குடியினால், போதைப் பொருட்களை உட்கொண்டதால் கெட்டுப் போன நிலை.

   4. வேசித்தனம்.

இப்படிப்பட்ட தீய பழக்கங்களினால் முன்போ (அல்லது பின்போ) ஈடுபட்டிருந்தால், இதனால் தாம்பத்ய உறவு திருப்தியாயிருக்காது. இத்தகைய தீய பழக்கங்கள் திருமணத்திற்குப் பின்னும் நீடிக்கக் கூடிய ஆபத்துக்கள் உண்டு. இவை அசுத்த ஆவியினால் உண்டானவை, உபவாசித்து, ஜெபித்து இவைகளை மேற்கொள்ள வேண்டும். இவைகளைக் குறித்து பரிசுத்தவான்களுடன் மனம் திறந்து பேசி, ஜெபித்து ஜெயம் பெற முயற்சிக்க வேண்டும்.

**கணவன் மனைவியின் மகிழ்ச்சியான தாம்பத்ய உறவுக்கு இடையூறானவைகள்:-**

1. கர்ப்பம் தரித்து விடுமோ (அடுத்த குழந்தை பிறந்து விடுமோ) என்ற பயம்.

2. அதிக வேலையின் அலுப்பு, களைப்பு-எனவே இதற்கு நேரமில்லை என்பது.

3. கணவன் மனைவி தனித்திருக்க போதிய இடமில்லை.

4. சண்டை, மனவருத்தம் அதனால் ''ஸ்டிரைக்"

5. கணவன் மனைவி வயதில் வித்தியாசம்.
(ஒருவருக்கு விருப்பம், மற்றவருக்கு இயலவில்லை)

6. அடிக்கடி வரும் வியாதிகள்.

7. ஒருவரைப் பற்றி மற்றவருக்கு சந்தேகம்.

8. புருஷனைவிட (அல்லது மனைவியைவிட) பிள்ளைகளை அதிகம் நேசித்தல்.

9. உடல் சுத்தக் குறைவு.

10. வேலையினாலோ, வேறு காரணங்களினாலோ, படுக்கைக்கு செல்வதில் நேர வித்தியாசம்.

(இவைகளுக்குச் சரியாக பரிகாரம் கூற முடியும். ஆயினும் மிக வெளிப்படையாய் எழுத விரும்பவில்லை. தேவைப்பட்டவர்கள் எழுதினால் ஆலோசனை கொடுக்கப் படும்).

**வெற்றியான தாம்பத்திய உறவிற்கு 10 கட்டளைகள்:-**

1. உங்கள் சரீரத்திற்கு அதிகாரி உங்கள் கணவன் (அல்லது மனைவி) என்பதை உணர்ந்து செயல் படுங்கள்.

2. உங்கள் கணவனை (அல்லது மனைவியை) தாம்பத்ய உறவில் எப்போதும் திருப்தி செய்யுங்கள்.

3. உங்கள் கணவனின் (அல்லது மனைவியின்) விருப் பத்தை நிறைவேற்றுவதில் கவனம் செலுத்துங்கள்.

4. கடமைக்காக அல்ல, அன்பின் உச்சக்கட்டமாக இதை எண்ணுங்கள்.

5. என்ன மனஸ்தாபங்கள் இருந்தாலும் "சூரியன் அஸ்தமிக்கும் முன்" (படுக்கைக்குப் போகுமுன்) எரிச்சலைத் தணியுங்கள்.

6. உபவாசத்திற்காக சில நாட்கள் பிரிந்திருக்க விரும் பினால் இருவரும் கலந்தாலோசித்த பின் செய் யுங்கள்.

7. இன்னொருவரை மனதாலும் எண்ணாதிருங்கள்.

8. உடலை சுத்தமாக வைத்துக் கொள்ள கவனம் செலுத்துங்கள்.

9. வயது கூடினாலும் ஒருவருக்கொருவர் கவர்ச்சியாயிருக்க கற்றுக் கொள்ளுங்கள்.

10. வேலை தெரியாமல் பிரச்சினையைப் பேசி காரியத்தை கெடாதிருங்கள்.

இன்னும் பல காரியங்களை ஆலோசனையாக எழுத விரும்பினாலும், வெளிப்படையாக எழுதுவதை உசிதமாக எண்ணாததால் இத்துடன் நிறுத்திக்கொள்கிறோம். இதை வாசித்து உங்கள் குடும்ப வாழ்க்கையில் செயல்படுத்துங்கள்.

அத்தியாயம் 9

# குடும்ப வாழ்வில் வரும் மோசங்கள்!

குடும்ப வாழ்க்கையின் பல்வேறு கோணங்களை நாம் ஆராய்ந்து வருகிறோம். இக்கட்டுரையின் மூலமாக சாத்தான் நமக்கு வைத்திருக்கும் கண்ணிகள் சிலவற்றை சிந்திக்கப் போகிறோம். ஒவ்வொரு காரியத்திற்கும் வேத ஆதாரங்களும் எச்சரிக்கையான சம்பவங்களும் உண்டு. இக்கண்ணிகளுக்கு விலகி வாழ்வோமானால் வாழ்க்கை உண்மையாகவே மிளிரும்.

**பெற்றோரின் பாரபட்சம்:-**

இது விந்தையான வார்த்தை தான். ஆனால் எப்படியோ உண்மையான வார்த்தையாக இருக்கிறது. பிள்ளைகளெல்லாம் தேவன் தந்தவர்கள், அனைவரும் நம்முடையவர்கள். ஆனால் சில சூழ்நிலையில் அங்கே பாரபட்சம் வந்து விடுகிறது. இது குடும்பத்தின் ஒருமனதையும், எதிர்காலத்தையும் பாதிக்கிறது. இக்கொடுமைக்கு காரணம் கணவன் மனைவிக்குள் சரியான திருப்தி உண்டாக்காததே. குடும்ப வாழ்க்கையிலுள்ள குறைவை பிள்ளைகளின் அன்பில் நிறைவாக்க முயலும் பொழுது குறைபாடு தோன்றுகிறது.

வேத புத்தகத்தில் ஈசாக்கின் குடும்பத்தில் இதை தெளிவாய்ப் பார்க்கிறோம். அம்மாவுக்குத் தன் பக்கத்திலிருந்து பழக குணசாலியான ஒருவன் வேண்டும், அதை அவள் யாக்கோபிலே கண்டாள். அவனை அளவுக்கு மிஞ்சி நேசித்தாள். ஈசாக்கு நாவுக்கு அடிமை. ருசிகரமான பதார்த்தம் கொண்டு வரும் ஏசா அவன் இருதயத்துக்கு ஏற்றவன். இதனால் வந்த முடிவென்ன? ஆசீர்வாதம் முழுவதும் யாக்கோபு பெற்றுக் கொண்டான். தன் தம்பியை கொலை செய்ய தகப்பனின் மரண நாளை ஏசா எதிர்நோக்குகிறான். யாக்கோபு வீட்டை விட்டு ஓடுகிறான். தன்னை

நேசித்த தாய் அவனை மறுபடியும் காணவேயில்லை. என்ன பரிதாபம்! நம் குடும்பங்களில் இக்கொடுமை வராமல் காப்போம். நமக்கு கர்த்தர் தந்திருக்கும் எல்லா பிள்ளைகளையும் ஒன்று போல் நேசிப்போம். மாத்திரமல்ல அவர்கள் ஐக்கியமாயிருக்க என்னென்ன முயற்சிகள் எடுக்க வேண்டுமோ அத்தனையும் நாம் எடுப்போம்.

**கண்டிப்பற்ற பெற்றோர்:-**

*"பிள்ளையின் நெஞ்சில் மதியீனம் ஒட்டிக் கொண்டிருக்கும்: அதைத் தண்டனையின் பிரம்பு அவனை விட்டு அகற்றும்" (நீதி. 22:15). பிள்ளையானவன் நடக்கவேண்டியவழியிலே அவனை நடத்து: அவன் முதிர்வயதிலும் அதை விடாதிருப்பான். தன் மகனுடைய அப்சலோமின் நடத்தையை பற்றி தாவீது கண் ஜாடையாக இருந்தான். முடிவென்ன? தன் மகனுக்கு முன்பாக தாவீது வெறுங்காலோடு ஒளித்து ஓடுகிறான். அப்சலோம் வானத்துக்கும் பூமிக்கும் நடுவாக தொங்கி மரித்தான். அந்தோ பரிதாபம்! அதோனியாவைத் தாவீது கடிந்து கொள்ளவில்லை. அவன் கொலை செய்யப்பட்டான்!!* **(1 இராஜா. 1:5,6:2:24,25).**

ஏலி, நல்ல தேவமனிதன் தன் பிள்ளைகளை வளர்ப்பதில் இரண்டு தவறுகள் செய்தான். 1. தன் பிள்ளைகளை நல்வழிப்படுத்தவில்லை. சொல்லிப் பார்த்தான கேட்கவில்லை. விட்டுவிட்டான். (1 சாமு. 1:25) அவர்களை அடக்கவில்லை (1 சாமு 3:13). 2. தேவனைப் பார்க்கிலும் தன் குமாரரை மதித்தான் (1 சாமு. 2:29.30). அவர்களுக்கு வந்த தண்டனையை தயவு செய்து சிந்தித்துப் பாருங்கள்! பிள்ளைகள் இருவரும் ஒரே நாளில் மாண்டார்கள்; மருமகள் இக்கபோத்தை பெற்றாள். ஏலி மல்லாக்க விழுந்து பிடரி முறிந்து செத்துப்போனான். இன்று நம்முடைய பிள்ளைகளை நல்வழி வளர்த்துவதில் கருத்தாய் இருக்கிறோமா? அல்லது ஏதோ போகிற போக்கில் விட்டு விடுகிறோமா? எத்தனையோ பெற்றோருக்கு பிள்ளைகள் ஒரு பெரிய விக்கிரகம் தான். ஏன் ஆராதனைக்கு வரவில்லை? ஓ பிள்ளை! ஏன் ஜெபிக்க வர

வில்லை. ஓ பிள்ளை! எல்லாம் பிள்ளைக்காகத் தான். அந்த பிள்ளை தான் பிந்தின நாட்களில் ஒப்னி. அந்த பிள்ளை தான் பினகாஸ். அவன்தான் அப்சலோம். உன் பிள்ளையை நடத்த வேண்டிய வழியில் நடத்த தவறாதே. ஆபத்து! எச்சரிக்கை!

பகிர்ந்து கொள்ளாமை:-

குடும்பங்களில் வரும் மூன்றாவது கண்ணி ஒருவருக்கொருவர் மனந்திறந்து பேசமாட்டார்கள். மகன் அப்பாவிடம் பேச ஒரு சிநேகிதனைக் கண்டு பிடித்து, அல்லது தாயாரைத் தூதனுப்பி அல்லது வேறு ஏதோ முறையைக் கையாடுகிறான். தகப்பன் மகனிடம் மனைவி வழியாக பேசுகிறான்.

கொஞ்ச கொஞ்சமாகப் பேச்சு குறைந்து ஒருவருக்கொருவர் ஒரு தொடர்பற்ற நிலையில் வந்துவிடும். என்றாவது ஒரு நாள் வாய் திறந்தால் அன்று வம்புதான் மிஞ்சும். ஆகவே தொல்லையில்லாமல் இருக்க பேச்சில்லை. குடும்ப ஜெபம் இல்லை. ஒன்றாக ஆராதனைக்கு வருவதில்லை. பிள்ளைகள் வந்து அரைமணி தாண்டி மனைவி, மனைவி வந்து அரை மணி தாண்டி புருஷன் வருவான். அந்த வீடு கட்டுவிட்ட புஸ்தகம் போல சாத்தான் அடிக்கும் காற்றில் அலைப்பட்டு ஓடும். இந்தப் பேச்சுத் தொடர்பு மனதில் இருக்கும் ஐயங்களை போக்கும், ஒருவருக்கொருவர் ஐக்கியத்தை உண்டாக்கும். நம்பிக்கையை உருவாக்கும். ஏன் உங்கள் வீட்டில் மனந்திறந்து பேச சந்தர்ப்பங்களை உண்டாக்ககூடாது. பிள்ளையின் படிப்பைப் பற்றி பேச முடியாவிட்டால் வீட்டில் வளரும் நாயைப் பற்றியாகிலும் ஒருமனமாய்பேசி மகிழலாமே. கர்த்தர் உங்கள் வீட்டில் செய்த அற்புதங்களைப் பற்றியாகிலும் ஒரு மனமாய் பேசி மகிழலாமே.

4. பெற்றோரின் உணர்வற்ற (சுயநல) வாழ்க்கை:-

நோவா தன் குடும்பத்தை காப்பாற்றினவன். தேவ சித்தம் செய்தவன். அவனது பிந்திய நாட்களில் திராட்ச தோட்டத்தை நாட்டி, திராட்சை ரசம் எடுத்தான். அது

வரையில் நன்ருக இருக்கிறது. தொடர்ந்து திராட்ச ரசம் குடித்து மதிமயங்கி, வஸ்திரம் விலகிப்படுத்திருந்தான். இளையமகன் அதைப்பார்த்து தன் சகோதரிடம் சொல்ல. அவர்கள் அவனது நிர்வாணத்தைப் பார்க்காமல் அவனை மூடினுர்கள். வெறி நீங்கிய பொழுது தன் மகன் தன் வெட்கத்தை வெளிப்படுத்தியதையும் அறிந்தான். இப்பொழுது தன் மகனை சபித்தான்.

குடும்பத்தில் அவமானம் சாபம், யாரால் வந்தது? காரணம் என்ன? முதிர்ந்த வயதில் தன் நிலையை சூழ்நிலையை, அவனுக்கு உணர முடியவில்லை. தனக்கு மனைவி உண்டு. பிள்ளைகள் உண்டு. மருமக்கள் உண்டு, பேரன் பேத்திகள் பிறந்திருக்கிருர்கள். அவர்கள் நடுவில் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும் என்கிற அறிவு எண்ணம் அவனுக்கு இல்லையே.

இன்று எத்தனையோ தலைவர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு முன்பாக வெட்கம் இல்லாதவர்களாக வாழ்கிருர்கள். தங்கள் பிள்ளைகளுக்கு அவர்களைப் பற்றி என்ன மதிப்பு இருக்க முடியும்? அவர்களுக்கு உண்மையான தலைவர்களாக இருக்க முடியுமா? வார்த்தைகளிலும், செய்கைகளிலும் தங்கள் ஞானத்தை இழந்துவிடுகிருர்களே! அந்தோ பரிதாபம்.

ஒரு பிள்ளைக்கு ஹீரோ உண்டு என்ருல், அது தன் தகப்பன் தான், ஹீரோயின் உண்டானுல் தன் தாய்தான். பிள்ளையின் உள்ளத்தில் தகப்பன் உயர்ந்த பீடத்தில் மேல் மதிப்பாக நிற்கும் பொற்சிலையைப் போல் இருக்கிருன். பிள்ளையின் கண் முன்னுல் தவருக நடக்கும் பொழுது ஒரு பொய் சொல்லும் பொழுது, தாயாரை அடிக்கும் பொழுது குடும்பத்தில் குழப்பத்தை உண்டு பண்ணும்பொழுது, படிப்படியாய் அந்த பீடம் தகர்க்கப்படுகிறது. பீடத்தின் மதிப்பு குறைந்துக் கொண்டே வருகிறது. கடைசியாக சிலை உடைந்து போகிறது. காலம் வரும்பொழுது தகப்பன் என்கிற மதிப்பு உள்ளத்தை விட்டே போய்விடுகிறது. தகப்பனைக் கொன்ற மகனைப்பற்றிக் கேள்விப்பட்டால் ஆச்சரியப்

பட வேண்டாம். தகப்பனை தன் இதயக்கோவிலிருந்து மகன் என்றோ இறக்கி வைத்து விட்டானே! இவர்களைப் பெற்றோர் சாதாரண காரியங்களாக எண்ணுவார்கள். அருமையான பெற்றோரே, நீங்கள் அவர்கள் கண் முன்னால் செய்யும் ஒவ்வொரு தவறும், மற்றவர்களை பழித்துச் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும், உங்கள் பிள்ளையின் உள்ளத்தில் உங்களுக்கு எதிராக நீங்கள் போட்ட விதை தான். அது முளைக்கும், வளரும், பலன் கொடுக்கும். ஒரு விதையாகல்ல—பன்மடங்காக ஆகும். ஜாக்கிரதை! கடைசி மூச்சு மட்டும் உங்கள் பிள்ளைகளுக்கு நீங்கள் ஒரு பெரிய மனிதனாகவே காட்சியளியுங்கள். பிள்ளைகள் உங்களை குறித்து தப்பெண்ணம் கொள்ள இடம் கொடுக்காதீர்! கொடுக்காதீர்!! (எபே 6:4, கொலோ 3:21, I தீமோத் 1:4). ஆகிய வசனங்கள் மிக ஆழமான கருத்துள்ளவைகள் என்பதைச் சொல்லிக் கொள்கிறேன். அவற்றை ஆராய்ந்து படிப்பது உங்கள் குடும்பத்தின் நல்வாழ்விற்கு மிக ஆதாரமானது.

**பெற்றோரைக் கனம் பண்ணாத பிள்ளைகள்:-**

"உன் தகப்பனையும் உன் தாயையும் கனம் பண்ணுவாயாக" என்பது வாக்குத்தத்தமுள்ள முதலாம் கற்பனை (எபே 1:3). நல்ல தகப்பனைக் கனம் பண்ணு என கர்த்தர் கட்டளை கொடுக்கவில்லை. உன்னை நேசிக்கும் தாயையும் கனம் பண்ணு என கர்த்தர் எழுதவில்லை. உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்ணு. ஏன் என்றால் அவர்கள் உன் தாயாகவும், தகப்பனாகவும் இருப்பதினால். மாதா, பிதா, குரு, தெய்வம் என்பது ஆன்றோர் அமைத்த ஒழுங்கு. உன் தாய் தன் வயிற்றில் உன்னைச் சுமந்தவள். அவள் இரத்தம் உன் நரம்புகள் வழியாய் ஓடிற்று. நீ பிறந்தபொழுது தன் இரத்தத்தைப் பாலாக்கி உனக்கு ஊட்டினவள்; உன் அசுத்தங்களையெல்லாம் துடைத்து சுத்தம் செய்து, உன்னை முத்தமிட்டு மார்போடணைத்தவள். தன் உயிரை உனக்காகவே கொடுத்தவள். அவளைக் கனம் பண்ணாதவன் தன் தேவனி

டத்தில் என்ன நன்மையடையப் போகிறான்? உன் தாயை நீ கனம் பண்ணு நீ ஆசீர்வதிக்கப்படுவாய் (நீதி 23:22, 28:2, 30:11,17).

உன் தகப்பன் நீ இவ்வுலகில் இருப்பதற்கும், நீ ஆண்டவருடைய பிள்ளையாகி சீயோனை அடைவதற்கும் காரணமாக ஜீவனைத் தந்தவர். உன் தேவைகளை சந்தித்து, உன்னை நேசித்து, பாதுகாத்து, படிக்கவைத்து, இம்மட்டும் நடத்தினவர். அற்பமாய் உன் இருதயத்தில் ஒரு எண்ணம் வருமோ? வரக்கூடாது.

நோவாவின் இளையமகன் தகப்பனின் நிர்வாணத்தை மூடாமல் அதை வெளியே சொன்னான். தகப்பனின் பாவத்தை வெளிப்படுத்தினான். அவன் சபிக்கப்பட்டுப் போனான். என்ன சாபம்? உன் சகோதரருடைய அடிமைகளுக்குஅடிமையாவாய் (ஆதி 9:26)உணர்வடைவோம்.

லூக். 15-ல் வரும் இளைய குமாரன் தகப்பனுடைய கடிந்துகொள்ளுதலையும், தகப்பன் வீட்டையும் அற்பமாய் நினைத்தான் அவன் எங்கு போய் முடிந்தான்... பன்றிப் பண்ணையில் அவனுக்கு பன்றியின் உணவும் மறுக்கப்பட்டது. என்னே அவனுடைய நிர்ப்பந்தமான நிலைமை!

**அந்நிய ஸ்திரீகள்—அந்நிய புருஷர்கள் :-**

குடும்ப வாழ்க்கையில் மிகவும் பாதிக்கும் காரியங்களில் ஒன்று இந்த அந்நிய ஸ்திரீகளும், புருஷர்களும், வீட்டிலே மற்றவர்களுக்குக் கொடுக்க வேண்டிய இடத்துக்கு மிஞ்சின இடம் கொடுத்து, குடும்பங்களைக் கெடுத்தவர்கள் பலர். இந்நிலைக்கு அடிப்படை காரணங்கள்; 1. ஒருவருக்கொருவர் திருப்திப்படுத்த முடியாத வாழ்க்கை 2. சன்மார்க்கநெறி பற்றிய உறுதியில்லாத தன்மை. இதன் விளைவுக்கு இரண்டு உதாரணங்களைக் கூறுகிறேன்.

1. ஆபிரகாம் எல்லா காரியங்களிலும் அவர் பெரியவர் தான். ஆண்டவனே என்று கீழ்ப்படியும் மனைவியும் அவருக்கு உண்டு. ஆனாலும் ஆகாரை உமக்குத்

தருகிறேன் என்றபொழுது ஒரு தடையும் சொல்லாமல் ஆமென் போட்டுவிட்டார். ஏனெனில் பல வருடங்களாய் தன் கண் முன்னால் அவள் ஒரு சோதனைக்காரியாய் இருந்தாள். இன்று சோதனைக் காரன் சாராள் வழியாகவே வந்துவிட்டான். காரியங்கள் சுலபமாகிவிட்டன. ஆனால் அதற்கு அவர் அனுபவித்த தண்டனைகளைப் பார்ப்போம். முதலாவது தன் ஆசைக்குகந்தவளையும், தன் இருதயத்தைக் கவர்ந்தவனையும் அவனே வீட்டை விட்டுத் துரத்தி வனாந்திரத்துக்கு அனுப்புகிறான். 18 வயதான வாலிப மகனை எந்த தகப்பன் வீட்டை விட்டுத் துரத்துவான்? அதற்கு மேல் அந்த பாவத்தின் விளைவாகப் பிறந்த இஸ்மவேலின் சந்ததியார் இன்னும் இஸ்ரவேல் ஜனத்துக்கு முள்ளாகவே இருக்கிறார்கள்.

அப்படியே சாலெமோனும் அந்நிய ஸ்திரீகளை மணந்து அவர்கள் வழிச்சென்று, அந்நிய தேவர்களைச் சேவித்து தன் வாழ்க்கையை அழித்துப் போட்டான். மகிமையான ஆலயத்தைக் கட்டினவன் மகிமையின் ஆலயத்துக்கு அபாத்திரவானாய் போனான்.

**யோசேப்பு:-**

இதற்கு மாறாக மலைபோல் நிற்பவன் யோசேப்பு. யோசேப்புக்கு நேராக பாவசோதனை வந்த பொழுது அவன் சொன்ன வார்த்தை, எக்காலத்திலும் மனிதர் வாயிலிருந்து புறப்பட்ட வார்த்தைகளில் மிக மேன்மையானதாகவே கருதப்படும். ''......இத்தனை பெரிய பொல்லாங்குக்கு உடன்பட்டு, தேவனுக்கு விரோதமாய் பாவம் செய்வது எப்படி!" (ஆதி. 59:9). வஸ்திரங்களை அவள் கையில் விட்டுவிட்டு அவன் ஓடும் காட்சியைக் காணும் பொழுது, பவுல் தீமோத்தேயுவிற்குச் சொன்ன வார்த்தை நினைவுக்கு வருகிறதல்லவா? ''பாலியத்துக்குரிய இச்சைகளுக்கு விலகியோடி..." (II தீமோ 2:22), குடும்பத்தைக்கெடுக்கும் குள்ளநரிகளிலிருந்து கர்த்தர் உங்களைக் காப்பாராக, ஆமென்!

**கற்பனைத்துணை:-**

ஒவ்வொரு வாலிபனும், வாலிபப் பெண்ணும் தங்கள் கற்பனையில் ஒரு துணையைக் கண்டிருப்பார்கள். இது நல்ல காரியம். ஆனால் ஒரு நாளும் நமது கற்பனையின் துணை நமக்கு கிடைப்பதில்லை. அதனால் கர்த்தர் நமக்குத் தந்த துணையை நேசிக்க முடியாமல் போகிறது. வெளியே நேசித்தாலும் நாட்கள் செல்லச் செல்ல உள்ளவான ஒரு இணைப்புக் குறைகிறது. இக்குறைபாடு ஆழமான படுகுழியாக மாறும். அதோடு உரையாடுதல் குறைந்து, அன்பும் ஐக்கியமும், குறைபடும்.

யாக்கோபின் குடும்ப வாழ்க்கையில் அவனது கற்பனை மனைவிக்கு ஒத்தவள் ராகேல். லேயாள் அவன் விரும்பியவள் அல்ல. ஆகவே லேயாளை தன் மனைவியாக ஒரு நாள் கூட நினைத்ததாகத் தெரியவில்லை. அவள் பெற்ற பிள்ளைகளைக் கூட அவன் மதித்ததாக ஒரு அடையாளமும் வேதத்தில் இல்லை. ஏதோ தன் வீட்டில் வாழும் தேவையற்ற மனிதர்களாகவே எண்ணினான். ராகேலும் யோசேப்பும் அவனை விட்டுப் பிரிந்தபின் அவன் மனிதனாக அல்ல ஒரு இயந்திரமாய் மாத்திரம் இயங்கினான். தன்னோடு வாழும் மனைவியையாகிலும், பிள்ளைகளையாகிலும் அவன் பொருட்படுத்தவில்லை. என்ன பரிதாபம்! தேவன் தந்த பிள்ளைகள் தன் வீட்டிலேயே அந்நியராக கருதப்படுகிறார்கள்.

குடும்ப வாழ்க்கையின் கண்ணிகள் இன்னும் ஏராளம் உண்டு. ஏழு காரியங்களை மாத்திரம், உங்கள் சிந்தனையைத் தூண்டி விடும்படியாகச் சொல்லியுள்ளேன். தேவ சமுகத்தில் தாழ்த்துவோம். வந்த குறைகளை மன்னிக்க, ஆண்டவர் நமக்குண்டு. நம்முடைய கறைகளை மாற்ற கல்வாரியின் இரத்தம் உண்டு. மன்னிப்பு பெற்று சுத்தமாகி புதுவாழ்வு வாழ கர்த்தர் கிருபை செய்வாராக. ஆமென்!

## அத்தியாயம் 10

# "தாவீதின் கூடாரத்தை... திரும்பக் கட்டுவேன்"!

"அந்நாளிலே விழுந்து போன தாவீதின் கூடாரத்தை நான் திரும்ப எடுப்பித்து, அதின் திறப்புக்களை அடைத்து, அதில் பழுதாய்ப் போனதைச் சீர்ப்படுத்தி, பூர்வ நாட்களில் இருந்தது போல அதை ஸ்தாபிப்பேன் என்று இதைச் செய்கிற கர்த்தர் சொல்லுகிறார்" (ஆமோஸ் 9:12).

தாவீதின் கூடாரம் என்ன என்று தியானிப்பதற்கு முன் பேரழகு வாய்ந்த சாலமோனின் ஆலயத்தைக் காட்டிலும், பழைமையான மோசேயின் கூடாரத்தைக் காட்டிலும், தாவீதின் கூடாரத்தின் மேல் கர்த்தர் அக்கறை காட்ட காரணம் என்ன? என்று தியானிப்போம்.

தாவீது மற்றவர்களைக் காட்டிலும் சிறந்தவனா? மேன்மையானவனா? மற்ற எல்லோரைப் போலவே தேவன் தாவீதையும் தெரிந்துக் கொண்டார். கறவலாடுகளின் பின்னே சுற்றித் திரிந்தவனை தேவன், நாடாள உயர்த்தினார். மற்ற மனிதரைப் போலவே தாவீதும் பாவம் செய்தான். சொல்லப் போனால் மிகவும் மோசமான, சொல்லவே கூசும் பாவங்களைச் செய்தான். இருப்பினும் தாவீதின் மேல் தேவன் அக்கறை காட்டக் காரணம் என்ன? II சாமு. 11:1-27-ன் படி பத்துக் கற்பனைகளையும் மீறி துரோகம் விளைத்தான். ஆனாலும், நாத்தான் என்னும் தீர்க்கதரிசியின் மூலமாக அவன் பாவத்தை உணர்த்திய போது மனந்திரும்பினான். மாத்திரமல்ல தன் பாவத்தை நான்கு பாடலாக (சங். 32, 38, 51:103) எழுதி, அதற்கு இசையும் அமைத்தான். எல்லோரும் பாடும்படி வழி செய்தான். தேவனுக்கு முன்பாகவும் மனிதனுக்கு முன்பாகவும், திறந்து

கிடந்த மனிதனை தேவன் உயர்த்தியதில் வியப்பொன்று மில்லையே. ஆகாபு ராஜா, ''கர்த்தருக்கு விரோதமாக பொல்லாப்பானதைச் செய்ய விற்றுப்போட்ட ஆகாபைப் போல'' என்று சொல்லுமளவுக்கு பாவஞ்செய்திருந்த போதும், கர்த்தருக்கு முன்பாக தன்னைத் தாழ்த்தின போது, தேவன் அவனுக்கு இரங்கினர் (I இராஜா 21:25,20). தன்னுடைய உண்மை பெயரை ஒத்துக்கொள்கிற யாக்கோபை (எத்தன்) இஸ்ரவேலாக (தேவனையும் மனுஷனை யும் போராடி மேற்கொண்டான்) மாற்றினர்
(ஆதி. 32:26).

தேவனுக்கு முன்பாக தன்னைத் தாழ்த்துகிற உண்மை நிலையை ஒத்துக் கொள்கிற திறந்த மனதுடன் இருக்கும் எவ ரையும் தேவன் ஆசீர்வதிக்கிறர். இப்படிச் சொல்வதினுல், தேவன் நம்மைக் குறித்து அறியாதவராக இருக்கிறர் என்ப தல்ல, அவர் நம்மை நன்கு அறிவார். ''பாதாளமும் அழிவும் கர்த்தரின் பார்வைக்குப் பிரத்தியட்சமாயிருக்க, மனுபுத்திரருடைய இருதயம் அதிக பிரத்தியட்சமாயிருக்கு மல்லவோ?'' (நீதி. 15:11). தேவன் உங்களை முற்றிலும் நன்றாக அறிவார். அவர் அந்தரங்கத்தை காண்கிற தேவன் (மத். 6:4;6). காரிருளில் வாசம் பண்ணுகிறவர் (I இராஜா. 8:12). அவர் என்னைக் காண்கிறவர்
(ஆதி. 16:13)

தேவன் ஒளியாயிருக்கிறர் (I யோ. 1:5). வெளியரங்க மாக்குகிறதெல்லாம் வெளிச்சமாயிருக்கிறது (எபே. 5:13). கர்த்தர் வெளிச்சமாயிருந்து எல்லாவற்றையும் வெளிப் படுத்துகிறர். அப்படி அவர் வெளிப்படுத்தும் பொழுது மாய்மாலம் பண்ணுதே, பூசி மழுப்பாதே, அகம்பாவம் உடையவனுயிராதே. தேவனுக்கு முன்பாக தாழ்த்து. ''பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான், அவைகளை அறிக்கை செய்து விட்டுவிடுகிறவன் இரக்கம் பெறுவான்'' (நீதி. 28:13). பாவம் சீழுக்கு சமானம் (ஏசா. 1:5,6). சீழ் பிதுக்கப்படாவிட்டால் சரீரத்தின்

அவயவங்கள் வெட்டி எறிய வேண்டிய விபரீத நிலைமை உண்டாகும். பாவம் எந்த ஜனத்திற்கும் இகழ்ச்சி (நீதி. 14:34) மூடர் பாவத்தைக் குறித்துப் பரியாசம் பண்ணுகிறார்கள் (நீதி. 14:9). ஒரு மனிதனுடைய மேன்மை எல்லாம் கூறையாடும் இந்த பாவம் (யோபு. 31:12). ஆகையால், நம்மில் பாவம் இல்லையென்போமாகில், நம்மை நாமே வஞ்சிக்கிறவர்களாக இருப்போம் (1 யோ. 1:8). ஆகவே, நாம் நம்மில் 'பாவம்' உண்டென்று ஒத்துக் கொள்ளும் பொழுது, நாம் செய்த 'பாவங்களை' வெளிப்படுத்துகிறார். இவ்வாறு தேவன் வெளிப்படுத்தும்பொழுது நம்மை நாமே வஞ்சித்துக் கொள்ளாமல், வீண் பெருமை கொள்ளாமல், அவைகளை அறிக்கையிட வேண்டும். இதைச் செய்து நிறைவேற்றுவது எப்படி?

1) தேவனை நோக்கி விண்ணப்பிக்க வேண்டும். தேவனே என்னை ஆராய்ந்து, என் இருதயத்தை அறிந்து கொள்ளும்; என்னை சோதித்து என் சிந்தனைகளை அறிந்து கொள்ளும் வேதனை உண்டாக்கும் வழிகள் என்னிடத்தில் உண்டோ என்று பார்த்து நித்திய வழியிலே என்னை நடத்தும் (சங். 139:23-24). கர்த்தாவே, என்னைப் பரீட்சித்து, என்னைச் சோதித்துப் பாரும். என் உள்ளிந்திரியங்களையும், என் இருதயத்தையும் புடமிட்டுப் பாரும் (சங். 26:2). ''சோதனைக்குட்படாத வாழ்க்கை சோதா வாழ்க்கை". ஆகவே தேவனைப் பார்த்து நம்மை சோதித்தறியுமாறு விண்ணப்பிக்க வேண்டும்.

2) தேவ வசனத்தோடு ஒப்பிட்டு நம்மை அளந்து பார்க்க வேண்டும். ஏனெனில், ''தேவனின் தரத்திற்கு குறைவாக வாழ்வதே பாவம்''. ஆகவே, வேத வசனத்தோடு நம்மை ஒப்பிட்டு அறிய வேண்டும். தேவனுடைய தரம், அல்லது தேவன் எதிர்பார்க்கும் தரம், மத்தேயு 3, 5, 6, 7-ம் அதிகாரங்களில் விளக்கப்படுகிறது. அதோடு ஒப்பிட்டு பார்த்து நம்மை நாமே ஆராய்ந்து கொள்ளலாம்.

மலைப் பிரசங்கம் தேவனது தரத்தை விளக்குகிறது. திரளான ஜனங்களைக் கண்டவுடன் வாய் திறந்து நேரடியாக பேசாமல், தெரிந்தெடுக்கப்பட்ட சிலரிடமே இதைக் கூறுகிறார் (மத். 5:1-2). இது செய்வதற்கு முடியாது. அல்லது நடைமுறைக்கு ஒத்துவராது எனச் சிலர் கருதுகிறார்கள். மறந்துவிடக் கூடாது. இது நமது பரலோக 'பிதா' தமது 'பிள்ளைகளிடமிருந்து' எதிர்பார்க்கும் தரம். பிதாவின் கற்பனை பிள்ளைக்கு பாரமானவைகள் அல்ல (I யோ. 5:3). பிதாவின் தரத்தோடு பிள்ளைகளாகிய நாம் நம்மை ஒப்பிட்டுப் பார்ப்போம்.

1) ஆடையில், ஆபரணத்தில் எளிமையைக் குறித்து கேள்விப்பட்டிருக்கக் கூடும். ஆவியில் எளிமை உண்டா? (மத். 5:3).

2) துயரப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் ஆறுதலடைவார்கள். தேவனுக்கடுத்த காரியங்களில் துயரம் உண்டா? நாம் எதற்காகத் துயரப்படுகிறோம்? (மத். 5:4; சங். 119:120, 136; II கொரி. 7:10).

3) சாந்த குணமுள்ளவர்கள் பாக்கியவான்கள். சாந்த குணமா? சண்டை குணமா? மற்ற தேவப்பிள்ளைகளோடு உங்களால் இணைந்து வாழ முடிகிறதா? (மத். 5:5).

4) நீதியின் மேல் பசிதாகமுள்ளவர்கள் பாக்கியவான்கள். நீதியாய் வாழ்கிறீர்களா? என்று கேட்கவில்லை, நீதியின் மேல் பசிதாகமுண்டா? என்று கேட்கிறார். நீதியாம் தேவ வசனத்தில் இப்பொழுது வாஞ்சையுண்டோ?
(மத். 5:6; லூக். 6:20-21; 24:25).

5) இரக்கமுள்ளவர்கள் பாக்கியவான்கள். சவு இரக்கம் உண்டோ? (மத். 5:7)

6) இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள். உள்ளத்தில் தூய்மை உண்டோ? உள்ளத்தில் தூய்மை உள்ளவன் உதட்டில் கூறும் வார்த்தைகளையும் மதித்து சொல் தவறுதலுமிருப்பான், உள்ளத்தில் தூய்மை

உண்டோ? யாருமே காணாத உன் இருதயத்தில் உன் அலங்கோலமுண்டா? உன் உள்ளத்தில் மாய்மாலம் உண்டோ? (மத். 5:8).

7. சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள். நீங்கள் இருப்பதினால் சமாதானம் பெற்று சபையில் ஐக்கியம் ஓங்குகிறதா? அல்லது ஐக்கியம் பாழாகிறதா? (மத் 5:9).

8. நீதியினிமித்தம் துன்பப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்; பாவத்துக்கு விரோதமாக வாழ போராட்டம் உண்டோ? (எபி. 12:4 சங். 50:17-21).

9. ... தன் சகோதரன் மேல் நியாயமில்லாமல் கோபப்படுவதுண்டோ? உன் பேரில் உன் சகோதரனுக்கு குறைவுண்டென்று நினைவு கூருவாயாகில்; முன்பு போய் உன் சகோதரனோடு ஒப்புரவாகு. பின்பு வந்து உன் காணிக்கையைச் செலுத்து. தாழ்மையாய் நடந்து கொள்வதில் வெளிப்படை அழகு இது தான் (மத். 5:21-24).

10. பாலுறவு வாழ்க்கையில் பரிசுத்தமுண்டோ? கணவன் மனைவிக்கும், மனைவி கணவனுக்கும் உண்மையுள்ளவர்களாக இருக்கிறீர்களா? தவறான உறவு முறையுண்டோ? ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிற எவனும் அவளோடு விபச்சாரம் செய்தாயிற்று (மத். 5:28).

11. உங்கள் வார்த்தைகள் 'ஆம்' என்பதற்கு, 'ஆம்' என்றும், 'இல்லை' என்பதற்கு 'இல்லை' என்றும் இருக்கிறதா? பொய்க்கும், மெய்க்கும் இடையில் ஒரு வார்த்தை இல்லை. உண்மை பேச வேண்டிய இடத்தில் அமைதியாக இருந்தால் அதுவும் பொய்யே (மத். 5:33-39).

12. தீமைக்கு எதிர்த்து நிற்கிறீர்களா? அல்லது தீமையை சகித்துக் கொள்வீர்களோ? ஒருவன் உங்களை ஒரு மைல் தூரம் வர பலவந்தம் பண்ணினால், அவனோடு இரண்டு மைல் தூரம் நடக்க உங்களால் கூடுமோ? (மத். 5,38-43).

13. நண்பனை நேசித்து பகைவனை வெறுக்கலாம். இது பழைய ஏற்பாடு. ஆனால் சத்துருக்களை நேசியுங்கள்; இது தேவ அருள்வாக்கு (மத். 5:44-48).

14. உங்களுடைய உள் நோக்கங்கள் எப்படி இருக்கிறது? ஜெபிக்கும் போதும், உபவாசிக்கும் போதும், தான தருமம் பண்ணும் போதும் உங்கள் உள் நோக்கம் எப்படிப்பட்டது? உங்கள் அந்தரங்க ஜெபத்திற்கு தேவன் வெளியரங்கமாக பதிலளிக்கிறாரா? ஜெபமே ஜீவன் அல்லது உயிர்மூச்சு என்பது உங்களைப் பொறுத்தவரையில் உண்மையா? (மத். 6:1-18).

15. இரு எஜமான்களுக்கு ஊழியம் செய்வதினால் கிடைக்கும் பலன் கவலை (மத். 6:24, 25). நீங்கள் கவலைப்படுகிறீர்களா? பார்வைக்கு எளிமையாயிருந்து, உள்ளத்தில் பட்சிக்கிற ஓநாய் போல வாழ்ந்து, வரதட்சணை, லஞ்சம் போன்றவற்றில் நாட்டம் உண்டோ? (மத். 6:19-34).

16. மற்றவர்களை நியாயம் தீர்க்கிறீர்களோ? உங்கள் கண்களிலிருக்கிற உத்திரத்தை உணராமல் உன் சகோதரனின் கண்ணிலிருக்கும் துரும்பைப் பார்க்கிறீர்களோ? உங்கள் வாழ்வின் லட்சியம் தேவ சித்தத்தை நிறைவேற்றுவதா?

நம்மை நாமே ஆராய்ந்து பார்ப்போம். யோபைப் போல தூளிலும், சாம்பலிலும் உட்கார்ந்து நம்மை கவனித்து அருவருத்து, மனஸ்தாபப்பட்டு, பாவங்களை அறிக்கையிடும் பொழுது, இயேசுவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி, நம்மை சுத்திகரிக்கிறது. கதறி அழுது தேவனிடம் ஒப்புரவாகுவோம். மனிதரோடு ஒப்புரவாகுவோம். ஆமென்!

## அத்தியாயம் 11

# சுயத்திற்கு மரித்தல்!

நீங்கள் மற்றவர்களால் மறக்கப்படுகையிலும், புறக் கணிக்கப்படுகையிலும், வேண்டுமென்றே அவமதிக்கப்படு கையிலும் நீங்கள் மன வேதனைப்படாமலும், அதை ஒரு இழிவு என்று எண்ணாமலும், கிறிஸ்துவுக்காய் பாடுபடுவதை தகுதியாக எண்ணி, உள்ளத்தில் மகிழ்ச்சியோடு இருக்க முடியுமென்றால் அதுவே சுயத்திற்கு மரித்தலாகும்.

நீங்கள் செய்த நன்மைகள், தீமையாய் பேசப்படும் போதும், உங்கள் விருப்பங்கள் நிறைவேறாமல் போகும் போதும், உங்கள் புத்திமதிகளும் அபிப்ராயங்களும் அவமதிக் கப்பட்டு ஏளனம் செய்யப்படும்போதும், உங்கள் இருதயத் தில் எழுந்து வரும் கோபத்திற்கு இடங்கொடாமல், நீங்கள் செய்தது தான் சரியென்று எதிர்த்து வழக்காட முற்படாமல், சகலத்தையும் பொறுமையோடும், அன்போடும் அமைதி யாக சகித்துக்கொண்டால் அதுவே சுயத்திற்கு மரித்த லாகும்.

நீங்கள் எந்த ஒழுங்கீனங்களையும், முறைகேடுகளையும், காலம் தவறி நடப்பவைகளையும், கோபமூட்டும் செயல்களை யும், உங்கள் கண்களுக்கு முன்பாக பொருட்கள் வீணாக்கப் படுவதையும், ஞானமற்ற செயல்களையும், ஆடம்பர செலவு களையும், ஆவிக்குரிய அறிவீனங்களையும் காணும்போது அதை அன்போடும், பொறுமையோடும் இயேசு சகித்தது போல சகித்தால் அதுவே சுயத்திற்கு மரித்தலாகும்.

எந்த உணவிலும், எந்தவிதமான காணிக்கையிலும், எவ்வித உடையிலும், எப்படிப்பட்ட தட்பவெப்ப நிலையிலும், எவ்வித சமுதாய சூழ்நிலையிலும், தனிமையிலும், தேவசித்தம் குறுக்கிடும் எந்த காரியத்திலும் நீங்கள் போதுமென்ற மனது

டனேகூட இருப்பீர்களானால் அதுவே சுயத்திற்கு மரித்தவாகும்.

உங்கள் உரையாடல்களில் உங்களையே முக்கியப்படுத்துவதில் கவனம் செலுத்தாமலும், உங்கள் நற்கிரியைகளை வலியுறுத்தி கூறாமலும், பிறரால் புகழ்ந்துரைக்கப்படுவதில் பிரியப்படாமலும், பிறரால் நீங்கள் அறியப்படாமல் இருப்பதை உண்மையிலேயே விரும்புவீர்களானால் அதுவே சுயத்திற்கு மரித்தவாகும்.

உங்களுடைய தேவை மிக அதிகமாக இருக்கக்கூடிய நெருக்கடியான சூழ்நிலையில், உங்கள் சகோதரனின் சகல தேவைகளும் சந்திக்கப்பட்டு, அவன் வாழ்ந்திருக்க காணும் போது, எவ்வித பொறாமை உணர்ச்சி கொள்ளாமலும், தேவனிடத்தில் கேள்வி கேட்காமலும், அந்த சகோதரனோடு சேர்ந்து ஆவியில் நேர்மையாக சந்தோஷப்படுவதே சுயத்திற்கு மரித்தவாகும்.

உங்களைவிட எல்லா நிலையிலும் குறைந்தவர்களால் நீங்கள் திருத்தப்படும்போதும், கண்டிக்கப்படும்போதும் உங்கள் உள்ளத்தில் கோபமும், எதிர்ப்பும் எழாமல், உள்ளும் புறம்பும் ஒருங்கிணைந்து உங்களை தாழ்த்தி கீழ்படியப்பண்ணுவதே சுயத்திற்கு மரித்தவாகும்.

நீங்கள் சுயத்திற்கு மரித்ததுண்டோ? அவருடைய மரணத்திற்குள்ளாகி அவரை நாம் அறிய "இந்த கடைசி நாட்களில் தேவ ஆவியானவர் நம்மை சிலுவையண்டை நடத்துவாராக" ஆமென்!

## அந்தியாயம் 12

# புருஷராயிருங்கள்!

நாம் எழுத்தின்படியாக ஆணாக இருந்தால் போதாது. கருத்தின் படியாகவும் நாம் ஆணாக இருக்க வேண்டும். ஒரு விசுவாசி ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் நாம் தைரியங் கொண்டு வாழவேண்டியது அவசியமாகயிருக்கிறது.

புருஷர்கள் மிக முக்கியமானவர்கள். அவர்கள் தலைவர்கள். அவர்கள் வாழ்வே குடும்பத்தின் வாழ்வு. பின் சந்ததியின் வாழ்வு. ஆதாம் பாவம் செய்தான், எனவே அவனது சந்ததிப் பரம்பரை பாவத்துக்குள்ளாகிவிட்டது (ரோமர் 12:19). ஆபிரகாம் மெல்கிசெதேக்குக்குத் தசமபாகம் கொடுத்தான். வேதம் சொல்லுகிறது, "அவனது பின் சந்ததிக்காரனாகிய லேவி தசமபாகம் கொடுத்தான்" (எபி 7:9, 10). ஆக ஒரு மனிதனில் தேவன் ஒரு சந்ததியைக் காண்கிறார்.

இங்கு எங்கே பார்த்தாலும், ஜெபிக்கிறவர்கள், கொடுக்கிறவர்கள் கொடுக்கிறவர்களாக ஊழியஞ் செய்கிறவர்கள் பெரும்பாலும் பெண்களாக, இருக்கிறார்கள். சபைகளில் 5 ஆண்களும் 50 பெண்களும் என்பது சர்வ சாதாரணமான காரியம். ஆண்கள் எழும்பத் தவறியபடியால் கர்த்தர் பெண்களை எழுப்புகிறார். பாருங்கள் ஆண்டவர் ஏற்படுத்திய சீஷர்கள் அனைவரும் ஆண்கள்தானே! அவர்கள் ஆண்களாக இருக்கவும் செய்தார்கள்!! இன்று அந்த ஆண்கள் எங்கே போய் ஒளிந்துக்கொண்டார்கள்?

R.S.S. இயக்கம் இன்று வளர்ந்து முஸ்லீம்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் பெரும் சவாலாக இருக்கிறார்களே! அவர்களெல்லாம் ஆண்களல்லவா? முஸ்லீம் மார்க்கம் இவ்வளவாய் வளருகிறதே, அங்கே பெண்களா ஊழியம் செய்கி

ரூர்கள் ஆண்களல்லவா? பின்னே ஏன் இயேசு கிறிஸ்துவின் மார்க்கத்தில் இந்த அவல நிலை. எங்கே ஆதாம்? எங்கே தேவன் தேடும் அந்த ஆண் மகன்?

வேத புத்தகத்தில் ஆண்களை பெற்றபொழுதெல்லாம், அதைப் பெரிதாக எழுதியிருக்கிறதைப் பார்க்கிறோம். ஏவாள் எத்தனை பெண்களைப் பெற்றாளோ தெரியாது. ஆனால் அவள் ஒரு ஆண் மகனைப் பெற்றபொழுது என்ன சொல்லுகிறாள், "நான் கர்த்தரால் ஒரு மனுஷனைப் பெற்றேன்" (ஆதி 4:1). அவளுடைய மகிழ்ச்சியைப் பாருங்கள். ஆணைப் பெற்ற போது ஏதேனை இழந்த துக்கத்தையும் கூட மறந்து விட்டாள்.

மற்றொரு பெண்ணாகிய லேயாள் புருஷனுடைய அன்பைப் பெற்றுக் கொள்ளாதவள், மற்றவர்களால் அற்பமாய் எண்ணப்பட்டவள். ஆனால் அவள் ஒரு ஆணைப் பெற்றதும் அவளுக்கு மகிழ்ச்சியோடும், நம்பிக்கையோடும் ரூபன் எனப் பெயரிடுகிறாள்.

ஆணாய்ப் பிறந்தால் போதாது. ஆணாய் வாழ வேண்டும். தாவீது மரணமடையப் போகிறான். அவனது சிங்காசனத்திலே சிறுவனாகிய சாலொமோன் உட்கார்ந்திருக்கிறான். அவனது சகோதரர்களின் பார்வையில் அவன் சிறியவன், இளையவன், உரியாவின் மனைவியின் மகன். எத்தனையோ கேலிச் சொற்கள். அவன் காதில் விழும். நிந்தைகள் விழும். அவைகளை மேற்கொள்ள வழியென்ன?... "நீ திடன் கொண்டு புருஷனாயிரு"— (I இராஜா 2:2). அவனும் அப்படியே செய்தான். வரிசையாக பலரை மடங்கடித்தான். அதோனியா, யோவாப் சிமேயி (I இராஜா 2:19-46) சரித்திரம் எப்படி முடிகிறது "ராஜ்யபாரம் சாலொமோனின் கையில் ஸ்திரப்பட்டது?" ஏன் சாலொமோன் புருஷன் என்பதை நிரூபித்தான். ஆனால் பிந்திய நாட்களில் தன் மனைவிமாரின் வார்த்தைக்கிணங்கி எல்லா அருவருப்புகளை வணங்கிமகிமையை இழந்துபோனான்.

புருஷனாக இருக்க அழைக்கப்பட்டு, தன் ஸ்தானத்தைக் காப்பாற்றாத ஒருவனுடைய சரித்திரத்தை நியாயாதிபதிகளின் புஸ்தகம் ௪-ம் அதிகாரத்தில் காண்கிறோம். தெபோராள் தீர்க்கதரிசியாக இருக்கும் காலத்தில், சிசெராவை முறியடிக்க பாராக் அழைக்கப்பட்டான். அவன் தலைவன்; ஆனால் அவன் சொன்ன பதில் என்ன? ''நீ என்னோடே கூட வந்தால் போவேன்; என்னோடேகூட வராவிட்டால், நான் போக மாட்டேன் நான் நிச்சயமாக வருவேன்; ஆனால் சிசெராவை கொலை செய்யும் மேன்மை உனக்கல்ல ஒரு பெண்ணுக்கே கிடைக்குமென்றான்" (நியா 4:8,9). அப்படி சம்பவித்தது.

சிசெரா பாராக்குக்கு முன்பாக ஓடிப் போய் யாகேலின் கூடாரத்தில் ஒளிந்தான். தண்ணீரை கேட்டான். பாலைக் கொடுத்தாள்... தன் கையால் ஆணியையும், தன் வலது கையில் தொழிலாளரின் சுத்தியலையும் பிடித்து, சிசெராவை அடித்தாள்... அங்கே மடிந்து கிடந்தான்'' (நியா 5:25-27). தனக்கு வரவேண்டிய மேன்மையை ஒரு சாதாரண ஸ்திரீக்குக் கொடுத்தான். பாராக்கென்றால் இடிமின்னல். அவன் ஒரு ஒரு பெண்ணுக்கு ஒளி இழந்த மின்னலாகிவிட்டானே!

ஆணாய்ப் பிறந்தால் அவனுக்கு பொறுப்புகள் உண்டு. எனவே நமது பிள்ளைகளை சிறுபருவத்திலேயே தைரியமாகக் வயதுகேற்ற பொறுப்புகளை எடுக்க பழக்க வேண்டும். இந்திய கலாச்சாரத்தில் பிள்ளைகளைத் தரகுறைவாய் அல்லது என்றைக்கும் குழந்தையாய் எண்ணும் பழக்கம் உண்டு. இதைத் தவிர்க்க வேண்டும். தைரியப்படுத்துகிற வசனங்களைச் சொல்லி விசுவாசிக்கச் சொல்ல வேண்டும். சிறு பருவத்திலேயே ஊழியம் செய்ய ஊக்குவிக்கச் வேண்டும். பிள்ளைகளில் உள்ள நற்குணங்கள் பெருகேற்றப் பட வேண்டும்.

நாம் இயேசுவுக்காய் நிறைவேற்ற வேண்டியவைகள் ஏராளமாக இருக்கிறது. நிறைவேற்ற வேண்டுமென்றால் நாம் புருஷர்களாயிருந்து, நம் யுத்தங்களைச் செய்ய வேண்

டும். அன்போடும் பண்போடும் அதே சமயத்தில் துணிச்சலாகவும் நாம் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்ய வேண்டும். நாம் வைக்கப்பட்டிருக்கிற இடத்திலிருந்து ஒழுங்குசெய்ய வேண்டியவைகளைச் செய்ய வேண்டும். நாம் சகோதரிமாருடைய ஒத்துழைப்பைப் பெற்றுக்கொள்ள வேண்டும். அதற்குரிய ஞானம் நமக்கு வேண்டும். பெண்களின் ஒத்துழைப்பில்லாவிடில் நம் காரியங்கள் ஒன்றும் ஒழுங்காக நடைபெறாது. ஆகவே தான் தேவ வசனமும் பெண்ணில்லாமல் ஆண் இல்லை என்று சொல்லுகிறது.

வாலிபர்களை நினைக்கும் பொழுது, அவர்களைக் காணும் பொழுது நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். பதினைந்து வருடங்களுக்கு முன் என்னுடன் ஒரு கூட்டம் வாலிபர்கள் இருந்தார்கள். அது உண்மையாகவே பாக்கியமான நாட்கள் தான். சனிக்கிழமை காலையிலிருந்தே ஜெபம் ஆரம்பமாகும். இரவெல்லாம் மாறி மாறி ஜெபம்தான். ஞாயிறு காலை ஒன்பது மணி முதல் ஆராதனை, பிற்பகல் ஞாயிறு பள்ளி, அது முடிந்ததும் வெளிக்கூட்டம் இரவு பத்து மணி வரை அதே வேலை தான். என்ன சந்தோஷம் ...... கூட்டங்களில் அனல் பறந்ததே! உபவாசம் என்றால் உபவாசம் ஊழியம் என்றால் ஊழியம் எதற்கும் ஆயத்தமான கூட்டம். அப்பேர்ப்பட்ட நாட்களுக்காக இப்பொழுதும் என் உள்ளம் ஏங்குகிறது. வாலிபர்கள் எழும்பும் போதுதான் கர்த்தருடைய ஊழியம் எழும்பும். ஆகவே பவுல் தீமோத்தேயுவுக்கு எழுதும் பொழுது "உன் இளமையைக் குறித்து அசட்டை பண்ணாதபடிக்கு......" (1 தீமோ. 4:12). விவேகானந்தர் எனக்கு ஆயிரம் வாலிபர்களைத் தாருங்கள், நான் இந்தியாவையே மாற்றி தருகிறேன் என்றார். அநேகரை விவேகானந்தா கேந்திரம் ஆயத்தம் பண்ணிக் கொண்டிருக்கிறது.

விவேகானந்தர் சொல்லி ஆயிரம் வாலிபர்கள் எழும்புவார்களானால், இயேசுவுக்காக இந்தியாவை ஆதாயப்படுத்த பதினாயிரம் வாலிபர்கள் எழும்ப வேண்டாமா என்னுகிறேன்.

ஏவாள் சொன்னாள். 'நான் ஒரு மனுஷனை பெற்றேன்" லேயாள் சொல்லுகிறாள். 'என் மகனைப் பார்' இயேசுவும் சொல்லட்டுமே. "ஆ! நான் ஒரு ஆண் மகனைப் பெற்றேன்" "எனக்காக புருஷனாய் நிற்கக் கூடியவர்களைப் பெற்றேன்" இன்று வெறும் இடத்தை நிரப்பும் விசுவாசிகள் அல்ல. கடமையை நிறைவேற்றும் ஊழியர்கள் அல்ல, இருப்புக் கோலால் ஆளுகை செய்யும் ஆண் பிள்ளைகள் ஆண்டவருக்குப் பிறக்கட்டும். அனேக விரோதிகள் எழும்பி தெய்வ மக்களுக்கு விரோதமாய் அணி நிற்கிறார்கள். அவர்களை அழிக்க தெபோராக்களைத் தேடுகிறோம். அது மாறட்டும். ஒவ்வொரு ஆண்களும் சபையிலே தனி வாழ்க்கையிலே, குடும்ப வாழ்க்கையிலே தங்கள் கடமைகளை நிறைவேற்ற கர்த்தர் உதவி செய்யட்டும். ஆமென்! புருஷராயிருங்கள்!

அத்தியாயம் 13

# புருஷர்களே உங்களை சோதித்துப் பாருங்கள்!

1. திருமண நாள் அன்று நீங்கள் மணமகளாயிருந்த மனைவியின் கரத்தை பிடித்துக்கொண்டு கர்த்தர் சமுகத்தில் செய்த உடன்படிக்கையில் உண்மையாயிருக் கிறீர்களா? (மல் 2:14).

2. உங்கள் மனைவியைக் கண்டடைந்ததின் மூலம் நன் மையை பெற்றதாக எண்ணுகிறீர்களா? (நீதி. 18:22).

3. மனைவியை அடைந்ததின் மூலம் கர்த்தரிடத்தில் தயை பெற்று இருக்கிறீர்கள் என்பதை ஒத்துக்கொள்கிறீர் களா? (நீதி. 1:22).

4. உங்கள் மனைவி கர்த்தர் உங்களுக்காக தந்த ஈவு என்பதை ஒத்துக்கொள்கிறீர்களா? (நீதி 19:14).

5. உங்கள் மனைவி உங்களுக்கு ஏற்ற (நீங்கள் எதிர்பார்ப் பின்படி அல்ல உங்கள் நிலைக்கு ஏற்ற) துணை என்பதை ஏற்றுக்கொள்வீர்களா? (ஆதி 2:18).

6. உங்கள் மனைவிக்கு நீங்கள் தலையாக இருக்கிறீர்கள் என்பதை உணர்ந்து செயல்படுகிறீர்களா? (எபே 5:2).

7. உங்கள் மனைவியை கர்த்தருக்கு அடுத்தபடி, ஆனால் மற்றெல்லாரைப் பார்க்கிலும் அதிகமாய் நேசிக்கிறீர் களா? (எபே 5:25).

8. உங்கள் மனைவியை உங்கள் சொந்த சரீரமாக பாவிக்கி றீர்களா? (எபே 5:28).

9. உங்கள் மனைவியை போஷித்துக் காப்பாற்றுகிறீர்களா? (எபே 5:29).

10. உங்கள் மனைவிக்குச் செய்யவேண்டிய தாம்பத்திய உறவின் கடமைகளைச் செய்கிறீர்களா?
(I கொரி 7:3:5).

11. உங்கள் மனைவிக்குச் செய்யவேண்டிய ஆத்மீக கடமைகளைச் செய்கிறீர்களா? ஆவிக்குரிய வாழ்வில் வளர அவர்களுக்கு என்ன செய்கிறீர்கள்? (I பேதுரு 3:7).

12. உங்கள் மனைவியை எல்லா வகையிலும் திருப்திப்படுத்த முயற்சிக்கிறீர்களா?

13. மனைவி பெலவீன பாண்டம் என்பதை கருதி பெலமுள்ள நீங்கள் அவர்களைத் தாங்குகிறீர்களா?
(I பேதுரு 3:7).

14. மனைவிக்கு வீட்டு வேலைகளில் உதவி செய்து தருகிறீர்களா?

15. மனைவி வியாதிப்படும்போது எரிச்சலடையாதபடி அவர்கள் செய்ய வேண்டிய வேலைகளை நீங்கள் செய்து சரியானபடி பராமரிக்கிறீர்களா?

16. மகப்பேறு காலத்தில் மனைவியின் உடல்நிலையும், மனநிலையும் பாதிக்கப்பட்டிருக்கும்போது அவர்கள் கஷ்டங்களைப் புரிந்து கொண்டு உதவி செய்கிறீர்களா?

17. மனைவியின் நல்ல காரியங்களை அடிக்கடி பாராட்டி மகிழ்ச்சியடைய செய்கிறீர்களா?

18. இருவரும் ஒன்று, எல்லாம் இருவருக்கும் பொதுவானது என்று எண்ணி பிரிவினையின்றி நடந்து கொள்ளுகிறீர்களா? (எபே. 5:31, மத். 19:4-6).

19. பிறர்முன் மனைவியை தரக்குறைவாக நடத்துகிறீர்களா? (I பேதுரு 3:7).

20. உங்கள் மனைவி வீட்டாரை மதித்து, உங்கள் வீட்டார் போல் பாவிக்கிறீர்களா?

21. மனைவி வீட்டாரை ஏளனமாக பேசி உங்கள் மனைவியை மனமடிவாக்குகிறீர்களா?

22. தவறு நடந்து விட்டால் மனைவியிடம் மன்னிப்பு கேட்பது உண்டா? (கேட்க வேண்டும்).

23. மனைவியிடத்தில் குடும்ப காரியங்களைப் பற்றி ஆலோசித்து முடிவு எடுக்கிறீர்களா? (ஆலோசிக்க வேண்டும்).

24. உங்கள் வேலை வருமானம், நீங்கள் போகுமிடங்கள், பழகும் நபர்கள் பற்றி உங்கள் மனைவிக்குச் சொல்வது உண்டா? (சொல்ல வேண்டும்).

25. மனைவியோடு தனிமை நேரம் ஏற்படுத்திக் கொண்டு மனந்திறந்து சம்பாஷிப்பது உண்டா?

26. மனைவியோடு சேர்ந்து அடிக்கடி ஜெபிப்பது உண்டா?

27. தகப்பன் என்ற நிலையில் பிள்ளைகளை நேசிக்கிறீர்களா?

28. பிள்ளைகளுக்கு கர்த்தரைப் பற்றி வேதத்தை பற்றி போதிப்பது உண்டா? (எபே 6:4).

29. பிள்ளைகளுக்கு முன்மாதிரியாக நடந்து கொள்கிறீர்களா?

30. பிள்ளைகள் கர்த்தரால் கொடுக்கப்பட்டிருக்கும் சுதந்திரம் (பூர்வீக சொத்து) என்பதை உணர்ந்து பராமரிக்கிறீர்களா? (சங் 127:4).

31. பிள்ளைகளுடைய படிப்பில் கவனம் செலுத்தி உதவி செய்கிறீர்ளா?

32. பிள்ளைகளை கோபமூட்டாமல் அன்புடன் சிட்சிக்கிறீர்களா? (கொலோ 3:21, எபேசி 6:4).

33. பிள்ளைகளுக்கு செய்ய வேண்டிய கடமைகளை சரிவர செய்கிறீர்களா?

34. குழந்தையை வளர்ப்பதில் மனைவிக்கு உதவி செய்கிறீர்களா?

35. பிள்ளைகளை சிட்சிக்க பிரம்பை பயன்படுத்துகிறீர்களா? (பயன்படுத்த வேண்டும்) (நீதி 13:24, 23:13,14).

36. கோபத்திஞல் மூர்க்கமடைந்து சிட்சிக்காமல் அன்பிஞல் நன்மைக்காக சிட்சிக்கிறீர்களா? (நீதி 3:12).

37. பிள்ளைகளுக்காக பாரத்துடன் தினமும் ஜெபிக்கிறீர் களா? (யோபு 1:35).

38. குடும்பத்தின் தலைவராக இருந்து குடும்பமாக கர்த் தரையே சேவிக்க நீங்கள் பிரயாசப்படுகிறீர்களா?

39. உங்கள் பெற்ருேருக்கு செய்ய வேண்டிய கடமைகளை ஒழுங்காக செய்கிறீர்களா?

40. என் கணவர் மிகச்சிறந்தவர் என்று உங்கள் மனைவியும், எங்கள் தகப்பனுர் மிகவும் சிறந்தவர் என்று உங்கள் பிள்ளைகளும், உங்களைப் பற்றி கூறும்படி சிறந்த கணவனுக, சிறந்த தகப்பனுக இருக்கிறீர்களா?

## அத்தியாயம் 14

# குணசாலியான பெண்!

திருமணமான விசுவாசிகளாகிய சகோதரிகளுக்குச் சில ஆலோசனைகளை கர்த்தருடைய வசனத்தின் அடிப்படையில் மூன்று நிலைகளில் ஆராய்வது பயனுள்ளது.

1. கணவனுடன் உறவு
2. கணவனின் குடும்பத்தினருடன் உறவு
3. பிள்ளைகளுடன் உறவு

## 1. கணவனுடன் உறவு:-

II கொரி 11:2ல் ''கற்புள்ள கன்னிகையாக கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக்கொடுக்க நியமித்தபடியினால்" ......என்றும், I கொரி 11:3ல் ''புருஷனுக்கு கிறிஸ்து தலை, ஸ்திரீக்கு புருஷன் தலை, கிறிஸ்துவுக்கு தேவன் தலை'' என்றும், வெளி 19:7ல் ''ஆட்டுக்குட்டியானவர் கலியாணம் வந்தது; அவருடைய மனைவி தன்னை ஆயத்தம் பண்ணினாள்" என்றும் எழுதப்பட்டிருக்கிறது. எனவே இவ்வுலகில் திருமண வாழ்க்கை பரலோகில் நாம் கிறிஸ்துவுடன் வாழப்போகும் வாழ்க்கைக்கு நிழல், தேவன், கிறிஸ்து, கணவன் ஒரு வரிசையில் வைக்கப்படுவதை கவனிக்க. எனவே கணவனை தேவன் எந்த நிலையில் வைத்திருக்கிறார் என்பதை முதலாவது மனைவி உணர வேண்டும். திருவசனத்துக்கு கீழ்ப்படியாத புருஷனாக இருந்தாலும்கூட மனைவியின் பயபக்தியுடன் கூடிய கற்புள்ள நடக்கையைப் பார்த்து, போதனையின்றி மனைவியின் நடக்கையினால் ஆதாயப்படுத்திக் கொள்ளப்படுவார். வார்த்தையினாலும் அல்ல (I பேதுரு 3:1,2) வாழ்க்கையினால் மட்டுமே வசனத்துக்கு கீழ்ப்படியாத கணவனை ஆதாயப்படுத்த முடியுமே, தவிர, சபையில் சாட்சி நேரத்தில் கணவனின் குறைகளை

சொல்லி மற்றவர்களை ஜெபிக்க சொல்வது மறைமுகமாக கணவனை தூற்றுவதாகும்.

சுய இரக்கம் நம்மை விட்டு நீங்க வேண்டும். சுயத்துக்கு சாகவேண்டும். விசுவாசிகள் என்ற பதத்தைக் காட்டிலும் சீஷர் என்ற பதம் நமக்கு உரியதாக வேண்டும். லூக் 14:26, 27, 33 வசனங்களை வைத்து நம்மை ஆராய்ந்து சரிப்படுத்துவோம். ரோமர் 6, 7, 8 அதிகாரங்களில் பவுல் அப்போஸ்தலனின் மனப்போராட்டமும், வெற்றியுள்ள வாழ்வின் ரகசியமும் நம்மை பெரிதும் ஊக்குவிக்கின்றன. பரிசுத்த ஆவியானவரின் ஆளுகைக்கு நாம் முழுமையாக ஒப்புக் கொடுத்தால், சுய விருப்பு வெறுப்புகளுக்கும், மாம்ச சிந்தைக்கும் சாவு மணி அடித்துவிட முடியும். அப்போது நம் கணவர் கோபம் கொள்ளும்போது 'அவர் கோபம் கொள்ளும் சூழ்நிலையை உருவாக்கிவிட்டேனே' என வருந்துவோம். அவர்களுக்குத் தெரியாமல் மறைத்து எதையும் செய்யமாட்டோம் (ஊழியர்களுக்கும், ஊழியங்களுக்கும் தசம பாகம் அனுப்புவது கூட). கணவருக்குத் தெரியாமல் குடும்ப பிரச்சனைகளை ஜெப குறிப்பாகக் கூட எழுதமாட்டோம்.

நம் கணவர் நம்மை நம்ப வேண்டுமானால், நாம் அவர்களை நம்ப வேண்டும். அவர் நம்மை நேசிக்க நம் அன்பை முதலில் செலுத்துவோம். ''மனுஷர் (கணவர்) உங்களுக்கு எப்படிச் செய்ய வேண்டுமென்று விரும்புகிறீர்களோ, அப்படியே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்'' (லூக். 6:31). ''நீங்கள் எந்த அளவினால் (கணவருக்கு) அளக்கிறீர்களோ, அந்த அளவினால் உங்களுக்கும் அளக்கப்படும்'' (லூக். 6:38). (கணவரை) குற்றவாளி என்று தீர்க்காதிருங்கள்.

கணவர் வெளியூரிலிருந்து, அலுவலிலிருந்து, ஊழியத்திலிருந்து வரும் நேரங்களில் 'நான் அவருக்கு ஏற்ற துணை' என்பதை நினைவில் கொண்டு களைப்பாற்ற, உற்சாகப்படுத்த, ஊக்குவிக்க காத்திருங்கள். ஜெப அறையிலோ, ஊழியத்திலோ, சகோதரிகள் மத்தியிலோ காணப்படுவோமானால்

அவர்கள் ஏமாற்றத்திற்குள்ளாகி எரிச்சலடைவார்கள். நாம் செய்யக்கூடிய பெண்கள் மத்தியில் உள்ள ஊழியமானாலும், உபவாசமானாலும், கூட்டங்களானாலும் அவர்கள் விருப்பத்தையும், அனுமதியையும் பெற்றே மேற்கொள்ள வேண்டும்.

கணவன் மனைவி உறவில் அநேக விசுவாசிகளான சகோதரிகள் ஞானமற்று நடந்து கொள்வதுண்டு. அவர்கள் விரும்பும் நேரங்களில் நாம் அவர்களுக்கு இணங்கி நடக்க வேண்டும். நம் கணவருக்கு அழகாக இருந்தால் போதும். அவர்களை திருப்திபடுத்துவதும், அவர்களை சந்தோஷப்படுத்துவதும் நம் வாஞ்சையாக இருக்கட்டும்.

மற்ற ஆண்களோடு ஒப்பிட்டுப் பேசுவது, பெற்றோர் வீட்டைப் புகழ்வது கூடவே கூடாது. கணவர் இல்லாத நேரங்களில், மற்ற ஆண்களையோ, ஊழியர்களையோ, சகோதரர்களையோ (மிகவும் அத்தியாவசியமாக இருந்தாலன்றி) வீட்டில் ஏற்றுக் கொள்வது, உபசரிப்பது தவிர்க்கப்பட வேண்டும். எதிர் பாலாருடன் பேசும்போது அவர்கள் கண்களை பாராமல் பேசுவது நல்லது. 'பொல்லாங்காய் தோன்றுகிறவைகளை விட்டு விலகு'. நம்மை எதிர்பாலார் பார்க்கும் போது, கண்களில் இச்சை உண்டாக நம் உடையும், பழகும் முறையும், பேச்சும் ஒருபோதும் இடம் தரக் கூடாது. மதியீனமான பத்சேபாள், உத்தமனான தாவீது விழக் காரணமானாளே. மற்றவர்கள் காணக்கூடிய இடத்தில் அவள் ஸ்நானம் பண்ணியதே தவறு.

தீர்க்கதரிசிகளை குறித்து சொல்லுகிறவர்களாகவும், ஊழியர்களை கணவருக்கும் மேலான இடத்திலும் வைப்பதினால், விசுவாசிகளான கணவரும், விசுவாசத்தை விட்டுவிலக நாம் காரணராகிறோம். நம்மை மற்ற ஆண்கள் புகழுவதையோ, நம்மைக் குறித்துப் பேசுவதையோ, நம் கணவர் விரும்பமாட்டார்கள். அது அவர்களுக்கு நம்மேல் உள்ள பற்றையே காண்பிக்கிறது. நாமும் மற்ற ஆண்களைப் புகழ விரும்ப மாட்டார்கள். நம் தேவன் எரிச்சலுள்ள தேவன். நம் கணவரும் கூட. அல்லேலூயா!

ஒரே ஒரு வாழும் முறைதான் உலகுக்கு தேவன் வேத வசனத்தில் வகுத்துக் கொடுத்துள்ளார். நூற்றுக்கு நூறு அதன்படி வாழ முடிவெடுத்து முயலுவோமாக. சகோதரி களே, அப்போது கிறிஸ்து இயேசுவின் சாயலை உங்கள் கண வரில் நீங்கள் காணமுடியும். உங்கள் திருமண வாழ்வு என் றும் இன்பமாக பரலோக வாழ்வின் நிழலாக இருக்கும்.

## 2. கணவனின் குடும்பத்தினருடைய உறவு:-

''குமாரத்தியே கேள், நீ உன் செவியைச் சாய்த்துச் சிந்தித்துக் கொள்; உன் ஜனத்தையும், உன் தகப்பன் வீட் டையும் மறந்து விடு. அப்பொழுது ராஜா உன் அழகில் பிரியப்படுவார்" (சங். 45:10-11).

**'விடு, இணை' :-**

ரூத், நகோமியின் வாழ்க்கை நமக்கு முன் ஒரு சவால். ''உம்முடைய ஜனம் என்னுடைய ஜனம், உம்முடைய தேவன் என்னுடைய தேவன். நீர் மரணமடையும் இடத் தில் நானும் மரணமடைந்து...மரணமேயல்லாமல் வேறொன் றும் உம்மைவிட்டு என்னைப் பிரித்தால் கர்த்தர் அதற்குச் சரியாகவும் அதற்கு அதிகமாகவும் எனக்குச் செய்யக்கடவர்" (ரூத். 1:16, 17).

ஒரு மோவாபிய பெண், தன் கணவனை இழந்தபின், மாமியோடு துன்பத்தை அனுபவிக்க இணைந்து கொள் கிறளே! நான் உயர்ந்த குலப் பெண், படித்து பட்டம் பெற் றவள், பணம் படைத்தவள், கை நிறைய சம்பாதிக்கும் கண் நிறைந்த கணவன், அவர் குடும்பத்தினரிடம் நான் எப்படி நடந்து கொள்கிறேன்? உள்ளத்தை ஆராய்வோமா? ''என்னை கனம் பண்ணுகிறவனை நானும் கனம் பண்ணு வேன்" வாக்கு பொய்யாகுமா? துன்பத்தை முழுமனதோடு ஏற்க வந்தவளுக்கு இன்பமான வாழ்வு காத்திருந்தது. தாவீதுக்கு முன்னோராய், இயேசு கிறிஸ்துவின் வம்ச வர லாற்றில், புதிய ஏற்பாட்டின் முதல் அதிகாரத்தில் பொறிக் கப்பட்டவளாய் திகழ்கிறாள் ரூத்.

ஜாதி வெறிபிடித்த விசுவாசி என்று சொல்லிக்கொள்ளும் சகோதரியே 'Praise the Lord Sister' என்று அடுத்தவரிடம் உதட்டளவில் கூறி தேவதூஷணம் செய்கிறாயல்லவா? அவர்களை உங்கள்சொந்த சகோதரியாக நினைத்தால் அவர்களுடன் சம்பந்தம் கலக்க ஏன் தயக்கம்? வேறுஜாதி. வேதத்திலிருந்து உதாரணம். ஆபிரகாம் ஈசாக்குக்கு பெண் கொள்ள எலியேசரை தன் இனத்தாரிடம் அனுப்பினார். நான் குடியிருக்கிற கானானியரில் பெண் கொள்ளாமல்......... கானான் யார்? நோவாவின் மகனான காமின் மகன், ஆபிரகாம் யார்? நோவாவின் மகனான சேமுடைய வம்சம் (ஆதி. 11ம் அதிகாரம்). கானான் நோவாவினால் சபிக்கப்பட்டான் (ஆதி. 9:15; 10ம் அதி). ரெபேக்காளும் நோவாவின் சந்ததி கானானியரும் நோவாவின் சந்ததி தான். ரூத் யார்? இஸ்ரவேலரின் பார்வையிலே தாழ்ந்தவர்களான மோவா பியரின் சந்ததி. மனிதன் முகத்தைப் பார்க்கிறான். தேவன் இருதயத்தைப் பார்க்கிறார்.

இங்கு மாமியின் வாழ்க்கை மோவாபிய விக்கிரகங்களை வணங்கிய ரூத்துக்கு சவால். வார்த்தையையல்ல; வாழ்க்கையையே ரூத் பெத்லகேம் வரக் காரணமாயிற்று. மாமியே, உங்கள் வாழ்க்கை, உங்கள் மருமகளை கர்த்தரிடம் வழி நடத்துகிறதா? அல்லது என் மாமியார் கையிலிருப்பது வேத புத்தகம், வாயிலிருப்பது வசைச் சொல் என்று தேவனுடைய நாமம் தூஷிக்கப்பட ஏதுவாக உள்ளதா? உங்கள் மருமகளின் பண்பை விரும்புகிறீர்களா? பணத்தை விரும்புகிறீர்களா? இன்றைக்கு விசுவாசிகள் என்று சொல்லிக்கொண்டு, நகை வேண்டாம், அதற்குரிய பணம் வேண்டும், இன்னின்னது கொடுக்க வேண்டும் என்று ஆண்பிள்ளைகளை பெற்றவர்கள் பேரம் பேசுவதும், பெண் பிள்ளைகளை பெற்றவர்கள் கண்ணீர் விடுவதுமான அவலநிலை எங்கும் காணப்படுகிறது. பெண்ணை பெற்றவர்களை படுத்தும் பாடுகளுக்கு கர்த்தரின் முன் ஒரு நாள் நீங்கள் கணக்கு கொடுக்க வேண்டும். மறந்துவிடாதீர்கள். தேவ ஆக்கினைக்கு தப்ப முடியாது. இன்றே மனந்திரும்புங்கள். ஜாதிக்கும்,

வரதட்சணைக்கும் மரித்து விடுங்கள். உங்கள் வாழ்வும், உங்கள் பிள்ளைகள் வாழ்வும் வளம்பெறும். முன்குறிப்பிட்டதுபோல், சுயத்துக்கு செத்தால் நீங்கள் கணவன் வீட்டில், அவருக்கும் அவர் குடும்பத்தாருக்கும் ஆசீர்வாதமாக இருப்பீர்கள்.

அத்தியாவசியமான தவிர்க்க முடியாத காரணம் இருந்தாலன்றி தாய் தகப்பன் வீட்டிற்கு, அதுவும் கணவன் இன்றி வரவேகூடாது. நாம் பிறந்த வீட்டையும் பெற்றோரையும், உறவினரையும் கணவன் வீட்டில் புகழவோ, உயர்த்திப் பேசவோ கூடாது. கணவன் வீட்டாரை தாழ்த்தியோ, விட்டுக்கொடுத்தோ பிறரிடமோ நம் தாய் தகப்பனிடமோ பேசக்கூடாது. கணவன் குடும்பம் என் குடும்பம். அவர்கள் பிரச்சனை என்னுடையது. அது வெளியிடுவது மிகவும் தவறு. அன்பு சகலத்தையும் தாங்கும், சகலத்தையும் சகிக்கும். சுருங்கக் கூறின் நீதிமொழிகள் 31ம் அதிகாரமும், I கொரிந். 13ம் அதிகாரமும் நாம் அனுதினமும் அகம் பார்க்கும் கண்ணாடியாக அமையட்டும்.

### 3. பிள்ளைகளுடன் உறவு:-

**''இதோ, பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்தரம்...... அவரால் கிடைக்கும் பலன்'' (சங். 127,4).**

சகோதரிகளே, உங்களுக்கு இந்தியாவின் அல்லது உலகின் பெரிய தலைவரிடமிருந்து, அல்லது அருமையானவர்களிடமிருந்து ஒரு ஈவு கிடைக்குமானால் அதைக் குறித்து நாம் எப்படி மகிழ்வோம்! அதை எப்படி பாதுகாப்போம்! 'என் பிள்ளைகள்' என்று சொல்லிக் கொள்கிறோமே, அவர்கள் சர்வ வல்லவரிடமிருந்து பெறப்பட்ட ஈவு என்ற உணர்வு நமக்கு உண்டா? இல்லவே இல்லை. அதனால்தான் இன்று அநேக விசுவாசிகளின் ஜெபக்குறிப்பு பிள்ளைகளின் பிரச்சனை. அதற்கு அவர்களல்ல, தாய்மாராகிய நாம் தான் காரணம். ''பிள்ளையானவன் நடக்க வேண்டிய வழியில் அவனை நடத்து, அவன் முதிர்வயதிலும் அதை விடாதிருப்பான்''. கு. கு. ?

இடையில் அவன் விட்டுவிடுவதும் விலகுவதும் ஏன்? நடக்க வேண்டிய வழியில் நாம் நடத்தவில்லை (நீதி. 22:6). யார் நடத்த வேண்டும்? புத்தி சொல்வது தகப்பன்; ஆனால் போதிக்க வேண்டியது தாய் (நீதி. 1:8). புத்தி சொல்வது, அவ்வப்போது-தவறும் போது தேவை ஏற்படும் போது. ஆனால் போதித்தல் தொடர்ந்து செய்ய வேண்டிய ஒன்று.

இதை நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

சரி எப்படி இந்த சுதந்தரத்தை வளர்ப்பது? 'கர்த்தர் ஞானத்தை தருகிறார். அறிவும் புத்தியும் அவர் வாயினின்று வரும்'. சகோதரியே, உன் வயிற்றில் ஒரு குழந்தை உருவாகி உள்ளது என்பதை அறிந்தவுடனே, முதலாவது கர்த்தருக்கு நன்றி செலுத்துவாயா? இரண்டாவது அதை வளர்ப்பதற்கு உன்னை தகுதி படுத்து. வளர்க்க கர்த்தரின் ஞானத்தைக் கேள். விசுவாசியான சகோதரியின் பிரசவ நேரம் ஒரு பெரிய சவாலும் சாட்சியுமாகும். நம்மிடம் ஆண் குழந்தையை கொடுக்க வேண்டுமா அல்லது பெண் குழந்தையை கொடுக்க வேண்டுமா என்று தேவன் தீர்மானம் செய்கிறார், அதைப்பற்றிக் குறைகூறி தேவனுடைய மனதை எத்தனை போ வேதனைபடுத்துகிறோம். நீ உன்னையே ஞானியென்றெண்ணாதே. விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்ற விசுவாசிகள், குழந்தைகளை பிரதிஷ்டை செய்யாது, அறியாமையின் காலத்தின் வழக்கத்தின்படி செய்தால், தேவனுடைய கோபாக்கினைக்கு ஆளாகிறார்கள் (எபே. 2 2). பிள்ளைக்கு பெயரிடுவதற்குக்கூட கர்த்தரிடம் கேட்கவேண்டும்.

பிள்ளைகள் வேண்டாமென்று எண்ணுவதோ, தடுப்பதோ தேவனுடைய வசனத்துக்கும் சித்தத்துக்கும் விரோதமானது. விசுவாசமுள்ள சந்ததியை நாம் உருவாக்க வேண்டும். நம் பிள்ளைகள் வருங்கால சமுதாயத்தை உருவாக்கட்டும் என எண்ண வேண்டாமா? மதியீனமாய் மாம்ச சிந்தைக்கு இடம் கொடுத்து விடாதீர்கள். பிள்ளைகளை அருளுகிற கர்த்தர் அவர்களை வளர்ப்பதற்கு தேவையான யாவற்றையும் அருளாதிருப்பது எப்படி?

பிள்ளையின் முதல் ஆசிரியர் தாய். பார்த்து பின்பற்று தல் குழந்தையின் சுபாவம். தாயின் மாதிரி வாழ்க்கை மிகவும் முக்கியமானது. இயேசு கிறிஸ்துவின் அடிச்சுவடு களில் நடக்க என்னைப் பார்த்து நட மகனே என சவால் விடும் வாழ்க்கையாக நம் வாழ்க்கை மாற வேண்டும்.

நம்முடைய குரல், பேசும் முறை, சாந்தமும் அமைதலு முள்ளதாய் இருந்தால், பிள்ளைகள் மனநிலையும் வளர்ச்சியும் சிறந்து விளங்கும். நம்முடைய கணவர், விருந்தினர், உற வினர், வேலையாட்கள் யாவரிடமும் நாம் பழகுவதை இரண்டு கண்கள் நோக்கிக்கொண்டே இருக்கின்றன என்ற உணர் வோடு, நாம் ஜாக்கிரதையாக நடந்துக் கொள்ளவேண்டும்.

''பிரம்பைக் கையாடாதவன் தன் மகனைப் பகைக்கிறன்'' (நீதி. 13:24). ஒருவர் இவ்வாறு விளக்கம் கொடுத்தார்: பிள்ளையை தண்டிக்க பிரம்பை போய் எடுக்கும் நேரத்திற் குள் நம் மாமிச சிந்தையான கோபவெறி தணிந்து, தவறை நீக்கி திருத்தவேண்டும் என்ற உணர்வோடு நாம் அடிப் போம். அதைவிட்டு கையும் காலும் இரும்பும், நாய் சங்கிலியும் பிள்ளையின் உடலை பிசைந்து விடுவதைக் காணும் போது, இந்த கொடூரர் கையில் உம் சுதந்திரங்களை கொடுத்துவிட்டீரே கர்த்தாவே, என கதறத்தான் தோன்று கிறது. பிள்ளைகளை அற்பமாய் எண்ணி, உங்கள் அதிகாரத் தைக் காட்டும் தாயே, அவர்களுடைய தேவதூதர்கள் தேவ சமுகத்தில் இருக்கிறார்கள். குற்றவாளியாக நிற்கப் போவது நீங்கள்தான்.

பிள்ளை வயது வரும்போது, வசனத்தின் அடிப்படையில் ஆண்பிள்ளைக்குத் தகப்பனும், பெண்ணுக்குத் தாயும், பால் கல்வி கொடுக்கவேண்டும். நம் சரீரம் தேவனுடைய ஆல யம். அதன் பரிசுத்த தன்மையை பிள்ளைகள் உணரும்படி செய்யவேண்டும். அவயவங்கள் தேவனால் எதற்காக படைக் கப்பட்டன என்பதை கற்பிக்க வேண்டும். இது அநேக ரகசிய பாவங்களிலிருந்து அவர்களை விலக்கிக் காக்கும்.

ரோமர் முதல் அதிகாரத்தில் பவுல் அப்போஸ்தலன் அநேக பாவங்களைகுறித்துக் கூறி, 32ம் வசனத்தில் அதற்குரிய தண்டனை மரணம் எனவும் எச்சரிக்கிறார். இன்னும் அநேக வேத சரித்திரங்களையும், வசனங்களையும் எடுத்துக்கூறி அவர்களை பரிசுத்த சந்ததியாக வளர்க்கவேண்டும்.

இயேசு கிறிஸ்து, அவர்கள் ஹீரோ ஆக வேண்டும். அவர் அன்பை குறித்த பாடல்களை கற்றுத்தரவேண்டும். அவர்களை மதிக்கிறோம். அவர்கள் நமக்கு முக்கியமானவர்கள் என்று உணர்த்தவேண்டும். நம் குடும்ப பிரச்சனைகளை பகிர்ந்து கொள்ளல், ஆலோசனை கேட்டல், நம் குடும்ப ஜெபக் குழுவில் ஒருவராக ஏற்றுக்கொள்ளல், பொறுப்புகளை கொடுத்து ஊக்குவித்தல், இவை சிறந்த பொறுப்புள்ள தலைவர்களாக மாற உதவியாக இருக்கும்.

மத். 7:24ன்படி வசனத்தின் அஸ்திபாரத்தில் கன்மலையின்மேல் தன் வாழ்க்கையை கட்ட மிகுந்த கருத்தாய் இருக்கவேண்டும். ஒரு கர்த்தருடைய ஊழியர், தன் மகனை காலையில் எழுப்பி பல்துலக்கிவிட்டு, குளிப்பாட்டி, உடுத்தி, உணவூட்டி முடிக்குமுன், ஒரு வேதபகுதியையும் வசனங்களடங்கிய பாடலையும் மனப்பாடம் செய்ய வைப்பதைப் பார்த்து நானும் அதைக் கற்றுக் கொண்டேன். நீங்களும் செய்யுங்கள். வெளி உலகுக்குச் செல்லுமுன் வசனத்தின்படி எது சரி, எது தவறு என்பதை அறிந்து வாழ பழக்கிடுவோம்.

நாம் வளர்ந்த சூழ்நிலை வேறு. நம் பிள்ளைகள் கடைசி நாட்களின் கொடிய காலங்களில் வளருகிறார்கள் என்பதை உணர்ந்து அவர்களுக்காக பாரப்படுவோம். அவர்களுக்கு நாம் தான் ஆசிரியர். சகோதரி, தோழி நிலைகளில் இருந்து மனம் திறந்து நம்முடன் பேசக்கூடிய சூழ்நிலைகளை உருவாக்க வேண்டும். விளையாட்டுத் தோழர்களாக இருக்கும் நிலையில், அவர்கள் சுபாவப் பண்புகளை அறிவது எளிது. ஆண்பிள்ளைகளையும், பெண்ணையும் பாரபட்சமின்றி நடத்த வேண்டும். இல்லையேல் பிள்ளைகளிடையே கசப்பு வெறுப்பு உணர்ச்சிகளை ஏற்படுத்தி விடும். ஏசா, யாக்கோபின் பகைக்கு, ஈசாக்கு ரெபேக்காளின் பாரபட்சம் காரணமல்லவா?

என் பிள்ளை சரியில்லை என வருந்தும் சகோதரியே, நீங்கள் சரியாக இருந்தால் உங்கள் பிள்ளை சரியாக இருக்கும். "நீ என் வேதத்தை மறந்தால், நான் உன் பிள்ளைகளை மறந்து விடுவேன்" (ஓசியா 4:6). பள்ளிக்குப் போகுமுன் ஜெபித்து அனுப்புவது, போனபின்பு அவர்களுக்காக ஜெபிப்பது, வீடு திரும்பும் போது அவர்களை சந்தோஷமாக வரவேற்று, அவர்கள் தேவைகளை கவனித்து, ஜெபித்து அன்று நடந்த பள்ளிக் காரியங்களை விசாரித்து, பாடங்களைக் கவனிப்பது பிள்ளையின் ஆவிக்குரிய, மன, சரீர வளர்ச்சிக்கு இன்றியமையாதது. ஒரு தாய் வீட்டிலிருந்தால்தான் இது சாத்தியமாகும்.

சத்துருவின் சதி என்ன தெரியுமா? பயங்கரமான காரியங்களை சாதாரணமானதாக காண்பித்து உணர்வற்ற நிலையை உண்டுபண்ணி பிள்ளைகளை நம் கைகளிலிருந்து பிடுங்கப் பார்க்கிறான் ஜாக்கிரதை! கணவனுடன் சேர்ந்து, அல்லது தனித்து உபவாசித்து பிள்ளைகளுக்காக ஜெபிக்கிறீர்களா? விலையேறப்பெற்ற பொக்கிஷங்களை விழிப்புணர்ச்சியோடு வளர்ப்போம். நம் பிள்ளைகள் எழும்பி நம்மைப் 'பாக்கியவதி' என்று சொல்லட்டும்.

நம்முடைய தவறுகளை உணருவோம். திருத்திக் கொள்வோம். வேலை பார்க்கிற தாய்மாரே, வசனத்தின்படி வீட்டில் இருக்க வேண்டிய நாம் என்றும் கர்த்தரின் வழி நடத்துதலுக்கு ஒப்படைப்போம். வேலைகளை விட்டு வீட்டின் பொறுப்புகளை முழுமையாக ஏற்று தேவசித்தத்தை நிறைவேற்ற ஆவியானவர் உதவி செய்வாராக!

*

## அத்தியாயம் 15

# கனிதரும் திராட்சை செடி!

"உன் மனைவி உன் வீட்டோரங்களில் கனிதரும் திராட்சை கொடியைப் போல் இருப்பாள்" (சங் 128:3).

**எப்படிப்பட்ட கனி தரவேண்டியவள் மனைவி?**

யோவான் 15:2ல் இயேசு கிறிஸ்து கூறுகிறார்: கனி கொடுக்கிற கொடி எதுவோ, அது அதிக கனிகளைக் கொடுக்கும்படி அதை சுத்தம் செய்கிறார். நாம் கனி கொடுத்தால் போதாது. அதிக கனிகளைத் தர பிதா எதிர்பார்க்கிறார்.

**எப்படி அதிக கனிகளைக் கொடுப்பது?**

1. சுத்தம் செய்தால்
2. அவரில் நிலைத்திருந்தால்

**சுத்தம் செய்தல் என்றால் என்ன?**

திராட்சை பயிரிடும் தோட்டங்களில் இதை கற்றுக் கொள்ளலாம். சுத்தம் செய்தல் என்றால் தேவையற்ற அல்லது கனி தருகிற கொடிகளுக்குச் செல்ல வேண்டிய சாரத்தை, படர்ந்து செல்லும் தேவையற்ற கொடிகளுக்குச் செல்லாவண்ணம் தடுத்தல் ஆகும். அவற்றை கத்தரித்து மடித்து கட்டி விடும்.

ஒவ்வொரு மனைவியும் அதிக கனிகளைத் தரவேண்டும். அதற்கு தன்னை ஆவியானவர் வெட்டவேண்டிய, அகற்றவேண்டிய, நீக்கவேண்டிய பகுதிகளை வெட்டி அகற்றி நீக்கிப்போட முற்றிலும் ஒப்புக்கொடுப்போமா? கிறிஸ்துவுக்குள் அருமையான சகோதரியே, நீ இன்னும் அதிக கனிகளைத் தரவேண்டும் என்பதை உணருகிறாயா? உன்னில் வெட்ட வேண்டிய பகுதிகள் உண்டு என்பதை உணருகிறாயா? சுத்தம் செய்தல் ஒரு வேதனையான அனுபவம் தான். ஆனால் அது தேவையான அனுபவம். அப்படியானால் என்னில் நீக்கவேண்டியவை யாவை என தற்சோதனை செய்வோமா?

கலாத்தியர் 5:19ல் பவுல் அப்போஸ்தலன் வெளியரங்கமாயுள்ள மாமிசத்தின் கிரியைகளின் பட்டியலே கொடுத்திருக்கிறரே. பார்த்த மாத்திரத்தில் விசுவாசியாகிய என்னில் இந்த விபசாரம், வேசித்தனம், அசுத்தம், விரோதங்கள், வைராக்கியங்கள், பொருமைகள், கொலைகள் வெறிகள், களியாட்டுகள் முதலானவைகள் இல்லை என்று கருதலாம். இவை எல்லாவற்றையும் ஒவ்வொன்ருக பார்க்க இயலாது. ஒரு சில எடுத்துக்கொள்வோம்.

**விபசாரம்:-**

விபசாரரே, விபசாரிகளே உலக சிநேகம் தேவனுக்கு விரோதமான பகை என யாக்கோபு 4:4ல் பார்க்கிறோம். அப்படியாளுல் ஆவியானவர் உலக சிநேகம் உள்ளவர்களை எப்படி அழைக்கிறர்? விபசாரரே! சகோதரியே, எத்தனை காரியங்களில் உலக சிநேகம் இருக்கிறது? பண சிநேகம், ஜாதி சிநேகம், பதவி சிநேகம், மதிப்பு சிநேகம், பாரம்பரிய சிநேகம், இன்னும் எத்தனை சிநேகங்கள் இந்த அவயங்களில் ஒட்டிக்கொண்டிருக்கிறது. திருமணத்திற்கென பெண்ணை போய் பார்த்துவிட்டு பையன், "பெண்ணை எனக்கு பிடித்திருக்கிறது. கொடுக்கல் வாங்கல் என் தாய் பேசிக்கொள்வார்கள்" என்கிறர். தாய் போய் பேரம் பேசுகிறர். என்ன பரிதாபம்! ஞானஸ்நானமும், பரிசுத்த ஆவியின் அபிஷேகமும் பெற்ற எத்தனை தாய்மார் இப்படி இடறலாக இருக்கிறர்கள்! இன்னும் ஜாதி ஒழியவில்லையே. திருமணங்களில் மாலையும், வரிசைகளும் நாளும் நேரமும்! எவ்வளவு மாய்மாலம்! எதற்கு ஒத்தவேஷம்! இப்படிப் பட்டவர்களுக்குத்தான் எந்திரக்கல். இப்படிப்பட்ட ஆவிக்குரிய பரிசேய வேதபாரகருக்குத் தான் ஐயோ! கூறுகிறர் ஆவியானவர்.

**விக்கிரகாராதனை:-**

கொலோசேயர் 3:6ல்... விக்கிரகாராதனையான பொருளாசை ஆகிய இவைகளைப் பூமியில் உண்டுபண்ணுகிற உங்கள் அவயங்களை அழித்துப் போடுங்கள். இவைகளின்

பொருட்டு, கீழ்படியாமையின் பிள்ளைகள் மேல் தேவ கோபாக்கினை வரும். விபசாரம், விக்கிரகாராதனை, வேசித் தனம் இவையாவும், கணவன் இருக்க வேறொருவனை விரும்பும் பெண் எப்படியோ, அப்படியே மணவாளன் இயேசு கிறிஸ்து வுக்கும் நமக்கும் இடையே வரக்கூடிய யாவும் நம்மை தேவகோபாக்கினைக்கு பாத்திரராக்கும். எச்சரிப்படை வோமா?

II கொரி 11:2ல் நம்மை கற்புள்ள கன்னிகையாக கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக்கொடுக்க நியமிக் கப்பட்டவர்கள் என வாசிக்கிறோம்.

**பகை, விரோதங்கள்... கோபங்கள்:-**

நம் கணவருடைய குடும்பத்தினருடன் நம் தொடர்பு எப்படி உள்ளது? மாமியார் நகோமியைப் போலும், மருமகள் ரூத் போலவும் இருக்கிறோமா? கணவருடன் நம் தொடர்பு எப்படி உள்ளது? சாட்சி சொல்லும்போது கணவரின், மாமியாரின், அவர் குடும்பத்தினரின் குறைகளைக் கூறி ஜெபிக்கும்படி கூறுதல் அவர்களைத் தூற்றுவதாகும். மற்ற வர்களை குற்றவாளியாக தீர்க்க நீ யார்?

**சுயம்:-**

கலாத்தியர் 5:24ல் கிறிஸ்துவினுடையவர்கள் தங்கள் மாம்சத்தையும், அதின் ஆசை இச்சைகளையும் சிலுவையில் அறைந்திருக்கிறார்கள். லூக்கா 16:26,27,33ம் வசனங் களில் யார் சீஷனாகமாட்டான் என்று இயேசு கிறிஸ்து கூறுகிறார். தன்னையும், தன்னுடையவர்களையும், தன்னு டைமைகளையும் வெறுக்காதவர் அவருக்கு சீஷராக இருக் காலும் முடியாது. அவருடைய கட்டளை என்ன? சீஷரா குங்கள்.

**ஏன் நகை அணிகிறீர்கள்:-**

1. மனிதர் என்னை மதிக்க வேண்டும்.

2. நான் மற்றவர்கள் பார்வையில் அழகாகத் தோன்ற வேண்டும்.

மனிதரால் மதிக்கப்பட விரும்புகிறவர்கள், தேவனால் மிதிக்கப்படுவார்கள். மனிதரால் அங்கீகரிக்கப்பட விரும்பினால், தேவனால் புறக்கணிக்கப்படுவார்கள். தன்னை அலங்கரித்துக் கொள்ள (I பேதுரு 3:3ல் உள்ளபடி) நான் விரும்பினால் தேவனை முட்டாள் என கூறுவதாகும். அவருடைய அழகிய படைப்பில் குற்றம் காணுவதாகும். எத்தனை முரட்டாட்டம். இது பிசாசின் குணமல்லவா?

எத்தனை ரட்சிக்கப்பட்ட அபிஷேகம் பெற்ற, ஊழியம் செய்கிற சகோதரிகள், தாங்களும் கீழ்ப்படியாமல் மற்றவர்களுக்கும் இடறலாய் இருக்கிறார்கள். எந்திரக் கல் வேண்டாம், வெட்டி விடுவோம் இந்த விதண்டாவாதத்தை மற்றவர்களை சந்திக்க, நகை அணிதல் உதவியாக இருக்கிறது என்கின்றனர். வசனத்தை விதைத்தால் விளையச் செய்கிறவர் ஆவியானவர். ஒருவரும் பூட்டக்கூடாதபடி திறந்த வாசலை வைக்கிறவர் இந்த மனுஷீக சிந்தனையை வெறுக்கிறார். I பேதுரு 3:3க்கு கீழ்ப்படிந்து இந்த அலங்காரங்களை வெட்டி விடுவோமாக!

**பிரிவினை: -**

ஆவிக்குரிய அனுபவங்களின் வேறுபாடுகள் இன்று ஏராளமான பிரிவினைகளை ஏற்படுத்துகிறது. மற்றவர்களுடைய குறைந்த வளர்ச்சி எனக்குள் பிரிவினை, பெருமை, தாழ்வு மனப்பான்மையை ஏற்படுத்தக் கூடாது. எனக்கு கிடைத்த வெளிச்சத்தில் நான் நடப்பது கர்த்தரின் சுத்த கிருபை என்றே உணர வேண்டும். அதற்குத் தகுதியாய் உண்மையோடு ஜீவிக்க வேண்டும். அந்த வெளிச்சத்தை பெறாதவர்களுக்காக ஜெபிக்க வேண்டும். சாந்தத்தோடும் அமைதலோடும் எடுத்துச் சொல்ல வேண்டும். பாரபட்சப் பிரிவினையே, ஈசாக்கு ரெபேக்காளின் பிள்ளைகளையும் பிரித்தது.

**பாரம்பரியங்கள்: -**

இது பெண்களிடம் அதிகம் ஒட்டிக் கொண்டுள்ள பாவம். இயேசுகிறிஸ்து எதிர்த்து நின்றது பாரம்பரியங்

களுக்கு. சிலுவையில் அறையப்பட்டதும் இதற்கென்றே மனுஷருடைய கற்பனைகளை உபதேசங்களாக போதித்து வீணாய் எனக்கு ஆராதனை செய்கிறார்கள்(மத். 15:9). என்னை நினைக்கிறதற்காக செய்யுங்கள் என்றது எதை? இயேசு கிறிஸ்துவின் மரணத்தை நினைவு கூரவும், தெரிவிக்கவும் சொன்னார், கொண்டாடச் சொன்னாரா? இதற்கு சாதகமாக நாட்களை விசேஷித்துக் கொள்கிறவன்...... வசனமா? இஸ்ரவேல் புத்திரர் கொண்டாடிய பண்டிகைகள் யாவை? எப்படி கொண்டாடினார்கள் என லேவியராகமம் 23ம் அதி நன்றாய் வாசித்துப் பாருங்கள். பரிசுத்த நாள், கர்த்தருக்கென்று ஓய்வு நாள், கர்த்தருக்கு பலிசெலுத்தும் நாள், ஒரு வேலையும் செய்யலாகாது என்றெல்லாம் பார்க்கிறோம். நமது பண்டிகை கொண்டாட்டங்கள் எப்படிப்பட்டவை? விருந்தும் உடையும் உல்லாசமும் தான்.

வெட்டுவோமா? எப்படி வெட்டுவது? ரோமர் 7:23ல் அவயவங்களில்பாவப்பிரமாணம் உண்டாயிருக்கிறது என்று. ரோமர் 8:2ல் கிறிஸ்து இயேசுவினாலே ஜீவனுடைய ஆவியின் பிரமாணம் விடுதலையாக்கிற்று என்று கூறப்பட்டுள்ளது. நாம் எதற்காக பரிசுத்த ஆவியைப் பெறுகிறோம்? ஆவியின்படி நடக்க, பெலனடைய, சரீரத்தை சிலுவையில் அதன் ஆசை இச்சைகளோடு அறையவே பெற்றுள்ளோம்.

எனவே பரிசுத்த ஆவியானவரின் பெலத்தால் நம்மை சுத்தம் செய்ய ஒப்புகொடுப்போம். ரோமர் 6:19 சரீரங்களை பரிசுத்தமானதை நடக்கும்படி ஒப்புகொடுப்போம்.

அத்தியாயம் 16

# புளித்த மா!

''பரலோக ராஜ்யம் புளித்தமாவுக்கு ஒப்பாய் இருக்கிறது; அதை ஒரு ஸ்திரீ எடுத்து முழுவதும் புளிக்கும் வரைக்கும் மூன்றுபடி மாவிலே அடக்கி வைத்தாள்''
(மத். 13:33).

தேவனுடைய ராஜ்யத்தை எதற்கு ஒப்பிடுவேன்? ''அது புளித்தமாவுக்கு ஒப்பாயிருக்கிறது, அதை ஒரு ஸ்திரீ எடுத்து முழுவதும் புளிக்கும் வரைக்கும் மூன்றுபடி மாவிலே அடக்கி வைத்தாள்" (லூக். 13:21).

ஆங்கில வேதாகமத்திலே ஒரு மொழி பெயர்ப்பில் புளித்தமா என்பதற்கு 'ஈஸ்ட்' என்றும், மூன்றுபடி மா என்பது '40 லிட்டர்' எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

பெண்களாகிய நாம் பயன்படுத்தும் பொருட்களை கர்த்தராகிய இயேசுகிறிஸ்து பெரிய உன்னதமான சத்தியங்களை விளக்குவதற்கு பயன்படுத்தியிருப்பது, அன்றாட வாழ்க்கையின் அலுவல்களின் மத்தியிலும், பரலோக ராஜ்யத்தை தியானிப்பதற்கு மிகவும் உதவியாக இருக்கும். காலை உணவுக்குரிய மாவு தயாரிக்கும்போது எல்லாம் நாம் பகிர்ந்து கொள்ளும் சத்தியங்கள் நினைவூட்டப்படும். ஈஸ்ட் என்பது மிக நுண்ணிய ஒரு செல் அங்க ஜீவி. பெரிய சிக்கலான கரிம மூலக்கூறுகளை என்சைம்களின் உதவியால் எளிய மூலக்கூறுகளாக மாற்றுகிறது. இந்த ஈஸ்ட்டிலிருந்து வெளியேறும் கார்பன்-டை ஆக்ஸைடு ரொட்டியின் மிருது தன்மைக்குக் காரணமாகிறது என அறிவியலில் பார்க்கிறோம். சுருங்கச் சொல்லின் 1. இந்த ஈஸ்ட் மறைந்திருந்து ஒரு நல்செயல் புரிகிறது; வேறு எதுவுமே இதன் வேலையை செய்ய முடியாது.

ஒரு விசுவாசியின் வாழ்வில் கர்த்தர் எதிர்பார்ப்பது மறைந்து கரைந்து மற்றவர்களுக்கு பயனுள்ளவர்களாய்

இருக்க வேண்டும் என்பதே. நீங்கள் பூமிக்கு உப்பாயிருக்கிறீர்கள். நீங்கள் உலகத்துக்கு வெளிச்சமாயிருக்கிறீர்கள். இவை வலியுறுத்துவது, சுயத்துக்கு சாகும் வாழ்வையே. 1 பேதுரு 3:4ல் ஒரு பெண்ணுக்கு அலங்காரமும், தேவனுடைய பார்வையில் விலையேறப் பெற்றதும் ''சாந்தமும் அமைதலுமுள்ள ஆவியாகிய இருதயத்தில் மறைந்திருக்கிற குணமே". ஆவியின் கனியின் பண்புகளும் மறைந்து, உள்ளத்தில் இருந்து செயலின் மூலம் ''......நற்கிரியைகளைக் கண்டு பரலோகத்திலுள்ள பிதாவை மகிமைபடுத்துபவையே". 2. சுஸ்ட்டின் பண்பு அந்த மா முழுவதையும் புளிக்கச் செய்கிறது. நம்முடைய கிரியை நம் சுற்றுபுறத்தை பாதிக்கிறது.

''புத்தியுள்ள ஸ்திரீ தன் வீட்டைக் கட்டுகிறாள். புத்தியில்லாத ஸ்திரீயோ தன் கைகளினால் அதை இடித்துப் போடுகிறாள்". (நீதி.14:1).அவள் தன் புருஷனுக்கு "கிரீடம்" ''கனிதரும் திராட்சச் செடி". நீதி. 1:8ல் ''தாயின் போதகத்தை தள்ளாதே" என பிள்ளைகளுக்கு ஆலோசனை கொடுக்கப்பட்டுள்ளது. எனவே ஒரு பெண் முதலாவது தன் கணவனையும், பின் தன் பிள்ளைகளையும் பாதிக்கிறாள். நீதி. 14:1 'ஞானம்' என்ற பதமும், நீதி. 12:4 'குணசாலி', நீதி.19:4 புத்தியுள்ள நீதி. 18:22- 'உண்மை மனைவி' எனவும் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.

ஞானமுள்ள பெண்:-

நீதி. 1:7 கர்த்தருக்கு பயப்படுதலே ஞானத்தின் ஆரம்பம் என்றும், 8:13ல் தீமையை வெறுப்பதே கர்த்தருக்கு பயப்படும் பயம் எனவும், அதின் தொடர்பாக பெருமை, அகந்தை, தீய வழி, புரட்டு வாயையும் நான் வெறுக்கிறேன் என்று கூறப்பட்டிருக்கிறது. இவை முறையே தீய எண்ணம், (பெருமை) செயலாகி (அகந்தை, புரட்டு வாய்) வாழ்வின் வழியாகி விடுகிறது. இதை சீர்படுத்த வழி என்ன? சிந்தனை வாழ்வை சீர்படுத்த வேண்டும்.

விசுவாசிகளாகிய நாம் வெளியரங்க பாவங்களிலிருந்து (கலா. 5:19) அநேகமாக விடுதலை பெற்றிருப்போம். மனிதர் பார்வையில் நற்பெயர் வாங்க மாய்மாலம், பெருமையான எண்ணம், நம் விசுவாச வாழ்வை குறித்து சாத்தானின் சதி அப்போது ''நான் உலகத்தின் குப்பை, கிறிஸ்துவின் நிமித்தம் பைத்தியக்காரி," என அறிக்கை செய்ய வேண்டும். வீட்டின் சமையல் அறை, உணவு அருந்தும் அறை, விருந்தினரை உபசரிக்கும் அறைகளில் கண்படுத்து உணர்த்தும் சில சொற்றொடர்கள், ஸ்லோகங்களை எழுதி வைத்து இப்பாவங்களை மேற்கொள்வோம்.

குணசாலியான பெண் -

II தீமோ. 2:22ல் வாலிபனான தீமோத்தேயுவுக்கு, பவுல் அப்போஸ்தலன் கொடுக்கும் எச்சரிப்பு: பாலியத்தின் இச்சைகளுக்கு நீ விலகி ஓடி. ஓட வேண்டிய ஒரு பாவம் இச்சை. மத். 5:28ன்படி கண் இச்சையின் பிறப்பிடம். ஒரு கர்த்தருடைய ஊழியம் செய்யும் பெண் கொடுத்த அறிவுரை உடுத்தும் முறை I தீமோ. 2:9-10 வேத வசனத்தின்படி இருக்கவேண்டும். மத். 5:28ன் பாவத்துக்கு காரணம் பெண்களாகிய நாம் உடுத்தும் முறையில் இன்று பல நவீன பெயர்களுடன் உள்ள உடைகளை விசுவாசிகளும் அணிவது வருந்தத்தக்கது. அருமை சகோதரியே, நாம் உடுக்கிற மெல்லிய புடவையும், முதுகு தெரியும்படி அணிகிற ஜாக்கெட்டும் நம்மை விபசாரி என்று பறை சாற்றுகிறது. ஜாக்கிரதை! எத்தனை ஆண்களை கண்களின் இச்சையின் வழி ''விபசாரம் செய்தாயிற்று" என்று வசனம் ஆக்கினை தீர்ப்புக்கு உட்படுத்த உடந்தையாகிறோம்.

தீத்து. 2:4ல் பவுல் அப்போஸ்தலன் தீத்துவுக்கு அருமையான ஆலோசனை தருகிறார். பாலிய ஸ்திரீகளுக்கு முதிர் வயதுள்ள விசுவாசிகளான ஸ்திரீகள் படிப்பிக்கவும் போதிக்கவும் (முதிர் வயதுள்ள ஸ்திரீகளுக்கு) புத்தி சொல்லு என்கிறார். நமது பிரச்சனைகள், பாரங்களை விசுவாசிகளான அனுபவமுள்ள முதிர்வயதுள்ள ஸ்திரீகளிடம் நாம் பகிர்ந்து

கொள்ள வேண்டும் என நாம் அறிந்து கொள்கிறோம். ஆண்களிடம் (விசுவாசிகளோ, ஊழியர்களோ) பகிர்ந்து கொள்வதோ முற்றிலும் தவிர்க்கப்பட வேண்டும். கணவன் மனைவி இருவரும் விசுவாசிகளாக இருக்கும் போது, இருவரும் சேர்ந்து ஜெபித்தால் மிகவும் பலனுண்டு. கட்டாயம் இதை பயிற்சி பண்ண வேண்டும். விசேஷமாக பிள்ளைகளுக்காக உபவாசித்து இருவரும் ஜெபிக்க வேண்டும். கர்த்தர் இணைத்த கணவன் மனைவிக்கு இடையே யாருமே வர இடம் தரக்கூடாது. இரட்சிக்கப்படாத கணவனை குறித்து மற்றவர்களிடம் சபையில் சாட்சியாக! பிள்ளைகளிடம் குறை கூறுதல் தூற்றுதல் ஆகும். I பேதுரு 3:2 தான் உங்களுக்கு வழி, மனைவி என்றுதான் வேதம் கூறுகிறது. அடங்கியிருங்கள் என்பது தான் நமக்கு கட்டளை. சமத்துவத்தை உரிமை பாராட்டாதிருப்போமாக. சாராள் ஆபிரகாமை, ஆண்டவன் என அழைத்தாள். I கொரி. 11:3ல் 'ஸ்திரீக்கு புருஷன் தலை' இங்கு தேவன், கிறிஸ்து, புருஷன் ஆக வைக்கப்படுவதை உணர்ந்து, இவ்வுலக திருமண வாழ்வு பரலோக வாழ்வுக்கு நிழல் என்பதை உணர்ந்து நம்மை சரிபடுத்திக் கொள்வோம்.

**புத்தியுள்ள மனைவி:-**

எல்லா நிலைகளையும் எல்லாரையும் புரிந்து கொள்பவள் சிக்கனமான, ஆடம்பரமற்ற வாழ்வு வாழ்பவள்.

கணவனுடைய பெலவீனங்கள், குறைகள், பிள்ளைகளுடைய மதியீனங்கள், தவறுகள், உறவினர்களின் நெருக்கங்கள் இவற்றால் பாதிக்கப்படாமல், தன் உள்ளத்தின் அமைதியை இழக்காமல் ''புருஷரிடத்திலும், பிள்ளைகளிடத்திலும், அன்புள்ளவர்களாய், நடந்து கொள்ள வேண்டும். அதே (தீத்து 2:4,5) ஆலோசனைகளையே ஏற்று நடப்போம் என குறிப்பிட்டுள்ளது. நமக்கு எந்த அளவுக்கு பொருந்தும்? இன்று நம் பிள்ளைகள் பரிதாப நிலையில் இருக்க ஒரு முக்கிய காரணம், நாம் வளர்க்கும் முறையில் தவறிவிட்டோம். நாம் வீட்டில் தரித்திருக்கிறவர்களாக இல்லையே. சிறு குழந்தை பருவத்

தில் தாய் அன்பில் வளர வேண்டிய குழந்தை வேலையாளின் தயவில் மிரட்டலில் கயிற்ருலும் கட்டப்பட்டு வளர்க்கப் பட்டால் அதன் பிஞ்சு எப்படி வளரும்? அருமை தாய்மாரே, நம் பெண்பிள்ளைகளை வசனத்தின் பண்பாட்டில் வளர்ப் போம். வேலை பார்க்காத பெண் வேண்டாம் என்று சமுதாயம் கூறட்டும். வசனத்துக்கு கீழ்ப்படிவோம். சத்தியம் நம்மை விடுதலையாக்கும். கர்த்தர் நம் வாழ்வை வாக்கின்படி வளமாக்குவார். தாயின் போதகம் தாயின் வாழ்க்கையில் அதைக் கண்டு கற்கிருர்கள் பிள்ளைகள்.

இப்படிப்பட்ட புளித்தமா பரலோக ராஜ்யத்துக்கு ஒப்பாக்கப்பட்டிருக்கிறது. இவர்களே தேவனுடைய குடும் பத்தை கட்டுகிருர்கள்.

பரிசேயர் சதுசேயர் என்பவர்களின் புளித்தமாவை குறித்து எச்சரிக்கையாயிருங்கள் (மத் 16:6).

மத். 16:12ல் இதன் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. பரிசேயர் சதுசேயரின் உபதேசம் இந்த புளித்தமா. மாற் 8:11-15ல் பரிசேயர் அடையாளத்தை தேடுகிருர்கள். லூக் 12:1ல் மாயமாகிய பரிசேயருடைய புளித்தமா I கொரி 5:1-13 துர்க்குணம், பொல்லாப்பு என்று விளக்கம் கூறுகிறது. ஆமோஸ் 4:5ல் தேவன் இஸ்ரவேல் ஜனங் களின் பாவங்களைக் குறித்து வேதனைப்படுவதைக் காணும் போது, அதன் காரணத்தை மத் 15:9ல் காண்கிரும். முன்னேர்களின் பாரம்பரியமும், மனுஷருடைய கற்பனை களும் உபதேசங்களாயின. ஆசாரியர்கள், பரிசேயர், வேத பாரகர் தாங்கள் சொல்லுகிறபடி செய்யாதவர்கள், இரக்கத் தையும், நீதியையும் விட்டுவிட்டார்கள். வீணும் ஆராதனை செய்கிறவர்கள்.

நம் நிலை என்ன? உதட்டில் 'ஸ்தோத்திரம்' உள்ளத்தில் வர்மம், பகை, விரோதம், பொருமை, பெருமை இன்னும் எத்தனை பாரம்பரியங்கள். திருமணங்களில் பண ஆசை வேரூன்றி நிற்கிறது. விசுவாசிகளின் குடும்பங்களிலும்

ஒத்துப்போகிறவர்கள், ஞானஸ்நானம், அபிஷேகம், வேறு பிரித்த வாழ்க்கை இவற்றைவிட்டு, மறைந்துப் போதித்தல், ஆவியின் பட்டயத்தை கருக்குள்ளதாய் பயன்படுத்தபயந்து, மனுஷர் புகழ்ச்சியை விரும்பும்போதகர்கள் இன்று ஏராளம். ஆடம்பரத்துக்காகவும், பணத்துக்காகவும், பதவிக்காகவும் கல்லறைக்காகவும் பிரிந்து வராத சுயநல வாழ்க்கை பரந்த மனப்பான்மை எல்லோரையும் நேசிக்கிறோம் என்ற ,போர்வையில் சுயம். இவற்றை இன்றைய பரிசேயராகிய விசுவாசிகளிடம் பார்த்து 'ஐயோ' என்று கூறுகிறார் ஆவியானவர். இதனால் நாம் இடறலாகவும் இருக்கிறோம். நமக்கு காத்திருப்பது எந்திரக்கல்.

மறைந்திருக்கிற விலையேறப்பெற்ற திவ்விய சுபாவங்களால் நாம் நிறைந்து பரலோக ராஜ்யத்தை நாம் அடைய, மற்றவர்களை அடையச் செய்ய ஆவியானவர் நம்மை வழிநடத்த காத்திருக்கிறார்.

புளிப்புள்ள கொஞ்ச மாவானது, பிசைந்த மாவு முழுவதையும் உப்பப் பண்ணும். அருமை சகோதரிகளே, நம் குடும்பத்தில் நம் சமுதாயத்தில் நம் பணி எவ்வளவு உத்தரவாதமானது என்பதை உணருவீர்களா? நாம் எப்படிப்பட்ட புளித்தமாவாக இருக்கிறோம்?

## அத்தியாயம் 17

# என் பிரியமே என் இருதயத்தை கவர்ந்து கொண்டாய்!

நேசர் சூலமித்தியைப் பார்த்து "நீ என் இருதயத்தை கவர்ந்து கொண்டாய் என கூறுகிறார்" (உன் 4:9). இன்று நம் ஒவ்வொருவரையும் இவ்வாறு தேவன் அழைப்பாரானால், அது எத்தனை பெரிய பாக்கியம். நமது வாழ்க்கையில் நமது நோக்கம் நம் நேசர் இயேசுவை கவர்ந்து கொள்கிறவர்களாக காணப்பட வேண்டும். அதற்காக நாம் இவ்வுலகில் பிரயாசப்படுவோமாக. அந்நாளில் சூலமித்தியாள் நேசரை கவர்ந்து கொண்டது எங்ஙனம் என்பதை காண்போமாகில், நாமும் நமது வாழ்வில் நேசரை கவர்ந்துக் கொள்ள பெரிதும் உதவியாக இருக்கும்.

**மனமகிழ்ச்சி உண்டாக்கும் என் பிரியமே:-**

நேசர் இப்படியாக அழைப்பதை உன்னதப்பாட்டு 7:6ல் காண்கிறோம். அப்படியானால் சூலமித்தியாள் தன் வாழ்வில் தேவனை மகிழப்பண்ணுவதையே இலட்சியமாக கொண்டிருந்தாள். எல்லா நிலைகளிலும், எவ்வேளையிலும் தேவனை மகிழப்பண்ணுவதே! அப்படியானால் நமது வாழ்விலும், நமது நடத்தை, செயல் எல்லாம் தேவனை மகிழப்பண்ணுகிறதாக இருக்க வேண்டும். நம்மை நாமே நிதானித்துப் பார்ப்போம். நமது பேச்சு, நமது பார்வை, நமது சிந்தனை நமது அலங்காரம், தேவனை மகிழப்பண்ணுகிறதா? வேதனைக்குட்பட பண்ணுகிறதா? நாம் நமக்கு நாமே மகிழ்ச்சியாய் ஜீவிக்கிறோமா? அல்லது தேவனை மகிழப்பண்ண பிரயாசப்படுகிறோமா? நாம் இந்த உலகத்திலும், உலகத்தின் காரியத்திலும் மகிழ்வாக அன்பு கூருவோமானால், தேவன் நம்மேல் அன்பாகவோ, அல்லது மகிழ்வாகவோ இருக்கவே முடியாது (1 யோ 2:17). ஏனென்றால் உலக சிநேகம

தேவனுக்கு விரோதமான பகை (யாக் 4:4) என காண்கி றோம். எனவே நமது உலக வாழ்வில் இந்த உலகப்பிரகாரமான காரியத்தை இச்சித்து அதின் மேலேயே மகிழ்வு கொண்டிருப் போமானால், கடுகளவு கூட தேவனை மகிழப்பண்ண முடி யாது. அப்படியானால் என்ன செய்யவேண்டும்? வேதம் கூறுவது என்ன? உலகத்திலும் உலகத்திலுள்ளவைகளிலும் அன்புகூராதிருங்கள் (I யோ 2:15). உலகத்தையும் அதின் ஆசை இச்சைகளையும் சிலுவையிலறையுங்கள் (கலா 5:25). பின்பு தேவனுடைய வார்த்தைக்கு கீழ்ப்படிவதின் மூலம், நேசரின் இருதயத்தை மகிழப்பண்ண முடியும். சகோத ரியே, உன் முழு இருதயத்தோடும், முழு ஆத்துமாவோடும், முழு பலத்தோடும், அவரில் அன்பு கூருவாயாக. அவரை மனமகிழ பண்ணுவாயாக!

**இராக்காலங்களில் என் ஆத்தும நேசரை தேடினேன்!**

சூலமித்தியாள் நேசரின் இருதயத்தை கவர்ந்து கொண்டதின் இரகசியம், அவள் இராக்காலங்களில் நேசரை தேடக்கூடிய அனுபவம் உள்ளவளாக இருந்தாள். இன்று நீங்களும் நானும் தேவனை கவர்ந்து கொள்ள வேண்டு மானால், இராக்காலங்களில் தேவனைத் தேடும் அனுபவம் வேண்டும். இன்று நமது அனுபவம்தான் என்ன! உலக பாரத்தால், தூக்கத்தால் நிறைந்திருக்கிறோமா? அப்படியா னால் இன்று ஓர் தீர்மானம் பண்ணலாம். இராக்காலத்தில் தேவனைத் தேடும் ஓர் அனுபவத்தை செயலாக்க, மரியாளும் இருட்டோடே இயேசுவை தேடிக் கொண்டு கல்லறையிடம் சென்றாள் என காண்கிறோம். தேவனை இராக்காலத்தில் தேடும் அனுபவம், எத்தனையோ பெண்களுக்கு இந்த அனுபவம் உண்டு. இதனால் தேவனிடம் பெரும் ஆசீர்வா தத்தை பெற்றுக்கொள்ளலாம். ஜான் வெஸ்லின் தாயார் 'சூசன்' அவர்கள் இராக்காலங்களில் தன் பிள்ளைகளுக்காக தேவனை தேடினதினால் அன்றோ, கர்த்தர் 'ஜான் வெஸ் லியை' எழுப்புதலுக்கு ஒரு கருவியாக பயன்படுத்தினார். நமது மாதிரியாகிய இயேசுவும், இராச்சாமங்களில் ஜெபத் தில் தேவனை தேடின அனுபவத்தை வேதத்தில்

காண்கிறோம்? யாக்கோபும் தேவனோடு போராடியது இராச்சாமத்தில் அன்றோ! நாமும், இராச்சாமங்களில் எழும்பி, நமது கணவருக்காக, குழந்தைகளுக்காக, சபைக்காக, தேசத்திற்காக தேவனைத் தேடுவோம். ஒரு நாள் அல்லது இரண்டு நாள் மாத்திரமல்ல (இராச்சாமங்களில்) நமது வாழ்நாள் முழுவதும் அதை அனுபவமாக்கிக் கொள்வோம்.

**என் ஆத்தும நேசரை விடாமல் பற்றிக்கொண்டேன்!**

ஆத்தும நேசரை தேடுவது மாத்திரமல்ல, அவரை விடாமல் பற்றிக் கொள்கிற அனுபவம், நம்மில் அநேகர் ஆத்தும நேசரை தேடுகிறவர்களாய் காணப்படலாம். ஆனால் தொடர்ந்து இராதபடி, காத்திராதபடி விட்டுவிடுகிறோம். அதுமாத்திரமல்ல, அவரைக் கண்ட மாத்திரத்தில் பற்றிக் கொள்ளுகிற அனுபவம் இல்லாதபடி காண்கிறோம். ஆனால் சூலமித்தியாளின் வாழ்க்கையிலோ அவரை விடாமல் பற்றிக்கொண்டாள். இன்றைக்கு நாம் உலகத்தின் காரியத்தைப் பற்றி கொண்டவர்களாய் காணப்படுவோமானால் தேவனைப் பற்றிக்கொள்ள முடியாது. யாக்கோபும் தேவனைப் பற்றிக்கொண்டான். ஆசீர்வாதத்தை பெறும்வரை விட்டுவிடவேயில்லை. அருமையான சகோதரியே, உன் குடும்பத்தாரின் இரட்சிப்பிற்காக தேவனை விடாமல் பற்றிக்கொண்டிருக்கிறாயா? உன் வருங்காலத்திற்காக தேவனை விடாமல் பற்றிக்கொண்டிருக்கிறாயா? ஆவிக்குரிய வாழ்க்கைக்காக அவரை விடாமல் பற்றிக்கொண்டிருக்கிறாயா? இல்லா விட்டால் இன்று முதல் பற்றிக் கொள், விட்டு விடாதே!

**என் உள்ளம் நேசரின் நிமித்தம் பொங்கியது:-**

அன்று சூலமித்தியின் இருதயம் நேசரின் நிமித்தம் பொங்கியது என்பதை சாற்றுவதை உன்னதப்பாட்டு 5:4ல் காண்கிறோம். நேசருக்காக அவ்வளவு வாஞ்சை, விருப்பம் தன் வாழ்க்கையில் எல்லாம் அவரே. வாழ்க்கையில் அவர் வழிந்தோடுகிற அனுபவம், காரணம் தனக்குள் முழுவதும்

அவரே! சங்கீதக்காரனும் இப்படியே என் பாத்திரம் நிரம்பி வழிகிறது என கூறுகிறார். அருமையான சகோதரியே! உனது உள்ளம் எதினிமித்தம் பொங்குகிறது? உலகத்தின் ஆசையினிமித்தம் பொங்குகிறதா? கோபத்தினிமித்தம் பொங்குகிறதா? எரிச்சலின் நிமித்தம் பொங்குகிறதா? சூலமித்தியின் உள்ளமோ நேசரினிமித்தம் பொங்கியது. நேசர் உன்னை கவர்ந்து கொள்ள வேண்டுமாயின் அவர் நிமித்தம் உன் உள்ளம் பொங்க வேண்டாமா! "மானானது நீரோடைகளை வாஞ்சித்து கதறுமாப்போல் என் உள்ளம் வாஞ்சித்து கதறுகிறது" என பாடினால் மாத்திரம் போதுமா? செய்கையில் வேண்டாமா? நமது உள்ளம் தேவன் நிமித்தம் பொங்குமாயின் நமது ஜெபத்தில், நமது வேத வாசிப்பில், நமது ஜீவியத்தில், சபைக்குச் செல்வதில், கர்த்தருக்கு கொடுப்பதில் பெரிய மாற்றம் உண்டாகும். இன்றைக்கு அநேகர், உள்ளம் நிரம்பின அனுபவத்தோடு திருப்தியடைந்து விடுகின்றனர். நமது நிலைமை அப்படியிருக்குமாயின் நேசரை கவர்ந்து கொள்வது சாத்தியமன்று! சூலமித்தியாளைப் போன்று, தேவனால், தேவனுக்காக நமது உள்ளம், எந்நேரமும் பொங்கட்டும். தேவனிமித்தம் உன் உள்ளம் பொங்குமாயின் அங்கு உலக அன்பு, உலக சிநேகம், ஆடம்பரம், உலக உல்லாசத்திற்கெல்லாம் இடம் இராது. எல்லாம் என் நேசரே!

**உன்னில் பழுதொன்றுமில்லை:-**

நேசர் மணவாட்டியைக் குறித்து கொடுத்த சாட்சி உன்னில் பழுதொன்றுமில்லை. அப்படியானால் சூலமித்தியாள் தன் வாழ்க்கையில் ஒரு சாட்சியுள்ள வாழ்க்கை, ஒரு பரிசுத்தமுள்ள வாழ்க்கை நடத்தினாள் என காண்கிறோம். எனவேதான் நேசரை கவர்ந்து கொண்டாள். நமது வாழ்க்கை எங்ஙனமுள்ளது? நமது வீட்டில் சாட்சியுள்ள பரிசுத்தமான ஜீவியம் உண்டோ? சூலமித்தியாள் தன்னைக் குறித்து தானே சொல்லிக் கொள்ளவில்லை. நேசரே சாட்சிக் கொடுத்தார். இன்று நம்மைப்பார்த்து நாம் சாட்சி சொல்லலாம். அடுத்த சகோதரி கூறலாம், பாஸ்டர் கூறலாம், ஆனால் நேசர் இயேசு இதிலிருந்து கூற முடியுமா? இன்று

தேவன் கறை, திரையற்ற பிழையற்றதும், மாசற்றதுமான மகிமையுள்ள, மணவாட்டியாகிய சபையையே ஆயத்தம் பண்ணிக் கொண்டிருக்கிறார். அதற்காகவே தம்மைத் தாமே ஒப்புக் கொடுத்தார். எனவே நேசர் உன்னையும் தனக்கு மணவாட்டியாக்கிக் கொள்ள ஆயத்தப்படுவோம். பழுது படுத்துகிற பாவமான காரியங்களை விட்டொழிப்போம். பரிசுத்தமே நமது வாழ்க்கையின் குறிக்கோளாக இருக் கட்டும். பரிசுத்தமில்லாமல் ஒருவனும் தேவனைத் தரிசிப்பது இல்லையே! பழுதற்ற பரிசுத்தமான வாழ்க்கை வாழ வல்ல இயேசு கிருபை நல்குவாராக.

**உன் கண்கள் புறாக்கண்களாயிருக்கிறது:-**

சூலமித்தியின் ஜீவியத்தை நேசர் எடுத்துக் காட்டுகிற வேளையிலே, அவர் கண்கள் புறாக் கண்களாயிருக்கிறது என கூறுவதை உன். 4:1ல் காண்கிறோம், கண் சரீரத்தின் முக்கிய அவயமன்றோ? உன் கண் தெளிவாயிருந்தால், உன் சரீரம் முழுவதும் வெளிச்சமாயிருக்கும்! என வேதம் கூறுகிறதன்றோ (லூக். 11:4). நமது வாழ்க்கையில் இவ் வுலகில் நாம் வெளிச்சமாக இருக்க வேண்டுமானால் நமது கண் சரியானபடி இருக்கவேண்டும். அநேகர் தனது கண்ணை காத்துக் கொள்ளாத படியினாலே, தங்களது ஆவிக்குரிய வாழ்க்கை இழந்து போனார்கள். ஆதியிலே தானே, ஏவாள் நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியை முதலாவது கண்டதினாலேயே, இச்சை உருவாகி தேவனு டைய திட்டத்தில் இருந்து விலகி விட்டார்கள். அருமை யான சகோதரியே! உன் கண்ணின் பார்வை எப்படி உள்ளது? சிம்சோனும் தனது கண்ணின் பார்வையினாலேயே கெட்டான் என வேதவசனம் உரைக்கவில்லையா! உனது கண்ணின் பார்வையில் இச்சை அடங்கியிருக்கிறதா? அநேகரை உன் கண்ணின் பார்வையினாலே தீட்டுப்படுத்து கிறாயா? புறாவின் கண்கள், பரிசுத்தமான கண்கள், நேராய் நோக்கும் கண்கள்! சூலமித்தியின் கண்களும் அப்படியே! எனவே தான் நேசரை அவள் கவர்ந்து கொண்டாள்! நீ நேசரைக் கவர்ந்து கொள்ள உன் கண் பார்வை

முக்கியம்! உன் கண்கள் நேராய் நோக்க கடவது என வேதம் கூறுகிறது. அன்பான சகோதரியே, உனது கண்கள் எப்படி காண்கிறது. நிதானித்துப் பார்! ஒரு வேளை இது சிறிய காரியமாக இருக்கலாம்! ஆனால் இது தான் முக்கியம். உன் கண் கெட்டதாயிருந்தால், உன்சரீரம் முழுவதும் இருளா யிருக்குமே! எனவே கண்ணின் பார்வையைக் குறித்து எச்சரிக்கையாக ஜீவிப்போம். அப்படி இல்லையானால் "கண்ணின் காட்சிகளிலே நீ நடப்பாயானால் தேவன் உன்னை நியாயத்திலே கொண்டு வந்து நிறுத்துவார் என்று அறி" என பிரசங்கி எச்சரிப்பதை நினைவில் கொள்வோம்.

மேலும் புறாவின் கண்ணில் நீர் ததும்பியிருக்கும். இது எதை காட்டுகிறது என்றால், நாம் குடும்பத்திற்காக, பிள்ளைகளுக்காக, சபைக்காக, ஆத்துமாக்களுக்காக, கண்ணீரோடு ஜெபிக்க வேண்டும் என்பதையே! உனது வாழ்க்கையில் இப்படி அனுபவம்உண்டா? எரேமியா தான் கூறுவது என்ன? என் தலை தண்ணீரும், என் கண்கள் கண்ணீரும் மாறினால் நலமாகும். மேலும் "சீயோன் குமாரத்தியே இரவும் பகலும் நதியளவாய் கண்ணீர் விடு" என்று வேதம் கூறுவதை காண்கிறோம். இரவும் பகலும், இராமுழுவதும் ஒருக்காலும் மௌனமாயிராத ஜாமக்காரராய் தேவன் நம்மை கட்டளையிட்டிருக்கிறார் (ஏசா. 62:6). எனில் மற்றவர்கள் தூங்குகிறது போல நாம் தூங்குவதற்கு இது காலமல்ல. (1தெச. 5;6) காலத்தை அறிந்தவர்களாய் விழிப்போடு ஜீவிப்பது மாத்திரமல்ல. தேவன் பரலோகத்தில் இருந்து நோக்கிப் பார்க்கும் மட்டும் நம் கண்கள் கண்ணீராய் சொரியட்டும். நமது குடும்பத்தில் இரட்சிக்கப்படாத அங்கத்தினருக்காக அழுது ஜெபிப்போம். ஒருநாள் இரண்டு நாளல்ல, தேவன் பரலோகத்திலிருந்து நோக்கிப் பார்க்கும் மட்டும் நம் கண்கள் இடைவிடாமல் சொரியட்டும். மற்றவர்களுக்காக ஜெபிப்பதே தேவனுக்கு இன்பமும் ஏற்றதுமாயிருக்கிறது என வேதம் கூறுகிறது. இதைச் செய்யும்போது நேசரின் இருதயத்தை கவர்ந்து கொள்வது நிச்சயமன்றோ!

"உன் உதடுகளில் இருந்து தேன் ஒழுகுகிறது! உன் நாவின் கீழ் தேனும் பாலும் இருக்கிறதா" (உன் 4:3, 11).

சூலமித்தி தன் உதடுகளை திறக்கும்போது, என்னதான் மேன்மை! மதுரமான வார்த்தைகள்!! மற்றவர்களை பக்தி விருத்தியடைய மூன்று வார்த்தைகள்!! கிருபை நிறைந்த வார்த்தைகள்!!!

அருமை சகோதரியே! உன் நாவில் இருந்து என்ன வெளி வருகிறது? முணுமுணுப்பா? கசப்பா? எரிச்சலா? புறங் கூறுதலா? கசப்பான வார்த்தைகளா? பொய்யா ஆராய்ந்து பாருங்கள். சூலமித்தியாளின் வாயிலிருந்தோ தேன்! எத்தனை மகிழ்ச்சிகரமான நேசருக்கு! உனது வார்த்தை யினால் தேவன் மகிமைப்படுகிறாரா? தேவ ஜனங்களைக் குறித்து தேவன் கூறும்போது, உங்கள் வார்த்தைகளினாலே என்னைத் துக்கப்படுத்தினீர்கள் என கூறுகிறார். நமது செய் கைகளினால் அல்ல,வார்த்தைகளினால் தேவனை எத்தனை முறை துக்கப்படுத்துகிறோம். பின்னே எப்படி நேசரை கவர்ந்து கொள்ள முடியும்? நமது வார்த்தைகளினால் குடும்பத்தில் எத்தனை பிரச்சினைகள் ஏற்படுகிறது. குடும்பத்தில் வரக் கூடிய சண்டைகளை, நமது வார்த்தைகளை அடக்கியிருந்தால் தவிர்த்திருக்கலாமே.நாம் எவ்வளவு ஜெபித்தாலும், வேதம் வாசித்தாலும், ஆவியில் நிறைந்திருந்தாலும், என்ன மேன்மை பெற்றிருந்தாலும் நமது நாவை அடக்காவிட் டால், நமது எல்லா பக்தியும் வீண் அன்றோ! எனவே நமது வார்த்தைகள் தேன் போன்ற நன்மை பயக்கக்கூடியதாக, இனிய வார்த்தைகளாக, மற்றவர்களுக்கு ஆரோக்கியத்தை யும், ஜீவனையும் கொடுக்கக் கூடியதாக இருக்கட்டும். பக்தி விருத்திக்கு ஏதுவான வார்த்தைகள் இருந்தால், அவைகளை மாத்திரமே பேசுவோம். இல்லையெனில் அமைதியாக இருப் போம். சொற்களின் மிகுதியில் பாவமில்லாமற் போகாது! இன்றைக்கு அநேகருடைய வார்த்தைகள் தேன் போன்றே இனிமையாக காணப்பட்டாலும், நாவின் கீழ் விஷம் இருக் கிறது (பொறாமை, எரிச்சல், பெருமை, புறங்கூறுதல் உள் ளடங்கியுள்ளது). ஆனால் சூலமித்தியின் நாவின் கீழும்

தேனும் பாலும் இருக்கிறது. எனவே, எப்போதும் தேனும் பாலும்தான் வரும். நமது ஜீவியத்தில் ஒருநாள், ஒரு வாரம், ஒரு மாதம், ஒரு வருடம் அல்ல, எப்பொழுதுமே பக்தி விருத்தி நிறைந்த பிரயோஜனமுள்ள, கிருபையுள்ள வார்த்தைகள் வெளிவரட்டும்.

''உன் சத்தத்தை நான் கேட்கட்டும்; அது இன்பமாயிருக்கிறது"

சூலமித்தியாள் நேசரை தன் ஜீவியத்திலுல் பல வழிகளில் கவர்ந்து கொண்டாள். நேசர் சூலமித்தியை நோக்கி, ''உன் சத்தத்தை நான் கேட்கட்டும்'' என (உன். 2:14)-ல் கேட்பதை பார்க்கிறோம். அப்படியானால் அவளுடைய சத்தத்தை அடிக்கடி கேட்க முடியாத நிலை. அமைதலுள்ள ஒரு வாழ்க்கை. எதையும் அடக்கத்தோடு செய்கிற ஒரு பழக்கம். எனவே அவள் சத்தத்தை தான் கேட்கும் படியாக விரும்பின நேசர் பேசும்படி கேட்டுக் கொள்கிறார். அருமையான சகோதரிகளே, இன்றைக்கு நமது நிலைதான் என்ன? வீட்டில் நமது சத்தமல்லவா ஓங்கி கேட்கிறது! நமது சத்தம் கேட்கப்படாத நேரமில்லையே! ஏன்? தன் நேசரைக் கவர்ந்து கொள்ள கூடிய விருப்பம் இல்லாததினாலேயே. உங்கள் வாழ்வில் நேசரை கவர்ந்து கொள்ள நீங்கள் பேசும்முறை முக்கியம். அடக்கத்தோடு, பணிவோடு, அமைதியோடு பேச வேண்டும். நமது ஆண்டவரைக் குறித்து கூறும்போது, ''அவர் கூக்குரலிடவும் மாட்டார். தம்முடைய சத்தத்தை உயர்த்தவும், அதை வீதியிலே கேட்கப் பண்ணவும் மாட்டார்'' என (ஏசா. 42:2)-ல் காண்கிறோம். அவருடைய பிள்ளைகளாகிய நம்முடைய சத்தம் எப்படியிருக்கிறது. வீட்டில் புருஷனோடு, பிள்ளைகளோடு கூக்குரலிடுகிறோமா? சத்தத்தை உயர்த்தி பேசுகிறோமா? நமது சத்தத்தை வீதியில் கேட்கப் பண்ணுகிறோமா? பக்கத்து வீட்டில் அமர்ந்திருக்கும்போது, பஸ் ஸ்டாப்பில் நிற்கும்போது, பஸ்ஸில் பிரயாணம் பண்ணும்போது, நமது சத்தத்தை மற்றவர்களுக்குக் கேட்கப்பண்ணுகிறோமா? வேண்டவே வேண்

டாம். இன்று முதல் அடக்கத்தோடு, அமைதியோடு பேசு வோம். நமது சத்தத்தைக் கேட்க நேசர் பிரியமாக இருக்கட்டும்.

**முள்ளுகளுக்குள்ளே லீலி புஷ்பம் நீ:-**

நேசர் சூலமித்தியை பற்றிக் கூறுகிற வேளையிலே அவர் முள்ளுகளுக்குள்ளே லீலி புஷ்பம் போல இருக்கிறாள் என கூறுவதை உன். 2:2ல் காண்கிறோம். அப்படியானால் சூல மித்தியின் வாழ்க்கையில் இது எதைக் காட்டுகிறது? சற்று காண்போம். லீலி புஷ்பம் சுற்றிலும் முட்கள். காற்று வீசும் போது லீலி புஷ்பம் முட்களில் படுகிறது. முட்கள் அதன் இதழை கிழிக்கிறது. இதனால் உண்டாவது என்ன? நறுமணம் மலரில் இருந்து கிளம்பி வாசனை சுற்றிலும் வீசு கிறது! என்ன ஒரு அற்புதமான ஜீவியம்! நாம் நேசரை கவர்ந்துகொள்ள வாசனை வீசக்கூடிய ஒரு ஜீவியம் நம்மில் காணப்பட வேண்டும். நாம் கிறிஸ்துவுக்கு நற்கந்தமாக இருக்கிறோம். நம்மூலமாக தேவனுடைய நாமம் மகிமைப் படவேண்டும். அருமை சகோதரியே! சற்று யோசித்துப் பார். உனது வீட்டில், இருக்குமிடத்தில் உன்னில் இருந்து நற்கந்தம் வீசுகிறதா? ஆண்டவரின் நாமம் மகிமைப்படு கிறதா? தூஷிக்கப்படுகிறதா? கிறிஸ்தவ வாழ்க்கை கவன மாக செய்யக்கூடியதொன்று. எந்நேரமும் நமது ஜீவியத் தின் மூலமாக கிறிஸ்துவின் நற்கந்தம் வீசட்டும். லீலி புஷ் பத்தில் எப்போது மணம் வீசுகிறது? முட்களால் கிழிக்கப் படும்போது! இது எதைக் காட்டுகிறது. நமது வாழ்க்கை யில் பாடுகளும், உபத்திரவங்களும் வரும்போதே. நமது இருதயத்தில் நற்கந்தமா? துர்கந்தம் இருக்கிறதா? என்பது தெரிய வரும். அநேகர் பிரச்சனை, உபத்திரவம் இல்லா திருக்கும்போது நல்ல புஷ்பமாக காணப்படுவார்கள். ஆனால் உபத்திரவமாகிய முள், துன்பமாகிய முள் அவர்களைக் கிழிக்க ஆரம்பிக்கும்போது ஐயோ! பரிதாபம்! இத்தனை யான துர்கந்தம்! ஆண்டவரின் நாமத்திற்கு தூஷணம்! அருமையான சகோதரியே! நமது ஆண்டவர் முட்களால் பிய்க்கப்பட்டும், பல உபத்திரவங்களின் வழியாய் போன

போதும், என்ன வாசனை வெளியானது. ''பிதாவே இவர்களுக்கு மன்னியும்; தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்கள்" என்ற அருமையான நற்கந்தம் வெளியானது! அவருடைய அடிச்சுவட்டை பின் பற்றுகிற நமது வாழ்வில், உபத்திரவம். பாடுகளின் மத்தியில் தேவனின் நற்கந்தம் வீசட்டும். தேவ நாமம் மகிமைப்படட்டும்! அதன் மூலமாய் நாம் தேவனைக் கவர்ந்து கொள்ளக்கூடும்.

அருமை சகோதரிகளே! சூலமித்தியின் வாழ்க்கையில் நேசரைக் கவர்ந்து கொள்ள அவர் வாழ்க்கையின் அம்சங்கள் சிலவற்றைக் கண்டோம். இன்றைக்கு நமது வாழ்வில், நமது குடும்ப ஜீவியத்தில் நேசரைக் கவர்ந்து கொள்ளக் கூடிய அளவிலே, நேசருக்கு மனமகிழ்ச்சிதரும் வழியிலே நடந்து, இராக் காலங்களில் ஆத்துமநேசரை தேடி அவரை விடாமல் பற்றிக்கொண்டு, இருதயம் அவர் நிமித்தமாகப் பொங்கட்டும். வாழ்க்கையில் பரிசுத்தமே நாம் இலட்சியமாகக் கொண்டு, அதற்காக நம் கண்ணின் பார்வையை நேராக்கி, உதடுகளின் வார்த்தையை சரியாக்கி, பேசக் கூடிய சத்தத்தின் தொனியை மாற்றி உபத்திரவத்தின் மத்தியிலும், பாடுகளின் மத்தியிலும், எல்லா வேளைகளிலும் கிறிஸ்துவின் நற்கந்தத்தை வீசி ஆண்டவருடைய நாம மகிமைக்காக ஜீவிக்கிற வேளையிலே தானே நேசர் என்னையும் உங்களையும் நோக்கி, ''என் பிரியமே என் இருதயத்தைக் கவர்ந்து கொண்டாய் என்று கூறுவது'' உறுதி. தேவன் தாமே கிருபையளிப்பாராக.

அத்தியாயம் 18

# மனைவிகளே உங்கள் இருதயங்களை ஆராய்ந்து பாருங்கள்:-

1. திருமண நாள் அன்று நீங்கள் உங்கள் மணமகனாயிருந்த கணவனின் கரத்தை பிடித்துக் கொண்டு கர்த்தர் சமுகத்தில் செய்த உடன்படிக்கையில் உண்மையாய் இருக்கிறீர்களா? (மல். 2:14).

2. உங்கள் புருஷனுக்கு செய்ய வேண்டிய கடமைகளை செய்து ஏற்ற துணையாக இருக்கிறீர்களா?(I கொரி. 7:3 ஆதி. 2:20).

3. உங்கள் சரீரத்திற்கு நீங்கள் அதிகாரியல்ல, உங்கள் புருஷனே அதற்கு அதிகாரி என்பதை உணர்ந்து ஏற்று நடக்கிறீர்களா? (I கொரி 7:4).

4. உங்கள் புருஷனை விட்டுப் பிரிந்து போகாமல் இருக்கிறீர்களா? (I கொரி. 7:10).

5. உங்கள் புருஷன் உங்களுக்கு தலையாயிருக்கிறாரா? (I கொரி. 11:3; எபே. 5:23).

6. உங்கள் புருஷனுக்கு நீங்கள் மகிமையாய் இருக்கிறீர்களா? (I கொரி. 11:7).

7. நீங்கள் தான் உங்கள் புருஷனுக்காக சிருஷ்டிக்கப்பட்டவர்கள் என்று உணருகிறீர்களா? (I கொரி. 11:9).

8. கர்த்தருக்கு அடங்கியிருப்பது போல் உங்கள் சொந்த புருஷருக்கு எல்லாவற்றிலும் அடங்கி இருக்கிறீர்களா? (எபே. 5:22; கொலே. 3:18; I பேதுரு 3:1).

9. உங்கள் புருஷனிடம் பயபக்தியாய் இருக்கிறீர்களா? (எபே. 5:33).

10. உங்கள் புருஷனுக்கு செய்ய வேண்டிய தாம்பத்திய உறவின் கடமைகளை செய்கிறீர்களா?

11. உங்கள் ஜனத்தையும், தகப்பன் வீட்டையும் மறந்து உங்கள் புருஷன் ஜனம் உங்கள் ஜனம் என்று மனமுவந்து ஏற்றுவாழ்கிறீர்களா? (சங். 46:10, ரூத். 1:16).

12. உங்கள் புருஷனுக்கு போதிக்காமலும், அவர் மேல் அதிகாரம் செலுத்தாமலும் இருக்கிறீர்களா? (I தீமோ. 2:12).

13. நீங்கள் அமைதலாய் இருக்கிறீர்களா? (I தீமோ. 2:12).

14. ஒரு வேளை உங்கள் புருஷன் திருவசனத்திற்கு கீழ்படியாதவரானால், உங்கள் கற்புள்ள நடக்கையை பார்த்து ஆதாயப்பட முடியுமா? (I பேதுரு 3:1,2).

15. புறம்பான அலங்கரிப்பாகிய உயர்ந்த உடையும், பொன்னாபரணங்களும், இன்னும் உங்களுக்கு அலங்காரமாயுள்ளதா? (I பேது. 3:3).

16. சாந்தமும் அமைதலும் அழியாத அலங்கரிப்பாயுள்ளதா? (I பேது. 3:4).

17. உங்கள் புருஷனுக்கு அடங்கியிருப்பது தான் உங்கள் அலங்கரிப்பு என்பது உங்களுக்குத் தெரியுமா ஏற்றுக் கொள்கிறீர்களா? (I பேதுரு 3:5).

18 கணவனின் நல்ல காரியங்களை அடிக்கடி பாராட்டி அவர்களை மகிழ்ச்சியடையச் செய்கிறீர்களா?

19. இருவரும் ஒன்று, எல்லாம் இருவருக்கும் பொதுவானது என்று எண்ணி, பிரிவினையின்றி நடந்து கொள்கிறீர்களா? (எபேசி 5:31, மத் 19:4-6).

20. தவறு நடந்து விட்டால் புருஷனிடம் மன்னிப்பு கேட்கும் பழக்கம் உண்டா? (கேட்க வேண்டும்).

21. கணவரோடு சேர்ந்து அடிக்கடி ஜெபிப்பது உண்டா?

22. பிள்ளைகளுக்கு கர்த்தரைப் பற்றி, வேதத்தைப் பற்றி போதிப்பது உண்டா?

23. பிள்ளைகளுக்கு முன் மாதிரியாக நடந்து கொள்கிறீர்களா?

24. பிள்ளைகள் கர்த்தரால் கொடுக்கப்பட்டிருக்கும் சுதந்திரம் (பூர்வீக சொத்து) என்பதை உணர்ந்து பராமரிக்கிறீர்களா? (சங் 127:4).

25. பிள்ளைகளுடைய படிப்பில் கவனம் செலுத்தி உதவி செய்கிறீர்களா?

26. பிள்ளைகளுக்கு செய்ய வேண்டிய கடமைகளை சரிவர செய்கிறீர்களா?

27. கோபத்தினால் மூர்க்கமடைந்து பிள்ளைகளை சிட்சிக்காமல், அன்பினால் நன்மைக்காக சிட்சிக்கிறீர்களா?

28. பிள்ளைகளுக்காக பாரத்துடன் தினமும் ஜெபிக்கிறீர்களா?

29. உங்கள் புருஷன் உங்களை குணசாலி என புகழ முடியுமா? (நீதி 31:29).

30. உங்கள் பிள்ளைகள் உங்களை பாக்கியவதி என கூற முடியுமா? (நீதி 31:26).

## அத்தியாயம் 19

# குடும்ப உறவு

## நீங்கள் வாசிக்கப்போகும் சில தலைப்புகள்:-

1. குடும்ப உறவு விளக்க வரைபடம்
2. முன்னுரை
3. மனித சிருஷ்டிப்பில் மட்டுமே குடும்ப உறவுகள்
4. சிக்கலான குடும்ப உறவுகள்
5. பிரச்சனைக்கு காரணமான உறவுகள்
6. தவிர்க்க முடியாத உறவுகள்
7. முக்கிய உறவுகள்
8. உறவுகள் தேவனால் ஏற்படுத்தப்பட்டவை
9. முதல் உறவு (புருஷன்-மனைவி)
10. அன்பு கூருதல்- கீழ்ப்படிதல்
11. பெற்றோர்-பிள்ளைகள்
12. சிட்சை, போதனை, கீழ்ப்படிதல்
13. மாமனார்- மாமியார் (சிக்கலான உறவு)
14. மாமியார் - மருமகள் சண்டை
15. மாமியார் கொடுமை - கல்லூரி ராக்கிங்
16. இன்று மருமகள் - நாளை மாமியார்
17. தர்ம சங்கடமான நிலையில் புருஷன் - அம்மாவா? மனைவியா?
18. தாத்தா - பாட்டி, பேரன் பேத்தி
19. தாத்தா - பாட்டிகளுக்கு ஓர் வேண்டுகோள்
20. புருஷனுக்குப் பல பதவிகள்
21. மனைவிக்கு ஏகப்பட்ட பதவிகள்
22. பாவம் மனைவிகள்!

## குடும்ப உறவுகளை காட்டும் படம்



சிக்கலான குடும்ப உறவு—அதனால் ஏற்படும் பிரச்சனை - தீர்வுகாண ஆலோசனை:-

## சிக்கல் நிறைந்த உறவுகளால் பின்னப்பட்ட வாழ்க்கை குடும்பத்தைப் பெரிதும் பாதிக்கிறது.

''கர்த்தர் வீட்டை கட்டாராகில் அதை கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா'' — (சங். 127;1).

முன்னுரை:

கர்த்தர் வீட்டை கட்டுகிறவர். கர்த்தர் வீட்டைக் கட்டாராகில், கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா இங்கு வீடு என்ற பதம் கட்டிடத்தை குறிப்பதில்லை. வீடு என்ற வார்த்தைக்கு 'குடும்பம்' என்று அர்த்தம் கொள்ள வேண்டும். குடும்பத்தார் என்று சொல்வதற்கு வீட்டார் என்று சொல்வது உண்டு.

ஆகையால் சங். 127:1ஐ இவ்வாறு வாசிக்கலாம். கர்த்தர் குடும்பத்தை கட்டாராகில் அதை கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா.

**தேவனும் மனிதனும்:-**

குடும்பத்தை தேவன் ஏற்படுத்தினபடியால் தேவனே குடும்பத்தை கட்டவேண்டும். அதற்காக வேண்டி நாம் பொறுப்பில்லாமல் கர்த்தர் என் குடும்பத்தை கட்டட்டும் என்று ஒதுங்கிக்கொள்ள முடியுமா? முடியாது, கூடாது. அதே சமயத்தில் நம்முடைய சுயமுயற்சியினாலும், திறமையினாலும் மட்டும் நம் குடும்பத்தை கட்டிவிடலாம் என்று எண்ணவும் கூடாது.

**தேவன் மனிதன் மூலமாக:-**

கர்த்தர் நேரிடையாக குடும்பத்தை கட்டுவதில்லை. மனிதன் மூலம் தான் கட்டுவார். மனித சமுதாயத்துக்கு கர்த்தர் எதையும் செய்யவேண்டுமாயின், மனிதன் மூல

மாகவே செய்வார். ஒரு குடும்பத்தைக்கட்ட தேவன் அக் குடும்பத்தின் நபர்களையே பயன்படுத்துவார். அவர்கள் மூலமே கட்டுவார். குடும்பத்தின் நபர்களோடு சேர்ந்தே கட்டுவார்.

ஆகையால் தேவனோடு ஒத்துழைத்து, அவரோடு சேர்ந்து உங்கள் குடும்பத்தை கட்ட வேண்டும்.

புருஷன் கிறிஸ்துவோடு சேர்ந்து குடும்பத்தை கட்ட வேண்டும். மனைவி தேவனோடு இசைந்து குடும்பத்தை கட்ட வேண்டும். பிள்ளைகள் தேவனின் திட்டத்திற்கு ஒப்புக்கொடுத்து தேவனோடு சேர்ந்து குடும்பத்தைக் கட்ட வேண்டும். நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து தேவனோடு ஒத்துழைத்து நம் குடும்பங்களை கட்டுவோம். வாரீர்!

**குடும்ப உறவு :-** குடும்பத்தை கட்டும் பணியில் ஈடுபடும் போது சில முட்டுக்கட்டைகள் உண்டாகின்றன. குடும்பத்தின் சுமுகமான சூழ்நிலைகள் பலவித காரியங்களால் பாதிக்கப்படுகின்றது. பாதிப்பை ஏற்படுத்தும் காரியங் களில் மிக முக்கியமானது. 'குடும்ப உறவு' ஆகும். குடும்ப உறவைப் பற்றி நாம் சிந்திப்போமாயின், குடும்ப உறவினால் நமது குடும்பங்கள் பாதிக்கப்படாதபடி பார்த்துக்கொள்ள லாம்.

**குடும்பத் தலைவன் :-** 'இவ்வீட்டின் தலைவர் இயேசு' என்ற போர்டுகளை நம் வீட்டின் நிலைகளில் மாட்டிவைத் திருக்கிறோம். வசனத்தின்படி புருஷன் தான் ஒரு குடும்பத் தின் தலைவன். இயேசு புருஷனுக்குத் தலையாக இருக்கிறார். குடும்பத்தின் நேரிடைத்தலைவன் புருஷனாகும்.

"புருஷன்(னும்) மனைவிக்குத் தலையாயிருக்கிறான்"

(எபே 5:23).

"ஒவ்வொரு புருஷனுக்கும் கிறிஸ்து தலையாயிருக்கிறா ரென்றும், ஸ்திரீக்குப் புருஷன் தலையாயிருக்கிறானென்றும்... நீங்கள் அறிய வேண்டுமென்று விரும்புகிறேன்"

(I கொரி 11:3).

**மனித் சிருஷ்டிப்பு:-** சிருஷ்டிப்புகளிலெல்லாம் மகுடமாக அமைந்திருப்பது மனித சிருஷ்டிப்பு ஆகும். மனிதன் ஆறு அறிவுள்ளவனாக படைக்கப்பட்டான்.

**ஆண்—பெண் சிருஷ்டிப்பு :-** உயிரினங்கள் யாவும் ஆணும் பெண்ணுமாக, ஜோடி ஜோடியாக சிருஷ்டிக்கப் பட்டன. ஏனைய உயிரினங்கள், ஆணும் பெண்ணுமாக சிருஷ்டிக்கப்பட்ட முக்கிய நோக்கம் இனப் பெருக்கமே. தன் தன் இனத்தைப் பெருக்குவதே பிற உயிரினங்களின் வேலையாகும்.

மனிதனைத் தவிர வேறு எந்த உயிர் இனத்திலும் குடும்ப உறவு கிடையாது. மனித வர்க்கத்தில் மட்டுமே குடும்ப உறவு காணப்படுகிறது.

**உறவுள்ள குடும்பம் :-** மனிதன் மட்டுமே உறவுள்ள குடும்பமாக வாழ்வதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிறான். இன விருத்தி காலத்தில் மட்டுமே பிற உயிரினங்கள் குடும்ப மாக வாழ்கின்றன; இனவிருத்தி காலம் முடிந்தபின் அவைகளிடையே உறவு நீடிப்பதில்லை. ஆண் உயிரினம் தனியே போய்விடுகிறது பெண் உயிரினம் (தாய்) குறிப்பட்ட காலத்திற்குப் பின் தனியே போய்விடுகிறது. குட்டிகளோ, குஞ்சுகளோ ஓரளவு வளர்ச்சியடைந்துவிட்டால் பிரிந்து போய்விடுகின்றன. குடும்ப உறவு தொடர்வதில்லை.

**உறவுக்கு உள்ள இடம் :-** மனிதனே உறவுள்ள குடும்ப வாழ்க்கையை நடத்துகிறான். குடும்பத்திலுள்ள உறவுகளைத் தேவனே ஏற்படுத்தியிருக்கிறார். உறவுக்கு குடும்பத்தில் இடத்தையும் கர்த்தர் ஏற்படுத்தியிருக்கிறார். அது அதற்குரிய ஸ்தானம் குடும்பத்தில் இருக்கிறது.

**குடும்ப அலகு :-** ஒரு குடும்பத்தின் அடிப்படை உறவுகள் புருஷன் (தகப்பன்), மனைவி (தாய்), பிள்ளைகள் என்பவைகளே ஆகும். இம்மூன்று உறவுகளோடு குடும்ப வாழ்க்கை நின்றுவிடுவதில்லை. மேலும் பல உறவுகள் குடும்பத்தில் உள்ளன. மானிட வர்க்கம் முழுவதும் இவ்வித உறவுகள் உண்டு.

நாகரீகமற்ற கல்லாதோர் மத்தியிலும், நாகரீகத்தின் உச்சியில் இருக்கும் நவீன கல்வியறிவுள்ள மக்கள் மத்தியிலும் இந்த உறவுகள் உண்டு.

**சிக்கலான உறவு :-** குடும்பம் என்பது பலவித சிக்கல் நிறைந்த உறவுகளால் பின்னப்பட்ட ஒரு அமைப்பாகும். சிக்கல் நிறைந்த உறவுகளால் பின்னப்பட்ட வாழ்க்கை குடும்பத்தை பெரிதும் பாதிக்கிறது. சிக்கல் நிறைந்த உறவின் மத்தியில் குடும்பம் நடத்தும்போது பல சிக்கல்கள், பல பிரச்சனைகள் உண்டாகின்றன.

**பிரச்சனைக்கு காரணம் :-** குடும்பம் கட்டப்பட தடையாக இருப்பது. சிக்கல் நிறைந்த உறவினால் பின்னப் பட்ட வாழ்க்கையாகும். குடும்ப உறவு பாதிக்கப்படும் போது. குடும்பத்தின் சூழ்நிலையே பாதிக்கப்பட்டு விடுகிறது. குடும்பம் கட்டப்பட வேண்டுமாயின், குடும்ப உறவு முறைகள் இருக்கவேண்டிய இடத்தில், குடும்ப உறவு பாதிக் கப்படும் போது குடும்பத்தின் அது அது இருக்க வேண்டும். உறவு தன் ஸ்தானத்தை விட்டு விலகும்போது, ஒரு குறிப் பிட்ட உறவு தனக்கு மிஞ்சி செயல்படும்போது, பிரச்சனை உண்டாகிறது. குடும்ப சூழ்நிலை பாதிக்கப்படுகிறது.

**கவனம் தேவை :-** ஆகையால் குடும்ப உறவு சரியான படி பாதுகாக்கப்படவேண்டியது அவசியம். உறவுகள் ஒன்றோடொன்று பின்னி இணைந்திருப்பதால், ஒரு உறவு பாதிக்கப்பட்டால் எல்லா உறவுகளும் பாதிக்கப்பட்டுவிடும்.

**விளக்கம்:-** மின் இணைப்பில் விளக்குகள், ஒலி பெருக்கி, விசிறி போன்ற இன்னும் பல கருவிகள் இணைக்கப்பட்டு செயல்படுகின்றன. இவைகளை இணைத்துள்ள இணைப்பு களில் ஏதாவது ஒரு இணைப்பில்பழுது ஏற்படுமாயின், எல்லா இணைப்புகளும் பாதிக்கப்பட்டு விடும். அல்லது ஒரு சில பகுதிகள் பாதிக்கப்பட்டு விடும். அதே போல் குடும்பத்தின் ஒரு உறவு பாதிக்கப்பட்டால் குடும்பத்தின் அநேக உறவுகள் பாதிக்கப்பட்டு விடும்.

**ஒன்றுக்கொன்று சம்பந்தம்:-** ஒரு உறவோடு இன்னொரு உறவு இணைக்கப்பட்டிருப்பதால் ஒரு உறவு பாதிக்கப்படும் போது மற்ற உறவுகளும் பாதிக்கப்பட்டு விடும். குடும்பத்திலுள்ள எல்லா இணைப்புகளும் மிக விரைவில் பாதிக்கப்பட்டு குடும்பமே அசைய ஆரம்பித்து விடும்.

**புருஷன் - மனைவி:-** குடும்பத்தின் முதல் உறவும் முக்கியமான உறவும் புருஷன் - மனைவி உறவாகும். புருஷன் - மனைவி மாத்திரம் உள்ள குடும்பத்தில் பிரச்சனை குறைவு. புருஷனும் மனைவியும் ஒருவேளை கொஞ்சம் கூட ஒத்துப்போகாத எதிர் துருவங்கள் போலவும், கீரியும், பாம்பும் போலவும் இருந்தால், எப்போதும் பிரச்சனை தான். இப்படி விதிவிலக்கு இருக்கலாம்.

பொதுவாக புருஷன் மனைவி என்ற ஒரே உறவுள்ள குடும்பத்தில் பிரச்சனை குறைவே. பிள்ளைகள், மாமன், மாமியார், அப்பா, அம்மா, அக்காள், தங்கை, அண்ணன், தம்பி, மைத்துனர், நாத்தனார் போன்ற உறவுகள் இல்லாவிட்டால், குடும்பம் அதிகம் பாதிக்கப்படுவதில்லை. அதிக பாதிப்பு ஏற்பட வாய்ப்பில்லை.

**இரண்டாவது மூன்றுவது உறவு:-** புருஷன் மனைவி உறவோடு, பிள்ளை என்ற உறவு சேரும்போது, 'பிரச்சனையும்; பாதிப்பும் ஏற்பட வாய்ப்பு உண்டாகிறது. பிள்ளைகள் (ஒன்றுக்குமேல்) என்று ஆகுமானால், பாதிப்பு அதிகம் உண்டாகும். உறவுகள் அதிகமாக, அதிகமாக பாதிப்பு ஏற்பட வாய்ப்புகளும் அதிகமாகும்.

**மாமனார் - மாமியார் உறவு:-** மாமனார் - மாமியார் (கணவனின் அப்பா - அம்மா) என்ற உறவு குடும்பத்தில் இருக்குமாயின், அதிகப் பிரச்சனை ஏற்பட வாய்ப்பு (மாமனார்-மாமியார் மன்னிக்கவும்) உண்டு.

**நாத்தனார் -மைத்துனர் உறவு :-** உறவு அதிக சிக்கல் நிறைந்த உறவாகும். கணவனின் சகோதர சகோதரிகள் உறவு, மாமனார்-மாமியார் உறவோடு சேர்ந்து கொள்ளு

மாயின் குடும்பத்தில் ஏற்படும் பிரச்சினைக்கு அளவே இருக் காது. பாதிப்பு ஏற்பட அதிக அளவில் வாய்ப்பு உண்டாகும்.

**உறவுகள் தேவன் ஏற்படுத்தியதே:-** சிக்கல் நிறைந்த உறவுகள் பத்திரமாக கையாளப்படாவிட்டால், பெரிய அளவில் சேதம் உண்டாகி விடும். சிக்கல் நிறைந்த உறவு கள் அதிகம் இருந்தால் குடும்பம் கட்டப்படுவது கஷ்டம் தான். எனினும் இவ்வுறவுகள் தேவனால் ஏற்படுத்தப்பட் டிருக்கிறபடியால், தேவனின் உதவியோடு, சிக்கல் நிறைந்த உறவுகள் உள்ள குடும்பங்களையும் சிறப்பாக கட்டமுடியும்.

சிக்கல் நிறைந்த குடும்பங்களை கர்த்தர் கட்ட வேண்டும். அதற்கு நாம் இசைந்து கொடுக்க வேண்டும். குடும்ப உறவு பாதிக்கப்படும்போது, குடும்ப ஆசீர்வாதம், குடும்ப சமா தானம், குடும்ப அமைதி போன்றவை பாதிக்கப்படுகின்றன.

அதிக உறவுள்ள குடும்பங்கள் அதிக ஜாக்கிரதையோடு இருக்க வேண்டியது மிக அவசியம்.

**ஏன் இந்த தொல்லை:-** ஏன் இந்த தொல்லை? எல்லா இணைப்புகளையும் துண்டித்துவிட்டு, புருஷன்-மனைவி பிள்ளை கள் என்று நிம்மதியாக இருந்து விடலாமே என்று நினைத் தால் அப்படி செய்யவும் முடியாது. ஏனென்றால், எல்லா உறவுகளும் தேவனால் ஏற்படுத்தப்பட்டவை. வேதத்தில் உறவு முறையானது என்றும், பலவித உறவின் பெயர்களும் இடம் பெற்றிருக்கின்றன-

**முதல் உறவு:-** குடும்ப உறவுகளில் மிக முக்கியம் வாய்ந்த உறவு புருஷன்-மனைவி உறவாகும். இவர் களிடையே உறவு அன்பு-கீழ்ப்படிதல் என்ற இரு இழை யுள்ள இணைப்பினால் கட்டப்பட்டிருக்கிறது.

"மனைவிகளே, கர்த்தருக்கு கீழ்ப்படிகிறது போல உங்கள் சொந்தப் புருஷனுக்குக் கீழ்ப்படியுங்கள்"

*(எபே. 6:23, கொலே 3:18).*

''புருஷர்களே, உங்கள் மனைவிகளில் அன்பு கூருங்கள்'' (எபே. 5:25, கொலே. 3:19).

வெறும் அன்பு என்ற ஒரு இழை உள்ள கயிற்றினால் மட்டும் புருஷன் - மனைவி இணைப்பைக் கட்ட முடியாது. புருஷனிடமிருந்து அன்பு என்ற கயிறு மனைவியைக் கட்ட முடியாது. மனைவியினிடத்திலிருந்து கீழ்ப்படிதல் என்ற கயிறு புருஷனை இணைக்க வேண்டும். இவ்விருவரும் தேவனோடு நல்ல உறவு வைத்திருக்க வேண்டும். இவ்வமைப்பு முப்புரி நூல் போல் உறுதியாக இருக்கும்.

**மனைவியின் எதிர்ப்பார்ப்பு:-** மனைவிகள் என்ன நினைக்கிறார்கள்? புருஷன் மட்டும் அன்பு கூர்ந்தால் போதும் எல்லாம் சரியாகிவிடும், குடும்பம் கட்டப்பட்டு விடும். புருஷன் என்னிடத்தில் அன்பு கூராதபடியால் தான் குடும்பம் கட்டப்பட முடியவில்லை என்று நினைக்கிறார்கள். புருஷர்கள் மனைவியினிடத்தில் அன்பு கூர வேண்டும் என்று வேதம் சொல்லுகிறது என்று சுட்டிக்காட்டுவார்கள்.

**புருஷனின் எதிர்பார்ப்பு:-** புருஷர்கள் என்ன நினைக்கிறார்கள்? மனைவிகள் கீழ்ப்படிந்தால் போதும், குடும்பம் கட்டப்பட்டுவிடும். என் மனைவி கீழ்ப்படியாத நிலையில் தான் குடும்பம் கட்டப்பட முடியவில்லை என்று நினைக்கிறார்கள். மனைவிகளே, உங்கள் சொந்த புருஷருக்கு கீழ்ப்படியுங்கள் என்று வேதம் சொல்லுகிறது என்று சுட்டிக் காட்டுவார்கள்.

**அன்பும்-கீழ்ப்படிதலும் அவசியம்:-**

அன்பு கீழ்ப்படிதல் என்ற இரு இணைப்பும் சேர்ந்து கட்டப்படும் குடும்பங்களே சிறந்த குடும்பங்களாக விளங்கமுடியும்.

ஒரு வேளை அன்பினால் மட்டும் அல்லது கீழ்ப்படிதலால் மட்டும் குடும்பம் கட்டப்படலாம். ஆனால் இவ்வகையான ஒரு பக்க இணைப்பினால் இயங்கும் குடும்பங்கள் அதிக நாட்கள் தாக்குப்பிடிக்க முடியாது. ஒரு நாள் சட்டென்று உறவு பாதிக்கப்பட்டுவிடும். இணைப்பு அறுந்து விடும். பெரிய விளைவுகள் ஏற்பட்டு விடும்.

**அன்புக்கு மாற்று இல்லை:-**

அன்பு கூறுதலுக்கு மாற்று வேறு எதுவும் இல்லை. அன்பு கூறுதலுக்குப் பதிலாக வேறு ஒன்றைச் செய்து ஈடுகட்ட முடியாது. அன்புகூறுதலுக்கு ஈடு அன்புகூறுதலே.

புருஷர்களே, உங்கள் உறவு மனைவியோடு சரியாக இருக்கவேண்டுமாயின் மனைவியினிடத்தில் அன்புகூருங்கள், உங்கள் அன்பை வார்த்தையிலும், நடக்கையிலும், கிரியையிலும் வெளிப்படுத்துங்கள்.

**கீழ்ப்படிதலுக்கு மாற்று இல்லை:-** கீழ்ப்படிதலுக்கு மாற்று வேறு எதுவும் இல்லை. கீழ்ப்படிதலுக்குப் பதிலாக வேறு ஒன்றைச் செய்து ஈடுகட்ட முடியாது. கீழ்ப்படிதலுக்கு ஈடு கீழ்ப்படிதலே.

**வேறு வழியே இல்லை:-** மனைவிகளே, உங்கள் சொந்தப் புருஷருக்குக் கீழ்ப்படியுங்கள். இதைத்தவிர வேறு வழியே இல்லை உங்கள் புருஷர்களோடு உறவு சரியாக இருக்க வேண்டுமாயின் எல்லா காரியத்திலும் கீழ்ப்படியுங்கள்.

**உறவு பாதிக்கப்படும்:-** மனைவி கீழ்ப்படியாத பட்சத்தில், மனைவி-புருஷன் உறவு நிச்சயமாய் பாதிக்கப்படும். புருஷன் எவ்வளவுதான் அன்பு கூர்ந்தாலும் மனைவியினிடத்தில் கீழ்ப்படிதல் இல்லாவிட்டால் உறவு சரியாக இருக்காது.

புருஷன் மனைவியினிடத்தில் அன்புகூராத பட்சத்தில் புருஷன்-மனைவி உறவு நிச்சயமாய் பாதிக்கப்படும். மனைவி எவ்வளவுதான் கீழ்ப்படிந்து நடந்தாலும் புருஷன் அன்புகூரவில்லையென்றால் உறவு சரியாக இருக்காது.

உங்கள் உறவு சரியாக இருக்க செய்ய வேண்டியதை செய்யுங்கள். வெறும் ஜெபம் மட்டும் உங்கள் குடும்பத்திற்கு உதவி செய்யமுடியாது. அன்பு கூருதலும் கீழ்ப்படிதலுமே குடும்ப உறவை உரமாக வைக்கும்.

பெற்றோர் பிள்ளைகள்:-

## பிள்ளைகள் கீழ்ப்படியாதபோது குடும்ப உறவு பாதிக்கப்படுகிறது

புருஷன்-மனைவி உறவுக்கு அடுத்தபடி பெற்றோர்-பிள்ளைகள் உறவு மிக முக்கியமானது ஆகும். இன்று அநேக குடும்பங்களில் பெற்றோர் பிள்ளைகள் உறவு பாதிக்கப்பட்டு குடும்பங்கள் கண்ணீரோடு, துக்கத்தோடும், வேதனையோடும் இருக்கின்றன. பிள்ளைகள் பெற்றோர்க்குக் கீழ்ப்படிய வேண்டும். பெற்றோர்கள் பிள்ளைகளை நேசித்து, சிட்சித்து, போதித்து கவனமாக வளர்க்க வேண்டும்.

"பிள்ளைகளே, உங்கள் பெற்றோருக்குக் கர்த்தருக்குள் கீழ்ப்படியுங்கள், இது நியாயம்,

உனக்கு நன்மை உண்டாயிருப்பதற்கும், பூமியிலே உன் வாழ்நாள் நீடித்திருப்பதற்கும்,

உன் தகப்பனையும், உன் தாயையும் கனம்பண்ணுவாயாக என்பதே வாக்குத்தத்தமுள்ள முதலாங்கற்பனையாயிருக்கிறது"-(எபே. 6:1-3, கொலோ. 3:20).

"பிதாக்களே, நீங்களும் உங்கள் பிள்ளைகளை கோபப்படுத்தாமல், கர்த்தருக்கேற்ற சிட்சையிலும், போதனையிலும் அவர்களை வளர்ப்பீர்களாக"

(எபே 6:4, கொலோ 3:21).

பிள்ளைகளுக்கு போதித்தல்:-

பிள்ளைகளை நேசிக்க வேண்டும். பிள்ளைகளுக்கு போதிக்க வேண்டும். பிள்ளைகளை சிட்சிக்க வேண்டும். பிள்ளைகளை பயிற்றுவிக்க வேண்டும். (நீதி. 3 : 12, 13 : 24, 22 : 15 23:13,14; I திமோ. :4).

பெற்றோர் பிள்ளைகளை நடத்த வேண்டிய வழியிலே நடத்த வேண்டும். பிள்ளைகள் பெற்றோரைக் கனம் பண்ணி அவர்களுக்கு கீழ்ப்படியவேண்டும். பெற்றோர்-பிள்ளைகள் உறவு நீடிக்க, நிலைத்திருக்க, நிலையாக இருக்க ஆவன செய்ய கவனமாக இருக்க வேண்டும்.

**பிள்ளைகளோடு நேரம் செலவழிக்க வேண்டும்:-**

பெற்றோர் பிள்ளைகளோடு நேரம் செலவழிக்க வேண்டும். வேதத்தை அவர்களுக்குப் போதிக்க வேண்டும் (உபா 6:7, சங். 78:5). பெற்றோரும் பிள்ளைகளும் காரியங்களை பகிர்ந்து கொள்ள வேண்டும். நல்ல நட்பு இருக்க வேண்டும்.

**பிள்ளைகள் ஆளக்கூடாது:-** குடும்பத்தை பிள்ளைகள் நடத்தக்கூடாது. பிள்ளைகளோடு பகிர்ந்து கொள்ளலாம். பிள்ளைகளுக்குக் குடும்பத்தை ஆளக்கூடிய இடத்தைத் தரக்கூடாது.

**அவரவர்க்குள்ள இடம்:-** குடும்பத்தில் அவரவர்க்குள்ள இடத்தில் அவரவர் இருந்து செயல் படவேண்டும். அவரவர் ஸ்தானத்தில், அவரவர் இருந்தால் குடும்ப உறவு பாதுகாக்கப்படும். அவரவர் ஸ்தானத்தை மீறி அடுத்தவர் எல்லைக்குள் நுழைய முற்படும் போது, சமநிலை பாதிக்கப்பட்டு, குடும்பம் குழப்பத்திற்குள்ளாகிறது.

அப்பா, அம்மா, பிள்ளைகள் ஆகிய உறவுள்ள குடும்பத்தில் மூன்றே உறவுகள். ஆகையால் இந்த உறவுகளை ஓரளவு எளிதில் பாதுகாத்துக் கொள்ளலாம்.

**மாமனார் மாமியார்:-**

மாமனார், மாமியார் (புருஷனின் பெற்றோர்) இருக்கும் குடும்பத்தில் உறவுகள் அதிகமாகின்றன. உறவுகள் அதிகமாகும்போது சிக்கல் ஏற்படுகின்றன. குடும்பத்திலுள்ள ஒவ்வொரு நபரும் பல உறவுகளால் பின்னப்படுவதால் எல்லா உறவுகளையும் பாதுகாத்துக் கொள்வதற்கு அதிக கவனம் தேவைப்படுகிறது.

**புருஷனுக்குத் தொல்லை இல்லை:-**

மனைவியின் பெற்றோர் இருக்கும் குடும்பத்தில் மாமனார்-மாமியார் உறவினால் புருஷன் அதிகம் பாதிக்கப்படுவதில்லை. இந்தியாவின் பண்பாட்டின்படி புருஷன் மீது மனைவியின் பெற்றோர் ஆதிக்கம் செலுத்த முடியாது. சில குடும்பங்களில்

மருமகன் முன்னின்று பேசக்கூட மாட்டார்கள். ஆகையால் புருஷனுக்குத் தொல்லை இல்லை.

**மருமகனுக்கு போலி மரியாதையாவது:-**

மாமனார் - மாமியார், மருமகனுக்கு மதிப்பு கொடுத்து பயபக்தியோடு நடந்து கொள்வார்கள். மருமகன் இல்லாத போது எப்படி தரக்குறைவாகப் பேசினாலும் அவர் முன்னால் போலி மரியாதையாவது கொடுப்பார்கள். மேலும் மருமகன் போட்டதுதான் சட்டம். ஆகையால் மனைவியின் பெற்றோரினால் பெரிய பாதிப்பு உண்டாகிறதில்லை.

**சண்டை மூட்டும் பெற்றோர்:-**

சில இடங்களில் மனைவியின் பெற்றோர் மகளுக்கு, அதையும் இதையும் சொல்லி புருஷனுக்கும் மனைவிக்கும் சண்டை மூட்டி விடுவார்கள்.

உன் புருஷனை 'அப்படியிருக்கச் சொல்', 'இப்படி இருக்கச் சொல்' 'இப்படி செய்ய வேண்டாமென்று சொல்' 'அவர் அம்மாவுக்கும் அக்கா தங்கைக்கும் எல்லாவற்றையும், கொண்டு போய் கொடுத்து விடப்போகிறார். ஜாக்கிரதையாயிரு', 'அவர் வீட்டாரோடு அதிகம் சேரவிடாதே' போன்ற மந்திரங்களை ஓதி மகளின் மனநிலையைக் கெடுத்து, அதன் மூலம் புருஷன் மனைவி உறவு பாதிக்கும்படி செய்யும் வாய்ப்பு உண்டு.

ஆகையால் மனைவியின் பெற்றோரும் இந்த விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். உங்கள் மகளுக்கும், மருமகனுக்கும் இடையே உள்ள உறவு பாதிக்கப்படும்படியான காரியங்களை பேசாமல், அவர்கள் உறவு பெலப்படும்படியான காரியங்களைப் பேசவேண்டும். நல்ல ஆலோசனை சொல்ல வேண்டும்.

கிறிஸ்துவுக்குள் அன்பானவரே, நீங்கள் உங்கள் மக்களுக்கு நல்ல ஆலோசனை சொல்லுகிறீர்களா? அல்லது தீய ஆலோசனை சொல்லுகிறீர்களா?

**தகப்பன் மகனுமாயிருக்கிறார்:-** புருஷனின் தாயும், தகப்பனும் குடும்பத்தில் இருக்கும்போது, உறவு அதிகமாகிறது. மனைவியின் மாமனார், மாமியார் புருஷனுக்கு அப்பா, அம்மாவாகிறார்கள். ஆகையால் புருஷன் இப்போது பிள்ளைகளுக்குத் தகப்பனாக இருந்தாலும், மாமனார் - மாமியார்க்கு மகனாக இருக்கிறார். ஆகையால் புருஷன் குடும்பத்தில் மனைவியோடுள்ள உறவையும், பாதுகாத்து கொண்டு அப்பா, அம்மாவோடுள்ள மகன் என்ற உறவையும் பாதுகாக்க வேண்டும்.

**சிக்கலான உறவுகள்:-** இப்போது குடும்பத்தில் மாமனார் - மாமியார், புருஷன் -மனைவி, மகன் -மருமகள், மகன்-மகள், பேரன்-பேத்தி, தாத்தா-பாட்டி போன்ற உறவுகள் உண்டாகின்றன: இப்போது தான் சிக்கலான உறவுகள் ஏற்படுகின்றன.

இவற்றில் ஒரு உறவு பாதிக்கப்பட்டால் மற்றெல்லா உறவுகளும் பாதிக்கப்பட்டுவிடும்.

**ஒரு தீப்பொறி காட்டையே கொளுத்தும்:-** மருமகளைப் பற்றி தன் மகனிடம் குறை கூறினால், மகன் அவர் மனைவியைக் கடிந்து கொள்வார். உடனே புருஷன் - மனைவி உறவு பாதிக்கப்படும். மனைவி கோபமடைந்து, மாமியார் தானே இதற்குக் காரணம் என்று நினைத்து, மாமியாருடன் சண்டை போட ஆரம்பித்து விடுவாள். தன் மனைவிக்கு ஆதரவாக மாமனார் வந்து விடுவார். பிள்ளைகள் தாய் பக்கமோ, தகப்பன் பக்கமோ, தாத்தா - பாட்டி பக்கமோ சேர்ந்து கொள்வார்கள். ஆக மொத்தம் மாமியார் மகனிடம் கொடுத்த ஒரு புகார் குடும்பத்தில் பெரிய புயலையே உண்டாக்கிவிடும்.

வயதானவர்கள் வீட்டிலிருந்தால் இப்படித்தான் சண்டை இருக்கும். இருந்து விட்டுப் போகட்டும் என்று கவலையீனமாக இருப்பதும் சரியில்லை. அதற்குமாறாக ஒவ்வொரு பிரச்சனையையும் முக்கியப்படுத்தி வீட்டை ஒரு யுத்தக்களமாக மாற்றுவதும் நல்லது அல்ல.

**மாமியார்-மருமகள் உறவுகள்:-** நல்ல ஆவிக்குரிய குடும்பத்திலும் மாமனார் - மாமியார் உறவு வரும்போது பாதிப்பு ஏற்பட்டு விடுகிறது. தன் பிள்ளைகளை நடத்துவதைப் போல் மருமகளை நடத்த முடிவதில்லை. மருமகளுக்கும் தன் அம்மா விடம் நடந்து கொள்வதைப் போல் நடந்து கொள்ள முடிவதில்லை.

மாமியார் - மருமகள் உறவு மிகவும் எளிதில் பாதிப்புக் குட்படும் தன்மையுடையது. இதில் கவனம் இல்லையென்றால் குடும்பம்கட்டப்படுவது மிகவும்கஷ்டம். 'மாமியார் உடைத் தால் மண்குடம், மருமகள் உடைத்தால் பொன்குடம்' என்ற தமிழ் பழமொழி, மாமியார் - மருமகள் பிரச்சனை எவ்வளவு பிரபல்யமானது என்பதைக் காட்டுகிறது.

**திரும்பிப் பாருங்கள்:-** இன்றைய மாமனார் - மாமியார் இருபது முப்பது ஆண்டுகளுக்கு முன், புதுமணத் தம்பதி களாக இருந்த காலத்தை கொஞ்சம் திரும்பிப் பார்க்க வேண்டும்.

**ராக்கிங்:-** கல்லூரிகளில் கல்வியாண்டின் ஆரம்பத்தில் புதிதாக சேர்ந்த மாணவ - மாணவிகளை, மூத்த மாணவ - மாணவிகள் ராக்கிங் (பலவிதமாக கேலி, பரிகாசம் செய்வது) செய்வார்கள். ஆரம்ப சில மாதங்கள் இளம் மாணவர்களை மூத்த மாணவர்கள் படாதபாடு படுத்தி விடுவார்கள்.

இரண்டு ஆண்டுகளில் ராக்கிங் பண்ணப்பட்ட இளம் மாணவர்கள், மூத்த மாணவர்களாகி விடுவார்கள். இப் போது தாங்கள் ராக்கிங் செய்யப்பட்டதற்குப் பதிலாக, வட்டியும் முதலுமாக இளம் மாணவர்களை ராக்கிங் செய் வார்கள். இது அப்படியே வருடாவருடம் தொடரும்.

**இன்று கொடுமைபடுத்தப்படுகிறார்கள்:-** இதே போல் நமது குடும்பங்களிலும், தொண்டு தொட்டு நடைபெறு கின்றன. திருமணம் முடிந்து, மகனும் மருமகளும் புதுமணத் தம்பதியினராக வருகிறார்கள். வீட்டில் மாமனார் - மாமியார்

கொடுமை படுத்துகிறார்கள். அராஜகம் நடைபெறுகிறது. எப்படியோ அக்காலம் கடந்து விடுகிறது.

**நாளை கொடுமைப்படுத்துகிறார்கள்:-** இப்போது கொடுமைக்குள்ளான புருஷன் - மனைவி, மாமனார் - மாமியார் ஆகிறார்கள். இப்போது தங்கள் திறமையைக் காட்ட ஆரம்பிக்கிறார்கள். மகனையும் - மருமகளையும் படாதபாடு படுத்துகிறார்கள். இப்படியே சந்ததி சந்ததியாக நடந்து வருகிறது.

இதனை ஆவிக்குரியவர்கள் சிந்திக்க வேண்டும். மாமியார் - மருமகள் சண்டைக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்.

**அன்று உங்கள் நிலை:-** அருமையான அம்மா, நீங்கள் மருமகளாக இருந்த காலத்தில், உங்கள் மாமியார் உங்களைக் கொடுமை படுத்தின போது, உங்கள் மனம் எவ்வளவு வேதனை பட்டது! எவ்வளவு கண்ணீர் வடித்தீர்கள். மாமியார் இப்படி காரணமில்லாமல் திட்டுகிறார்களே என்று எவ்வளவு வியாக்குலப்பட்டீர்கள்! உங்கள் புருஷரிடமும், உங்கள் பெற்றோரிடமும் எப்படி அழுகையோடு முறையிட்டீர்கள்.

**இன்று மருமகள் நிலை:-** கொஞ்சம் நினைவு படுத்தி பாருங்கள். அதே போல்தான் இப்போது உங்கள் மருமகளுடைய மனமும் வேதனை படும். உங்களைப் போன்று அவர்களும் இப்போது மனக்கிலேசப்படுவார்கள். துக்கப்பட்டு அழுவார்கள்.

அன்று உங்கள் மாமியார் உங்களை எவ்விதம் நடத்த வேண்டும் என்று நீங்கள் விரும்பினீர்களோ, அதுபோல இப்போது நீங்கள் உங்கள் மருமகளை நடத்துங்கள்.

இயேசு கிறிஸ்துவும் இதைத்தான் சொல்லியிருக்கிறார்.

''ஆதலால், மனுஷர் உங்களுக்கு எவைகளைச் செய்ய விரும்புகிறீர்களோ, அவைகளை நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்; இதுவே நியாயப்பிரமாணமும் தீர்க்க தரிசனங்களுமாம்'' (மத்தேயு 7:12).

இன்றைய ஆவிக்குரிய மாமனர்-மாமியார் இப்படி செய்தால், உங்கள் மகனும்-மருமகளும் அவர்கள் காலத்தில், அவர்களும் இவ்விதம் நன்மை செய்வார்கள்.

**கிரியைக்கேற்ற பலன்கள்:-**

மருமகளும் மாமனர்-மாமியாரை, அப்பா அம்மாவாக கருதி. கனம்பண்ணி மரியாதை கொடுத்து நடத்தவேண்டும். எதிர்த்துப் பேசாமல் பொறுமையுடன் இருந்து சகித்துக் கொள்ள வேண்டும். நீங்கள் மாமனர்-மாமியாராகும் போது, உங்கள் மருமகள் உங்களை அன்புடனும், மரியாதையுடனும் நடத்துவார்கள்.

''மனுஷன் எதை விதைக்கிறனே அதையே அறுப்பான்'' (கலா. 5:7).

அதே சமயத்தில் நாளெல்லாம் சகித்துக்கொண்டே இருப்பதும், நடைமுறையில் கூடாத ஒன்று.எத்தனை நாட்கள் மருமகள் பாதுகாப்பு விளையாட்டு விளையாட முடியும். தாக்குதல் ஆட்டம் ஆட ஆரம்பித்துவிட்டால் ஒரே கலாட்டாதான். அணுகுண்டு வெடித்ததுபோல் ஆகிவிடும். இந்நிலை வரும் அளவுக்கு நடந்து கொள்ளக்கூடாது. இதற்குப் பெரியவர்கள் ஒத்துழைப்பு கொடுக்க வேண்டும்.

குடும்ப உறவுகள் பாதிக்கப்படாமல் பாதுகாக்க, மாமியார்கள் கவனமாக இருக்க வேண்டியது அவசியம். மருமகளும் ஒத்துழைக்க வேண்டும்.

**தர்மசங்கடமான புருஷன்:-**

புருஷனுக்கு (மாமியாருக்கு மகன்) இவ்வித சூழ்நிலை தர்மசங்கடமான சூழ்நிலையாகும். ஒருபக்கம் அப்பா-அம்மா, இன்னொரு பக்கம் மனைவி, என்ன செய்வது என்று தெரியாமல் திண்டாடுவோர் சிலர், சில வேளைகளில் பொறுமை இழந்து இருவரையும் கடிந்துகொள்வார்.

**அம்மா பக்கமா? மனைவி பக்கமா?**

அம்மா சார்புள்ளவராக இருந்தால் மனைவியைக் கண்டித்து அடக்குவார். மனைவி சார்புள்ளவராக இருந்

தால் அம்மாவை அதட்டி அடக்குவார். எப்படி செய்தாலும் உறவு பாதிக்கப்பட்டது பாதிக்கப்பட்டதே. குழப்பம் உண்டானது உண்டானதே. குடும்பத்தில் எல்லாரும் சமாதானம் இழந்து சங்கடத்துக்குள்ளாவார்கள்.

ஆகையால் இவ்வித சூழ்நிலைகளை சமாளிக்க விவேகமும் ஞானமும் தேவை. இவ்வித சூழ்நிலையில் புருஷர்கள் தவறு செய்துவிடாமல் மிக லாவகமாக சூழ்நிலையை கையாள வேண்டும்.

**பெற்றோருக்குப் போதிக்கக்கூடாது:-**

அப்பா-அம்மாவுக்கு புத்தி சொல்லி, போதித்து அவர்களை மாற்ற நினைப்பது நல்லது அல்ல. அவர்கள் செய்வது, பேசுவது, நடந்து கொள்வது எல்லாம் பெரும்பாலும் தவறாகவே இருக்கும். பெற்றோரைக் கனம் பண்ண வேண்டியது.

ஆகையால் புருஷர்களே, குடும்ப பிரச்சனையில் பெற்றோர் சம்பந்தப்படும் போது மிக ஜாக்கிரதையோடு நடந்து கொள்ள வேண்டும். பெற்றோர்க்குப் புத்தி சொல்லி போதிப்பது நல்லது அல்ல.

**எனது அனுபவம்:-**

எனது ஆரம்ப காலத்தில் சில சமயங்களில் என் பெற்றோருக்கு சில காரியங்களை குறித்து புத்தி சொல்லி எழுதினேன். நான் எழுதின காரியங்கள் சரியானவைகளே. எனினும் மகன் என்ற நிலையில் நான் புத்தி சொன்னது அதிக பிரசங்கித்தனம். பெற்றோரை கனவீனப்படுத்தும் செயலாகும்.

அப்படி கடிதம் எழுதின போதெல்லாம் எனக்கு பாதிப்பு ஏற்பட்டது. தேவனுல் சிட்சையும் கிடைத்தது. பின்பு நான் உணர்ந்து கொண்டேன்.

**உங்களுக்கு படிப்பினை:-**

ஆகையால் சகோதரரே, உங்கள் பெற்றோரை கனம் பண்ணுங்கள். அவர்களை கடிந்து கொள்ளாதிர்கள். மரி

யாதை குறைவாகப் பேசாதீர்கள். அவர்கள் தவறு செய்தாலும் பொறுமையாயிருங்கள். ஆலோசனையாக வேண்டுமாயின் தாழ்மையோடு கூற முயற்சியுங்கள்.

**எல்லா உறவையும் காக்க:-**

பெற்றோரைக் கனம்பண்ணவேண்டும் என்பதற்காக மனைவியோடுள்ள உறவைப் பற்றி கவலையில்லாமல் நடந்து கொள்ளக் கூடாது. பெற்றோர் உறவை பாதுகாக்க நமக்குத் துணையாக தேவன் தந்துள்ள மனைவியின் உறவை பலி செலுத்த முடியாது. கூடாது. ஆகையால் எல்லா உறவுகளையும் ஒரே சமயத்தில் கட்டி பாதுகாக்க வேண்டியதாயிருக்கிறது.

**பேரன் பேத்தி:-**

தாத்தா-பாட்டி இருக்கும் வீட்டில் பெற்றோர் பிள்ளைகளை கண்டிப்பாக வளர்க்க முடியாமல் போய்விடும். இப்போதைய தாத்தா-பாட்டி நாம் சிறுபிள்ளைகளாக இருக்கும்போது நம்மைப் பெற்றோர் என்ற நிலையில் கண்டிப்பாக வளர்த்திருப்பார்கள்.

ஆனால் தாத்தா-பாட்டி நிலையை அவர்கள் அடைந்து விட்டால், பேரன் பேத்திகளை கண்டிக்க விடுவதில்லை. அடிக்க விடுவதில்லை.

**பிள்ளைகள் தப்பிக்கொள்வார்கள்:-**

நாம் நமது பிள்ளைகளைக் கண்டிக்கும்போது அவர்கள் குறுக்கே வந்து தடுப்பார்கள். நம்மைக் கடிந்துகொள்வார்கள். பிள்ளைகளுக்காக பரிந்து பேசுவார்கள். எப்படியோ பிள்ளைகள் தாத்தா-பாட்டி தயவினால் தப்பித்துக் கொள்ளுவார்கள்.

**பிள்ளைகள் கெட்டுப்போவார்கள்:-**

நாமோ வேத வசனத்தின்படி பிள்ளைகளைக் கண்டிக்க முடியாமல் திண்டாட வேண்டியதாயிருக்கும். ஆகையால் புருஷனின் பெற்றோர் உறவு இருக்கும்போது பெற்றோர்

பிள்ளைகள் உறவு பாதிக்கப்படும். தாத்தா-பாட்டி தங்கள் பக்கம் இருப்பதை அறியும் பிள்ளைகள் தவறு செய்தாலும், தண்டனைக்குத் தப்பிக் கொள்ளலாம் என்ற துணிவினால் கெட்டுப்போக வாய்ப்பு உண்டாகிறது. பெற்றோர்க்குக் கீழ்ப்படியாமல் போகிறார்கள்.

ஆகையால் இவ்வித பாதிப்பு உண்டாகாமல் தாத்தா-பாட்டி கவனித்து நடக்கவேண்டும்.

**ஓர் வேண்டுகோள்:-**

தாத்தா-பாட்டி அவர்களே, நீங்கள் உங்கள் காலத்தில் பிள்ளைகளாகிய எங்களைக் கண்டித்து வளர்த்தது போல, நாங்களும் எங்கள் பிள்ளைகளைக் கண்டித்து, சிட்சித்து, போதித்து வளர்க்க வேண்டும் அல்லவா? பெற்றோர் என்ற எங்கள் பிள்ளைகளுக்கு (உங்கள் பேரப்பிள்ளைகளுக்கு) நாங்கள் உத்திரவாதிகளும், கணக்கு கொடுக்க வேண்டியவர்களாயிருக்கிறோமே. ஆகையால் எங்கள் பிள்ளைகளை வேத வசனத்தின்படி வளர்க்க எங்களுக்கு உதவி செய்யும்படி தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறோம்.

**எத்தனை பதவி:-** ஒரு குடும்பத்தின் தலைவன் முதாவது தன் மனைவிக்கு புருஷனாக இருக்க வேண்டும். பிள்ளைகளுக்குத் தகப்பனாக இருக்க வேண்டும். பெற்றோர்க்கு மகனாக இருக்க வேண்டும். உடன் பிறந்தவர்களுக்கு அண்ணனாகவும், தம்பியாகவும் இருக்க வேண்டும். மாமனார் மாமியாருக்கு, மருமகனாக இருக்க வேண்டும். தன் மனைவியின் சகோதர, சகோதரிகளுக்கு, மைத்துனராகவும், கொழுந்தனாகவும் இருக்க வேண்டும்.

இவையெல்லாம் சித்தப்பா, பெரியப்பா, மாமா, தாய் மாமா என்ற நிலையெல்லாம் ஒரு குடும்பத் தலைவன் செயல்பட வேண்டியிருப்பதால், ஞானம் மிகவும் அவசியம். பாருங்கள், ஒரு மனிதனுக்கு எத்தனை பதவிகள்!

அதே சமயத்தில் குடும்பத்தலைவனும் மிக ஞானமாக நடத்துக் கொள்ளவேண்டும். பெற்றோர்க்கு முன் பிள்ளை

களைக் கண்டிக்கக் கூடாது. நாம் பிள்ளைகளைச் சிட்சிக்கும் போது வயதான நம் பெற்றோர் மனம் வேதனைபடும். அதே சமயத்தில், பிள்ளைகளை பிரம்பினால் அடிக்காமல் இஷ்டத்திற்கும் விடமுடியாது. ஆகையால் தாத்தா-பாட்டி கண்ணில் படாமல், அவர்கள் காதுக்கு எட்டாமல், மிக ஞானமாக நம் கடமைகளை நிறைவேற்ற வேண்டும்.

நாம் உண்டு, நம் பிள்ளைகள் உண்டு என்று எதையும் கண்டு கொள்ளாமல் கண்ணை மூடிக்கொண்டு இருந்துவிட முடியாது. எல்லா உறவுகளையும் கட்டி காக்க வேண்டும்.

**விசேஷ திறமை தேவை:-** இவ்விதமான சிக்கல் நிறைந்த உறவுகள் பாதிக்கப்படாமல் பாதுகாப்பதற்கு அன்பு, ஞானம், பொறுமை, சகிப்பு, அரவணைப்பு, சமாளித்தல் போன்ற தன்மைகள் தேவை.

**மனைவிக்கு பல பதவிகள்:-** இதே குடும்பத் தலைவி முதலில் புருஷனுக்கு மனைவி, பிள்ளைகளுக்குத், தாய். பின்பு மருமகள், மகள், அக்காள், தங்கை, அண்ணி, நாத்தனார், பெரியம்மா, சித்தி, அத்தை போன்ற பதவிகள் வகித்து எல்லா உறவுகளையும் பாதுகாக்க வேண்டும். பாருங்கள், ஒரு பெண்ணுக்கு எத்தனை பதவி!

குடும்பத் தலைவி எத்தனை பதவிகளையும் வகித்து எல்லா உறவுகளையும் பாதுகாக்க வேண்டும். புருஷனுக்கும்-மனைவிக்கும் எவ்வித சிக்கல் நிறைந்த உறவுகளைப் பாதுகாக்க வேண்டியதாயிருக்கிறது. அதே சமயத்தில் குடும்பத் தலைவர்களைப் பார்க்கிலும் குடும்பத் தலைவிக்குத்தான் அதிக சிரமம்.

**புருஷனுக்கு தப்பிக்க வழி உண்டு:-**

குடும்பப் பிரச்சனையிலிருந்து தப்பித்துக்கொள்ள புருஷர்கள், காலையில் வீட்டை விட்டு வெளியேறி இரவில் வீட்டுக்குத் திரும்பிவந்தால் போதும். (இது சிறந்த புருஷனுக்கு அழகு இல்லை). ஆணாக இருப்பதால் வீட்டை விட்டு

போக முடிகிறது. எங்கேயாவது சுற்றி நேரத்தைக் கழித்து விட்டு வரலாம். அன்றூடம் பல பிரச்சனைகளிலிருந்து தப்பித்துக்கொள்ள ஆணுக்கு பல வழிகள் இருக்கின்றன. 'எப்படியோ போகட்டும்' என்று சொல்லி எங்கேயாவது கிளம்பி விடலாம். புயல் ஓய்ந்தபின் திரும்பி வரலாம். ஆனால் பாவம் மனைவிகள்!

**மனைவிகளோ தப்ப முடியாது:-**

பெண்கள் ஆண்களைப் போல் பிரச்சனையைத் தவிர்க்க வீட்டை விட்டு போக முடியாது. காலையிலிருந்து இரவு வரை வீட்டில்தான் அடைபட்டிருக்க வேண்டும். (ஒரு சில விதிவிலக்கு இருக்கலாம்) வீட்டின் நடை முறை காரியங்கள் எல்லாம், பெண்கள் பொறுப்பில் இருப்பதால் எல்லா பக்கத்திலிருந்தும் நெருக்கப்படுவார்கள். மத்தளத்திற்கு இருபக்கம் அடி என்றால், மனைவிக்கு எல்லா பக்கமும் அடி.

**மனைவிகள் பாவம்:-** ஆகையால் மனைவி பதவிலிருப்பவர்களுக்கு விசேஷித்த ஞானம் அவசியம். மனைவியாயிருக்கிறவர்கள் அதிக பரிதாபத்திற்குரியவர்களே. புருஷர்கள் இதனை கவனித்து மனைவியின் மீது பரிதாபப்படுக.

நான் கூறும் கூற்று நகைச்சுவையாக தோன்றினாலும், இவ்விஷயங்கள் குடும்பங்களில் ஏற்படும்போது கண்ணீரும், கூக்குரலும், வேதனையும், அழுகையும், புலம்பலும், கவலையும், குழப்பமும் உண்டாகின்றன.

சில சமயங்களில், சில காலம் உறவு முறைகள் எல்லாம் ஒன்று கூடி விட்டால் அந்தச் சமயங்களில் குடும்ப உறவுகளை சமாளிப்பது அதிக சிரமமாகிவிடும்.

**திறமை தேவை:-** இந்தியாவின் பிரதம மந்திரியாக இருந்து பிரச்சனையை தீர்ப்பதைக் காட்டிலும், இச்சூழ்நிலைகளில் குடும்பத் தலைவராக; தலைவியாக இருந்து சமாளிப்பது மிக கஷ்டம். சிக்கல் உறவு இல்லாத சிறு குடும்பத்தினர் பாக்கியவான்கள் என்று சொல்ல தோன்றுகிறதோ! இல்லை! சிக்கல் நிறைந்த குடும்பத்தை மிக திறமையாக நடத்தி செல்

கிறவர்கள் தான் பாக்கியவான்கள். அவர்கள் தான் பரலோகத்தில் பலன் பெறுவார்கள்.

**கிருபை தேவை:-:-** இவ்வளவு சிக்கல் நிறைந்த சூழ்நிலையில் நம் வீட்டைக் கட்ட வேண்டியிருப்பதால்தான் ''கர்த்தர் வீட்டைக் கட்டாராகில், அதை கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா" (சங். 127:1) என்று சொல்லப்பட்டிருக்கிறது. குடும்பத்தைக் கட்ட தேவனின் அளவற்ற கிருபை நமக்கு அவசியம்.

**உறவுகள் தேவனால் உண்டானது:-** நம் குடும்பத்திலுள்ள ஏராளமான உறவுகள் தேவனால் ஏற்படுத்தப்பட்டவை. வேதத்தில் பழைய ஏற்பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும் பல உறவின் முறைகள் இடம் பெற்றிருக்கின்றன. ஆகையால், தேவனால் ஏற்படுத்தப்பட்ட குடும்பத்தில் தேவனால் ஏற்படுத்தப்பட்ட பல உறவுகள் இருப்பதால், இவ்வுறவுகளின் மத்தியில் சிறப்பாக குடும்பத்தைக் கட்ட தேவன் உதவி செய்வார்.

நாம் உறவுகளை அலட்சியம் செய்யக் கூடாது. ஏனென்றால் உறவுகள் தேவனால் வேதத்தில் அங்கீகரிக்கப்பட்டுள்ளன.

**உறவுகள் நல்லதே:-** தேவன் உண்டாக்கியவையெல்லாம் நல்லவைகளே. தேவன் நல்லவர். ஆகையால், தேவன் ஏற்படுத்திய உறவுகள் எல்லாம் நல்லவைகளே. உறவுகளைக் கையாள வேண்டிய விதத்தில் கையாண்டால், உறவுகளினால் உண்டாகும் நன்மைகளை நாம் அனுபவிக்க முடியும்.

உறவுகளைக் காத்து குடும்பத்தை நடத்த விசேஷித்த தேவ அன்பு, தேவ ஞானம், நீடிய பொறுமை, சகிப்பு போன்ற தெய்வீக குணநிசயங்கள் நமக்குத் தேவை.

குடும்பத்திலுள்ள பெரியவர்களைக் கனம் பண்ணி, அவர்களை மதித்து, மனைவியினிடத்தில் அன்பு கூர்ந்து, பிள்ளைகளைச் சரியாக நடத்தி, பிற உறவின் முறையார்களை அனுசரித்து, சமாதானத்துடன் குடும்ப வாழ்க்கை நடத்த விசேஷித்த தேவ கிருபை அவசியம். விசேஷ திறமை அவசியம்.

உலகிலுள்ள பொறுப்புள்ள வேலைகளுக்கு ஆட்களை நிய மிக்கும் போது, பரீட்சை வைத்து திறமையைச் சோதித்து பார்த்து,தேர்வு செய்து பொறுப்பை நிறைவேற்ற வேண்டிய பயிற்சி கொடுக்கிறார்கள்.

**குடும்பம் நடத்த போதனை:-** உலகிலேயே அதிக பொறுப் புள்ளதும், மிக முக்கியமானதுமான வேலை புருஷன்-மனைவி வேலை ஆகும். ஆனால் இப் பொறுப்புள்ள வேலைக்கு திறமை இருக்கிறதா என்று சோதிப்பது இல்லை. பயிற்சி கொடுப்பது இல்லை. போதிப்பது இல்லை. சபைகளிலும் குடும்ப சத்தி யங்கள் அதிகமாக போதிக்கப்படுவதில்லை திருமணம் முடிந் ததும் பொறுப்புகளை தலைமேல் வைத்து கட்டிவிட வேண் டியது அவ்வளவுதான்.

இப்படியிருந்தால் குடும்பங்கள் எங்கே கட்டப்பட முடியும்! ஆகையால்தான் நம் குடும்பங்கள் சரிவர கட்டப் படுவதில்லை. குடும்ப உறவுகள் சிறப்பாக இருப்பதில்லை.

பிரியமானவரே, நாம் மனந்திரும்புவோமாக. நம் நிலையை உணர்வோமாக. சரி செய்ய வேண்டியவைகளைச் சரி செய்வோமாக. சிறப்பான குடும்பங்களாக விளங்க, உறவுகளை பாதுகாக்க பிரயாசப்படுவோமாக! தேவையான பொறுமையைக் கடைப்பிடிப்போமாக. குடும்பம் கட்டப் பட சுயத்தைத் தியாகம் செய்வோமாக! பல காரியங்களில் விட்டுக் கொடுப்போம்.

தேவன் குடும்ப உறவுகளின் நலனைக் கருதி, வேதத்தில் எவ்வளவு குடும்பத்தைக் கட்டும் சத்தியங்களை எழுதிக் கொடுத்திருக்கிறார். புருஷன் - மனைவி - பிள்ளைகள் - பெற் றோர் - பெரியோர் போன்றோரின் குடும்ப ஸ்தானங்கள், கடமைகள், உத்திரவாதங்கள் ஆகியவை ஆவியானவரால் புதிய ஏற்பாட்டில் அதிக முக்கியப்படுத்தி கூறப்பட்டுள்ளது. இச்சத்தியங்களைக் கருத்தாய் கைக்கொண்டால், நம் குடும் பங்கள் நிச்சயமாக கட்டப்படும். உறவுகள் காக்கப்படும்.

"சிக்கல் நிறைந்த உறவுகளுள்ள சிறப்பான குடும்பம் என்று நம் குடும்பங்கள் அழைக்கப்படும்.

குடும்ப சத்தியங்களை முக்கியப்படுத்தி தேவன் வேதத்தில் எழுதி கொடுத்திருக்கும் போது, இன்று சபைகளும் ஆவிக்குரிய குடும்பங்களும் இச் சத்தியங்களை அலட்சியப் படுத்துவதால், குடும்பங்கள் தேவனால் அலட்சியப்படுத்தப் பட்டிருப்பதைப் போன்று தெரிகிறது. குடும்ப சத்தியங்களை கைக்கொள்ளும்படி மனந்திரும்புவோமாக.

**புருஷன் அல்லது மனைவியின் சகோதர சகோதரிகளின் உறவுகள்:-** புருஷன் அல்லது மனைவியின் சகோதர-சகோதரிகளின் உறவும் குடும்பத்தைக் கட்டுவதில் இடம் பெறுகின்றது. இவ்வுறவுகளும் சிக்கல் நிறைந்ததே-பாதிப்பை உண்டாக்கும் தன்மையுடையதே ஆகும்.

இவ்வித உறவுகளில்கூட மனைவியின் சகோதர சகோதரிகள் உறவினால் பெரும் பாதிப்பு உண்டாக வாய்ப்பு இருக்கிறது. இதுவே சிக்கலான உறவு ஆகும்.

புருஷனின் அக்காள் அல்லது தங்கை மனைவியை மாமியார்க்கு அடுத்தபடி கொடுமைப்படுத்தக்கூடிய தன்மையுடையவர்கள். புருஷன் தனது சகோதரிகளைக் கடிந்து கொள்ளவும் முடியாமல் ஆதரவு கொடுக்கவும் முடியாமல் திண்டாட வேண்டிய பல சூழ்நிலைகள் இவ்வுறவுகளில் உண்டு.

ஆகையால் இவ்வித உறவுகள் உள்ள குடும்பங்கள் மிக ஜாக்கிரதையோடு இருக்க வேண்டும். புருஷன் மிகக்கவனமாக நடந்து கொள்ள வேண்டும்.

இவ்வித உறவு முறையால் வித்தியாசமாக நடந்து கொள்ள காரணம் என்ன?

ஆணுக்குத் திருமணம் முடியும் வரை மகனாக, சகோதரனாக மட்டும் இருக்கிறார். தன் விஷயங்களையெல்லாம் தாய் தந்தையோடும், சகோதர சகோதரிகளோடும் பகிர்ந்து கொள்ளுகிறார். வெளியே போனால் பெற்றோருடன், உடன் பிறந்தவர்களுடன் போகிறார். சம்பளத்தில் பெரும் பகுதியை வீட்டிற்குச் செலவு செய்கிறார்.

திருமணம் முடிந்த பின்பு மனைவியோடு அதிக காரியங்களைப் பகிர்ந்து கொள்ளுகிறார். மனைவியோடுதான் வெளியே போகிறார். சம்பளத்தில் பெரும் பகுதி மனைவி-பிள்ளைகளுக்குச் செலவாகிறது.

**உங்களுக்குப் பெரிய நஷ்டம்:** ஆகையால் தங்களுக்கு மட்டும் என்று இதுவரை இருந்த அந்தஆணின் கவனம், இப்போது எங்கேயோ இருந்து வந்த ஒருத்தியின் மீது திரும்பி விட்டதே என்று நினைத்து தங்களை அறியாமலே அந்த மனைவியின் மீது பொறாமையும், எரிச்சலும், கோபமும் உண்டாகிறது. தங்களுக்கு ஏற்பட்டுள்ள நஷ்டத்தைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. உண்மையான நிலையை ஏற்றுக் கொள்ள முடிவதில்லை.

**இப்போது குடும்பத் தலைவன்:** ஆவிக்குரியவர்கள் இச்சூழ்நிலையில் மிகக் கவனமாக இருக்க வேண்டும். திருமணம் முடிந்தபின் வேத வசனத்தின்படி மகன் அல்லது சகோதரன் ஒரு தனிக் குடும்பத்திற்கு தலைவனாகி விடுகிறான். இப்போது அவன் பெரும்பாலான கவனத்தைத் தன் குடும்பத்தைக் கட்டுவதில் செலவழிக்க வேண்டும். இது நியாயம்.

''புருஷன் தன் தகப்பனையும், தன் தாயையும் விட்டு தன் மனைவியோடே இசைந்திருப்பான்; அவர்கள் ஒரே மாம்சமாயிருப்பார்கள்'' (ஆதி. 2:24; மாற்கு 10:7,8).

**பெற்றோர் உதவ வேண்டும்:** இவ்விதமான தேவதிட்டத்திற்கு புருஷனின் பெற்றோரும், உடன் பிறந்தவர்களும் விட்டுவிடவேண்டும். தேவ திட்டம் குடும்பத்தில் நிறைவேற நீங்கள் ஒதுங்கியிருந்து ஒத்துழைக்க வேண்டும். இல்லையெனில் கர்த்தர் குடும்பத்தை கட்ட முடியாது.

கர்த்தர் வீட்டைக் (குடும்பத்தைக்) கட்டவேண்டுமாயின் கர்த்தருடைய திட்டப்படி வீடு இருக்க வேண்டும். 'கூட்டுக் குடும்பம்' முறை வேத முறை அல்ல-தேவ திட்டமும் அல்ல. இது மனிதனின் திட்டம். நீங்கள் தேவ திட்டத்திற்கு ஒப்புக்கொடுங்கள்.

**மிக முக்கியமான உறவு:** இவ்வித சிக்கல் நிறைந்த உறவுகளில் மிக முக்கியமான உறவு புருஷன் மனைவி உறவு ஆகும். குடும்ப வாழ்க்கை என்னும் வண்டிக்கு அச்சாணி போன்றது புருஷன்-மனைவி உறவாகும். குடும்பமாகிய கட்டடத்திற்கு அஸ்திபாரம் போன்றது இவ்வுறவாகும்.

மெயின் சுவிட்சு போன்றது புருஷன்-மனைவி உறவாகும். ஒரு மின் இணைப்புக்கு மெயின் சுவிட்சு மிக முக்கியம். எல்லா விதமான இணைப்புகளையும் கட்டுப்படுத்துவது மெயின் சுவிட்சு. இதேபோல் குடும்பத்தின் பலஉறவுகளுக்கு புருஷன் மனைவி உறவு மிக முக்கியமானது. குடும்பத்தின் எல்லா உறவுகளையும் கட்டுப்படுத்துவது புருஷன் - மனைவி உறவாகும்

**பாதிக்கப்படக்கூடாது:** புருஷன்-மனைவி உறவு பாதிக்கப்படுமானால் எல்லா உறவுகளும் பாதிக்கப்படும். ஆகையால் புருஷன்-மனைவி உறவு பாதிக்கப்படாமல் பாதுகாக்க வேண்டியது மிக முக்கியம். இவ்வுறவு எப்போதும் உறுதியாக இருக்க வேண்டும்.

புருஷன்-மனைவி உறவு உறுதியானதாக இருப்பதற்குக் குடும்பத்திலுள்ள அனைவரும் ஒத்துழைக்க வேண்டும். புருஷனும் மனைவியும் இந்த விஷயத்தில் கவனமாக இருக்க வேண்டும்.

புருஷன்-மனைவி உறவு மட்டும் மிக உறுதியாய் இருக்குமாயின், இதனை மையமாகக்கொண்டு இயங்கும் மற்ற எல்லா உறவுகளையும் இழுத்துப் பிடித்து இயக்க முடியும்.

ஒரு சரீரத்தின் இருதயமும் மூளையும் போன்றது புருஷன் மனைவி உறவு. இருதயமும் மூளையும் தான் சரீரத்தின் அனைத்து உறுப்புகளையும் ஒருங்கிணைத்து இயக்குகின்றன. இதேபோல் புருஷன்-மனைவிதான் குடும்பத்தின் மற்ற எல்லா உறவுகளையும் ஒருங்கிணைத்து இயக்க வேண்டும்.

புருஷனுக்கும் மனைவிக்கும் இடையே நல்ல கருத்து ஒற்றுமையும் புரிந்து கொள்ளுதலும் இருக்க வேண்டும்.

மற்ற உறவுகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து, புருஷன்-மனைவி உறவைக்குறித்து கவலையீனமாக இருப்பதால் இன்று அநேக குடும்பங்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றன.

அதே சமயத்தில் புருஷன் - மனைவி உறவைக் காத்துக் கொள்வதற்காக மற்ற உறவுகள் பாதிக்கவிடவும் முடியாது- கூடாது.மற்ற உறவுகளை பணயம் வைத்து உங்கள் உறவைக் காப்பாற்ற முயற்சிக்கக்கூடாது.

புருஷன்-மனைவி உறவின் பெலத்தினால், உங்கள் இருவர் இணைப்பின் பெலத்தினால் மற்ற எல்லா உறவுகளின் இணைப்பையும் பிடித்து சமநிலையில் வைத்துக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்தால் உறவுகளிடையே நல்ல சமநிலை இருக்கும்.

குடும்பத்தைக்கட்ட நமக்கு அதிக பெலன் அவசியம். கிறிஸ்துவினிடத்திலிருந்து பெற்றுக் கொள்வோம்.

மனைவிகளே, உங்கள் புருஷர்களுக்குச் செய்ய வேண்டிய கடமையை சரியாக செய்ய வேண்டும். பிள்ளைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் சரியாக செய்ய வேண்டும். மாமனார் - மாமியாரைக் கனம்பண்ணி, அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்ய வேண்டும். புருஷனோடு பிறந்தவர்களை நேசித்து, அவர்கள் உறவையும் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

முடிவுரை:- குடும்பத்திலுள்ள ஒவ்வொரு நபரும் அவரவர் நிலையில் சரியாக இருந்து கொண்டு, மற்ற உறவுகள் உங்கள் உறவினால் பாதிக்கப்படாமல் இருக்க என்ன தியாகம் செய்ய வேண்டுமானாலும் அதைச் செய்து, எப்படியாவது அனைத்து உறவுகளும் ஒருங்கே இணைப்பில் சரியாக இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

நீங்கள் தீர்மானம் எடுத்தால் கர்த்தர் உங்களுக்கு உதவி செய்வார்.

அத்தியாயம் 20

# மருமகள்களுக்கு ஒரு ஆலோசனை!

பலசிறிய குடும்பங்கள் சேர்ந்து ஒரே முழுக்குடும்பமாகக் கர்த்தருக்குள் மாறுகிறது. ஒவ்வொரு சிறிய குடும்பமும் ஆவிக்குள் ஜீவித்து சாட்சியாக விளங்கினால், கர்த்தருடைய நாமம் அதிகமாய் மகிமைப்படும் என்பதற்குச் சந்தேகமே இல்லை.

மருமகள், மாமியார் என்ற இரண்டு பேரும் ஒற்றுமையாக இருக்கும் குடும்பங்களின் மூலமாய், கர்த்தர் நாமம் அதிக மகிமைப்படுகிறது. ஒரு சிறந்த மருமகளுக்கு எடுத்துக் காட்டாக வேதம் கூறுவது ''ரூத் நகோமிதான்''. எனவே ரூத்தின் குணாதிசயங்களைக் கவனித்து, அதை நம் ஜீவியத்தில் கடைப்பிடிக்கும் போது கர்த்தர் நாமம் மகிமைப்படும்.

**1. உம்முடைய ஜனம் என்னுடைய ஜனம்:- ரூத் 1:16**

புதியதொரு சூழ்நிலையில் புதிய குடும்பத்தில் பிரவேசிக்கும் மருமகள், முதலாவது கைக்கொள்ள வேண்டிய காரியம் என்னவென்றால், ''உம்முடைய ஜனம் என்னுடைய ஜனம்'' என்ற ரூத்தின் பிரதிஷ்டைக்குள் வர வேண்டும். இந்தப் பிரதிஷ்டை முதலில் மிகவும் கடினமாய் இருக்கும். நமது ஜனத்தை மறந்து மாமியாரின் ஜனத்தை நேசிக்க வேண்டும். ஆனால் இன்றோ அநேக மருமகள்கள் தன் ஜனத்தையும், தன் உறவினர்களையும் கண்டால் அதிகமாகக் கவனிப்பார்கள். கணவரின் ஜனத்தைக் கண்டால் வெறுத்து ஒதுக்கி விடுகிறார்கள். கர்த்தரின் அன்பு உள்ளத்தில் இருக்குமானால், மாமியாரின் ஜனத்தை நேசித்து, அன்பு காட்டி, அரவணைத்து தியாகமாய் நடப்பீர்கள். தியாகமுள்ள தன்னலமற்ற நிலையில் நீங்கள் நடந்தால் கர்த்தர் நாமம் மகிமைப்படும். நீங்கள் ஆவியினால் நிறைந்திருப்பீர்களானால் ''உம்முடைய ஜனம் என் ஜனம்'' என்று சொல்லுவது மிக மிக எளிதாயிருக்

ஆம். ஒரு மருமகள் மாமியாரைப் பார்த்து ''உங்கள் உறவினர் வந்திருக்கிறார்கள்" என்று பிரித்துக் கூறி, வந்தவர்களை 'வாருங்கள்' என்று வரவேற்று உபசரிக்காத மருமகள்களும் இருக்கிறார்கள். அதே நேரத்தில் தன் ஜனம் வந்தால் ''வாருங்கள், வாருங்கள்" என்று வரவேற்று உபசரித்து ''அறுசுவை உண்டி" தயாரித்து அன்போடு கவனிக்கும் மருமகளும் இருக்கிறார்கள்.

நான் அன்போடு மருமகள்மார்களைக் கேட்டுக் கொள்வது என்னவென்றால் கணவரின் உறவினர்களை அன்போடு கவனிப்பதோடு உங்கள் ஜனத்தையும் கவனியுங்கள். அப்போது கர்த்தர் உங்களை அதிகம் ஆசீர்வதிப்பார். சில மருமகள்கள் விவாகம் ஆனவுடன், கணவரைக் கையில் பிடித்துக் கொண்டு தனிக்குடித்தனம் போய் விடுகிறார்கள். அதோடு மட்டுமல்ல, தன் ஜனம் அனைத்தையும் தன் வீட்டுக்கு வரவழைத்து, தன்னோடு வைத்துக் கொண்டு சந்தோஷமாய் இருக்கின்றனர்.

மருமகளின் சமையல் எப்படி இருக்குமென்று அறியாத மாமியாரும் இருக்கின்றனர். மாமியாருடைய வயிறு கொதிக்கும் படியால் நடந்து கொள்ளும் எந்த மருமகளும் கர்த்தரால் ஆசீர்வதிக்கப்படவே முடியாது. மாமியார் எவ்வளவு பொல்லாதவர்களாய் இருந்தாலும் அவர்களுக் குக்கீழ் படிந்து, அவர்களைக் கவனித்து, அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து ''உம்முடைய ஜனம் என் ஜனம்'' என்று சொல்லி கணவரின் உறவினர்களை நேசித்து, தியாகமாய் நடக்கும் போது கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார்.

சில மருமகள்கள் ''கணவருக்கு'' வேண்டியவற்றை மட்டும் கவனிப்பார்கள். கணவரோடு குடும்பத்தின் மற்ற அங்கத்தினர்களையும் கவனிக்க வேண்டும். எங்கள் வீடு, எங்கள் அம்மா, எங்கள் வீட்டு பழக்க வழக்கங்கள் என்று பெருமையாகப் பேசவே கூடாது, பிறந்தகத்தின் பெருமைகளைப் புகுந்த வீட்டில் பேசவே கூடாது. மாமியார் எவ்வாறு

உணவை தயாரிக்கிறார்களோ, அதைப்பார்த்து, அதைக் கற்று அதன்படி உணவு தயாரித்து, அதையே சந்தோஷத் துடன் உண்ண வேண்டும்.

''மனுஷகுமாரனும் ஊழியம் கொள்ளும் படி வராமல் ஊழியம் செய்யும்படி வந்தார்'' என்ற திருவசனத்திற் கேற்ப எப்பொழுதும் ''மாட்டுப்பெண்'' என்ற சொல்லிற் கேற்ப உழைக்க வேண்டும். ''உம்முடைய ஜனம் என்னு டைய ஜனம்'' என்பதை மறக்காமல் ஜீவிக்க வேண்டும். ஒரு நல்ல மருமகள் ''பட்டாம் பூச்சியைப் போல் பறந்து'' சுறு சுறுப்பாய் நடந்து விட்டு வேலைகளைச் செய்ய வேண்டும்.

கர்த்தருக்குள் அன்பான மருமகளே! நீ எவ்வளவு தான் ஓடி, ஓடி கணவன் வீட்டாரைக் கவனித்தாலும் உனக்கு நல்ல பெயர் கிடைக்கவில்லையா? கவலைப்பட வேண்டாம். கர்த்தர் உன்னைக் காண்கிறார். நீ கர்த்தருக்கு முன்னால் குற்ற மற்ற நிலையில் நிற்கலாமே! எனவே, எனக்கு அருமையான மருமகள்மார்களே! உங்களைத் தாழ்த்துங்கள். ஆவியினால் நிறைந்து குடும்ப வேலைகளைச் செய்யுங்கள்; கர்த்தர் கிருபை தருவார்.

**மாமியாரின் கனவு :-**

கிட்டத்தட்ட இருபத்தைந்து ஆண்டுகள் மகனை வளர்த்து, அவனுக்குத் திருமணம் பண்ணி மருமகள் வந்த வுடன் வீட்டுப் பொறுப்புகள் அனைத்தையும் மருமகளிடம் விட்டு, விட்டு ஜெபத்திலும், ஊழியத்திலும் தன் நேரத் தைக் செலவு பண்ணலாம் என்று மாமியார் கனவு காண்கி றார்கள், ஆனால் நடக்கிறதென்ன? விவாகமான நாளிலி ருந்து கணவனுடன் ''தேன் நிலவு'' சென்று பல மாதங்கள், சமயலறை எப்படி இருக்கும் என்று பார்க்காமல் ஊர் சுற்றும் மருமகள்களும் இருக்கின்றனர். மருமகனுக்குத் துணி துவைத்து, அவனுக்கு உணவு கொடுத்து, இளைப்பாறச் சற்று கூட நேரம் இல்லாமல் எந்நேரமும் வேலை செய்து கொண்டி ருந்தால் மாமியாரின் இருதயம் எப்படி இருக்கும்? ஒரு மாமியார், தன் மகனுக்குத் திருமணம் ஆகுமுன் என்னிடம்

பின் வருமாறு கூறினார்கள், ''எனக்கு மருமகள் வந்து விட்டால் அவள் எல்லா வேலைகளையும் பார்த்துக் கொள்வாள். நான் நன்றாக ஓய்வு எடுத்துக் கொள்வேன், எனக்கு மிகவும் உதவி செய்வாள், ''அவள் நல்லவள்'' என்று கூறினார்கள். அந்தோ பரிதாபம்! அந்த அம்மாவு டைய மருமகள், திருமணம் ஆனவுடன் கணவனைக் கையில் பிடித்துக் கொண்டு தன் தாயின் வீட்டிலேயே சென்று அங்கேயே இருந்துவிட்டாள். எப்போதாவது வந்து மாமியாயவரைப் பார்ப்பாள். கணவனின் கையைப் பிடித்த வுடனேயே தன் இஷ்டப்படி இயங்கும் கைப்பொம்மையாக மனைவிமார்கள் மாற்றிவிடுகின்றனர். மனைவியை நூற்றுக்கு நூறு பிரியப்படுத்தும் மகனைப் பார்க்கும்போது தாயின் இருதயம் துவண்டுவிடும். ஒரு நல்ல மருமகள் என்ற நற் பெயரைப் பெறவேண்டுமானால், மாமியாருக்கும்; குடும்பத்தி லுள்ள அனைவருக்கும் வேண்டிய எல்லா வேலைகளையும் செய்து. தன்னைத் தாழ்த்தி தியாகமனப்பான்மையோடு ஜீவிக்க வேண்டும். ஆரம்பத்தில் உங்களுக்கு நற்பெயர் ஏற்படாவிட்டாலும் நாட்கள் செல்ல, செல்ல உங்களைப் பற்றி குடும்பத்தினர் நன்றாக அறிந்துக் கொள்வார்கள்.

**நாத்தனார் :-**

நாத்தனார் என்றவுடனேயே புது மருமகள்கள் அவர் களுக்குப் பயந்து நடக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. எப் பொழுதும் நாத்தனார் மேல் அன்பு செலுத்தி அவர்களைக் கவனிக்க வேண்டும். உங்கள் நல்ல புடவைகளையும், நீங்கள் விரும்புகிற பொருட்களையும் நாத்தனாருக்குப் பரிசளிக்க வேண்டும். நீங்களே அன்பு காட்டவேண்டும். நாத்தனார் உங்களுக்கு ஒன்றும் கொடுக்காவிட்டாலும், நீங்கள் கொடுத்து உங்கள் அன்பை வெளிப்படுத்த வேண் டும். சில மருமகள்கள், கணவனுடன் சுற்றிக்கொண்டே இருப்பதால் நாத்தனாரிடமோ, மாமியாரிடமோ பேசவே நேரம் இருக்காது. இது மிகவும் வெறுக்கத் தகுந்த செயல். கணவரிடம் மூட்டிக் கொடுத்து நாத்தனாரைத்

திட்டவைக்கும் மருமகள்களும் இருக்கிறார்கள். நாத்தனாரின் இருதயம் எப்படி இருக்கும்? அது அண்ணியை ஆசீர்வதிக்குமா? மருமகள்கள், நாத்தனார் உங்களிடம் அன்பு கூர்ந்தாலும், அன்பு கூராவிட்டாலும், நீங்கள் அவர்களை நேசிக்க வேண்டும். அவர்களும் ஒரு நாள் உங்களைப்போல, மருமகள் ஆகி குடும்பப் பொறுப்பை ஏற்கும்போது உங்கள் அன்பை உணர்ந்து உங்களை நேசிக்க ஆரம்பிப்பார்கள்.

**குணசாலி :-**

ரூத் 3:11 நீ குணசாலி என்பதை என் ஜனமாகிய ஊரார் எல்லாம் அறிவார்கள். அன்பான சகோதரியே! ரூத்தின் குணத்தை ஊரார் எல்லாம் அறிந்திருந்தார்கள். உங்கள் குணத்தைப்பற்றி என்ன! ஒரு மாமியார் தன் மருமகளுக்கு வேண்டிய எல்லா வேலைகளையும் செய்து; பிள்ளைகளையும் பார்த்துக்கொண்டிருந்தாலும், மருமகளிடமிருந்து திட்டுக்கள் தான் கிடைக்குமே தவிர பாராட்டுகளல்ல. இப்படிபட்ட மருமகள்மார்கள் கர்த்தரை அணுகி, ரூத்தைப் போன்ற குணசாலியாக இருக்க கிருபை தாரும் ஆண்டவரே என்று கேட்க வேண்டும். ஒரு மாமியார் என்னிடம் பின்வருமாறு கூறினார்கள், ''அம்மா,எங்கள் வீட்டிற்கு ஒரு பேயைக் கொண்டு வந்திருக்கிறோம்" என்று கூறி அங்கலாய்த்தார்கள். வேறொரு மாமியார், ''அம்மா நாங்கள் ஒரு சனியனைக் கொண்டு வந்திருக்கிறோம்'' என்று கண்ணீரோடும் கூறினார்கள். மருமகள்மார்களே! சிந்தியுங்கள். குணசாலிகளாய் மாறுங்கள். நீங்கள் கர்த்தருக்குள் இருந்து வேத வசனங்களைத் தியானித்து, கர்த்தர் கிருபையைப் பெற்று ஜீவிக்கும்போது,குணசாலிகளாய் மாறுவீர்கள். போவாஸ் ரூத்தைப் பார்த்து 'நீ குணசாலி' என்பதை என் ஜனமாகிய ஊரார் எல்லாரும் அறிவார்கள் என்றார். இஸ்ரவேலின் தேவன் மகிமைப்பட்டார். மருமகள்மார்களே! நீங்களும் குணசாலிகளாய் மாறுங்கள்!! கர்த்தருக்கு மகிமை!

ரூத் 4:15-ல் உன்னைச் சிநேகித்து, ஏழு குமாரரைப் பார்க்கிலும் உனக்கு அருமையாய் இருக்கிறது. உன் மரு

மகள் அவனைப் பெற்றாளே! என்றார்கள். எத்தனை அருமையான சாட்சி. நகோமி மிகவும் கொடுத்து வைத்தவள். "ஏழு குமாரரைப் பார்க்கிலும்" அருமையாய் நேசிக்கிற ரூத் என்ற நல்ல சாட்சியைப் பெறுகிறாள். ஒரு குடும்பத்திலே தாயினால் அதிகம் நேசிக்கப்பட்ட மகன் இறந்துவிட்டான். உடனே மாமியார் மருமகளைப் பார்த்து, "மகளே! என் மகன் போய்விட்டான். எனவே உன் முகத்தைப் பார்த்து நான் ஆறுதல் அடையும்படி நீ என்னோடு கூட இருந்துவிடு" என்று கெஞ்சினார்கள். ஆனால் அந்த மருமகளோ முடியாது என்று மறுத்துத் தன் தாய் வீட்டுக்குப் போய் விட்டாள். மாமியார், மகனே போய்விட்டானே! என்று நினைக்காமல், மருமகள் மேலுள்ள அன்பினால் மருமகள் கூட இருக்கவேண்டும் என்று கெஞ்சினார்கள். அவளோ தாய் வீட்டுக்குப் போய் விட்டாள்.

மாமியார் மனம் உடைந்து அவர்களும் சீக்கிரம் மரித்துப் போனார்கள். ரூத் எப்படிதான் தன் மாமியாரிடம் அன்பு செலுத்தினாளோ தெரியவில்லை! ஊராரெல்லாம் போற்றும் படியாய் மாமியாரிடம் அன்பு செலுத்தினாள். கணவன் இல்லாதபோதும் மாமியாரிடத்தில் அவள் செலுத்தின அன்பு விந்தையானது. ஏழு குமாரரைப் பார்க்கிலும் அதிகமான அன்பை மாமியாரிடம் செலுத்தினாள். அன்பான சகோதரிகளே ரூத்தைப் போல மாமியாரிடம் அன்பு செலுத்துங்கள். ஒரு சகோதரிக்கு ஒரு அருமையான பெண் குழந்தை பிறந்தது. அந்த குழந்தையின் சாயல் அவளுடைய மாமியாரைப் போலவே இருந்தது. எனவே அந்தக் குழந்தையை கவனிக்காமல் அதிகமாய் வெறுத்தாள். காரணம், குழந்தை மாமியாரைப் போல் இருந்ததால். எத்தனை பரிதாபம், தன் குழந்தையை கவனிக்காத மருமகளின் நிலை! ரூத்தோ மாமியாரை அதிகமாய் நேசித்தாள். (ஏழு குமாரரைப் பார்க்கிலும் அதிகம்).

**கணவரின் சம்பளம்:-**

இது ஒரு பெரிய பிரச்சனை. கணவனின் சம்பளம் முழுவதும் மனைவிக்கு உரிமைதான். ஆனால், கணவனைச்

சம்பாதிக்கும் அளவுக்கு, வளர்த்து படிக்க வைத்து, பட்டம் பெறவைத்து, ஆசையோடு பலனைப்பெற வாஞ்சிக்கும் பெற்றோரின் நிலையையும் மருமகள் சிந்திக்க வேண்டும்! மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட தொகையைப் பெற்றோருக்குக் கட்டாயமாகக் கொடுக்க வேண்டும். பெற்றோருக்கு நல்ல வருமானம் இருந்தாலும், மருமகள் கட்டாயம் ஒரு தொகையை அனுப்ப வேண்டும். அப்பொழுதுதான் கர்த்தர் உங்களையும், உங்கள் பிள்ளைகளையும் ஆசீர்வதிப்பார். இப்படி ஒரு மாமியார் பணம் அனுப்பு, பணம் அனுப்பு என்று மருமகளுக்கு கடிதம் எழுதி பணத்தை பெற்றுக் கொண்டே இருந்தார்கள். மருமகளும் திட்டிக்கொண்டே பணம் அனுப்புவாள். இறுதியில் மாமியாரின் மரணம் வந்தது. மாமியார், மருமகளிடம் என் பெட்டி, என் பெட்டியில் உள்ளது என்று சொல்லி உயிர் நீத்தார்கள். மருமகள் திட்டிக்கொண்டே மாமியாரின் பெட்டியைத் திறந்து பார்த்தால் பெட்டி நிறைய ரூபாய் நோட்டுகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தது. அங்கே ஒரு கடிதம் இடைத்தது. ''அதன் சுருக்கம் என்னவென்றால், மகன் அதிகம் செலவு செய்வான். நீயும் பணம் சேர்க்க மாட்டாய், எனவே, உனக்காக என் முழு மூச்சுடன் பணத்தைச் சேர்த்து வைத்திருக்கிறேன். கர்த்தரை ஸ்தோத்தரித்து பணத்தைப் பெற்றுக்கொள்" என்று எழுதப்பட்டிருந்தது. எத்தனை அன்பு மருமகள் மேல் அந்த மாமியாருக்கு இருந்தது. கர்த்தருக்கே மகிமை!

ஒரு நல்ல மருமகளாக விளங்க வேண்டுமானால் ஒவ்வொரு நாளையும் கர்த்தருடைய கிருபையைப் பெற்று, ஆவியில் நிறைந்து ஆரம்பித்துக் கர்த்தருடன் முடிக்க வேண்டும். கணவரோடு மாமியார், மாமனார், நாத்தனார் இன்னும் குடும்பத்தின் அனைவரையும் கவனித்து, எல்லார் மேலும் அன்பு செலுத்த வேண்டும். எவ்வளவு உங்களைத் தாழ்த்த முடியுமோ அவ்வளவு தாழ்த்தி, நல்ல மருமகள் என்ற நற்பெயரைப் பெற்றுக் கொள்ளக் கர்த்தர் உதவி செய்வாராக! ஆவிக்குரிய உலகத்தில் நிச்சயமாகவே

எல்லா மருமகள்களும் ஆவிக்குள் ஜீவித்து, குடும்பங்களை சமாதானத்திலும், சந்தோஷத்திலும் நிறைந்து ஜீவிக்க கர்த்தர் உதவி செய்வாராக! அன்பான மருமகள்மார்களே! உங்கள் செய்கைக்குத் தக்க பலனை கர்த்தர் தந்தருளுவார். கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக!

அத்தியாயம் 21

# மாமனார், மாமியாரே உங்களை ஆராய்ந்து பாருங்கள்!

1. உங்கள் மருமகள் உங்கள் மகனுக்கு கர்த்தரால் அருளப்பட்ட ஈவு என்பதை ஒத்துக் கொள்கிறீர்களா? (நீதி 18:22; 19:14).

2. உங்கள் மருமகள் உங்கள் மகனுக்கு தேவனால் அருளப்பட்ட ஏற்ற துணை என்பதை அங்கீகரிக்கிறீர்களா? (ஆதி 2:18).

3. மருமகளை மகளாக எண்ணி அன்பு கூருகிறீர்களா?

4. நீங்களும் ஒருநாள் மருமகளாக இருந்தீர்களோ? அப்பொழுது மாமியார் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்று விரும்பினீர்களோ அதனை இப்பொழுது உங்கள் மருமகளுக்கு செய்கிறீர்களா?

5. மருமகளுக்கு பயந்து நடக்கிற நீங்கள் மருமகளை எவ்விதம் நடத்துகிறீர்கள்?

6. உங்கள் மகளை அவர் மாமியார், மாமனார் எவ்விதம் நடத்த வேண்டுமென்று விரும்புகிறீர்களோ, அவ்விதம் நீங்கள் உங்கள் மருமகளை நடத்துகிறீர்களா?

7. உங்கள் மகனுக்கு திருமணத்தை நடத்தி வைத்த நீங்கள் வசனத்தின்படி அவர்கள் தனி குடும்பமாக இருக்க அனுமதிக்கிறீர்களா? (ஆதி 2:24)

8. மருமகள் வந்து குடும்பத்தை பிரித்து விட்டாள் என்று குற்றப்படுத்துகிறீர்களோ?

9. உங்கள் மகன் அவர் குடும்பத்திற்கு தலைவர். ஆகையால் தமது குடும்ப சம்பந்தமான காரியங்களை தாமாகவே

முடிவு எடுக்க அனுமதித்திருக்கிறீர்களா? (நீங்கள் ஆலோசனை தரலாம். ஆனால் முடிவு எடுக்க கூடாது).

10. மருமகள் வீட்டாரிடமிருந்து பணம், பொருள் எதிர் பார்த்திருக்கிறீர்களோ?

11. மருமகளிடம் அடிக்கடி நீ என்ன உங்கள் அப்பா வீட்டி லிருந்து கொண்டு வந்தாய்? என்று குத்தி குத்தி கேட்டு மருமகளை மனம் நொந்து போகப்பண்ணு கிறீர்களோ?

12. மருமகள் உங்களை போன்று பல வருட அனுபவம் இல்லாதவள். ஆகையால் சிறு தவறுகள் ஏற்பட்டால் புத்தி சொல்லி மன்னிக்கும் சுபாவம் இருக்கிறதா?

13. மருமகள் செய்யும் சின்ன தவறுகளை பெரிதுப்படுத்தி குற்றப்படுத்தும் சுபாவம் உடையவர்களாக இருக்கிறீர் களோ? மற்றவர்களிடத்தில் குறை கூறுகிறீர்களா?

14. 'மாமியார் உடைத்தால் மண்குடம்; மருமகள் உடைத் தால் பொன்குடம்' என்ற பழமொழி உங்கள் வீட்டில் உண்மையாகிறதோ?

15. உங்கள் மருமகள் உங்களைவிட, உங்கள் மகனை அதிகம் நேசிக்க வேண்டும் என்று எதிர்ப்பார்க்கிறீர்களா?

16. உங்களை வெறுக்கும் மருமக்களை உங்களால் நேசிக்க முடிகிறதா?

17. உங்கள் மருமக்கள் வீட்டாரை அடிக்கடி தரக்குறை வாக பேசுகிறீர்களோ?

18. உங்கள் மருமகள் சுகவீனமாக இருக்கும்போது உதவி செய்கிறீர்களா?

19. மருமகளுடைய நன்மையையே முக்கியமாக கருதி செயல்பட்ட நகோமியைப் போன்று உங்கள் மருமகளின் நன்மையை கருதி செயல்படுகிறீர்களா?

20. உங்கள் பேரப்பிள்ளைகளை அவர்கள் பெற்றோர் கண்டிக்கும்போது நீங்கள் குறுக்கிட்டு பேரப்பிள்ளைகளுக்கு பொரிக செய்கிறீர்களா? (செல்லம் கொடுக்கிறீர்களா?)

21. பேரப்பிள்ளைகளை கவனிக்கும் பொறுப்பு இருந்தால் அதை பாக்கியமாக, சந்தோஷமாக எண்ணி அவர்களுக்கு கர்த்தருக்கு பயப்படும் பயத்தை போதிக்கிறீர்களா?

22. பேரப்பிள்ளைகள் மத்தியிலும் மகன் பிள்ளைகள், மகள் பிள்ளைகள் என்று பாரபட்சம் காண்பிக்கிறீர்களா?

23. உங்கள் மகன், மருமகள் பேரப்பிள்ளைகள் சந்தோஷமாயிருக்கும் பொழுது அதை உங்கள் சந்தோஷமாக எண்ணி எப்பொழுதும் சந்தோஷமாயிருக்கிறீர்களா?

24. கர்த்தர் உங்களை வைத்திருக்கிற நிலைமையில் முறுமுறுக்காமல் மனரம்யமாயிருந்து, எல்லாவற்றிலேயும் எல்லாவற்றிற்காகவும் ஸ்தோத்திரம் செய்கிறீர்களா?

உங்கள் மகள் ஒரு வீட்டில் மருமகள். நீங்கள் அடுத்த வீட்டு பிள்ளையை (உங்கள் மருமகளை) எவ்விதம் நடத்துகிறீர்களோ அவ்விதமே உங்கள் மகள் நடத்தப்படுவாள்.

உங்கள் மகள் எவ்விதம் நடத்தப்பட வேண்டுமோ அவ்விதம் உங்கள் மருமகளை நடத்துங்கள்.

நீங்கள் மற்றவர்களுக்கு (மருமகளுக்கு) அளக்கிற அளவின்படியே உங்களுக்கும் (உங்கள் மகளுக்கு) அளக்கப்படும் (மத் 7:2).

அத்தியாயம் 22

# பெற்ருேரும் பிள்ளைகளும்!

பின்பு தேவனுகிய கர்த்தர்: மனுஷன் தனிமையாயிருப்பது நல்லதல்ல. ஏற்ற துணையை உண்டாக்குவேன் என்ருர். அப்பொழுது ஆதாம் இவள் என் எலும்பில் எலும்பும், என் மாம்சத்தில் மாம்சமுமாய் இருக்கிருள். இவள் மனுஷனில் எடுக்கப்பட்டபடியினல் 'மனுஷி' எனப்படுவாள் என்ருன். இதினிமித்தம் புருஷன் தன் தகப்பனையும், தன் தாயையும் விட்டு தன் மனைவியோடே இசைந்திருப்பான்: அவர்கள் ஒரே மாம்சமாயிருப்பார்கள் (ஆதி. 2:1:23,24). மனிதன் தனிமையாயிருப்பது நல்லதல்ல என தேவனே உணர்ந்து அவனுக்கு துணையை உண்டாக்கினுர். மனிதன் தன்னை போன்ற மற்றவர்களோடு ஐக்கியம் வைக்க வேண்டுமென்பதை தேவன் அறிந்தார். மனிதன் தேவனேடு ஐக்கியம் கொண்டிருந்த போதிலும்அவனுடைய வாழ்க்கைக்கு ஒன்று தேவையாக இருந்தது. எனவே தேவன் ஸ்திரீயை உண்டாக்கினுர்.

தேவன் ஆணும் பெண்ணுமாக சிருஷ்டித்த பின்பு, அவர்களுக்கு ஒரு கட்டளை கொடுத்தார். அது "நீங்கள் பலுகிப் பெருகி, பூமியை நிரப்பி அதைக் கீழ்ப்படுத்தி ....ஆண்டு கொள்ளுங்கள் என்பதே" (ஆதி. 1:28). மற்ருெரு வகையில் எடுத்துரைத்தால் அவர்கள் பிள்ளைகளை பெற்றெடுத்து பூமியை நிரப்பும்படி தேவன் கட்டளையிட்டார். எனவே ஆரம்பத்திலேயே தேவன் குடும்பத்தை ஏற்படுத்தினுர் என்றும், தேவன் தான் முதன்முதலாக ஆணையும் பெண்ணையும் சிருஷ்டித்து, பிள்ளைகள் பெற்றெடுக்கும்படி கட்டளையும் கொடுத்து, முதல் குடும்ப உறவை ஆரம்பித்து வைத்தார் என்பதும் தெளிவாகிறது. இது தேவனுடைய எண்ணமும் திட்டமும் ஆகும். இதனை இயேசு பரிசேயர்களிடம் பேசும்போது திரும்பவுமாக முக்கியப்படுத்தி 'ஆதியிலே

மனுஷரை உண்டாக்கினவர், அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்டாக்கினார் என்பதையும், இதினிமித்தம் புருஷனானவன் தன் தகப்பனையும், தாயையும், விட்டுப் பிரிந்து தன் மனைவியோடே இசைந்திருப்பான். அவர்கள் இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள் என்று அவர் சொன்னதையும் நீங்கள் வாசிக்கவில்லையா? இப்படி இருக்கிறபடியினால் அவர்கள் இருவராயிராமல் ஒரே மாம்சமாயிருக்கிறார்கள்; ஆகையால் தேவன் இணைத்ததை மனுஷன் பிரிக்காதிருக்கக்கடவன்" என்றார்.

இங்கு தேவன் நினைத்ததை மனுஷன் பிரிக்காதிருக்கக்கடவன் என்பதை வலியுறுத்திப் பேசுகிறார். ஒரு ஆணையும், பெண்ணையும் திருமணத்தில் தேவன் இணைக்கும்போது அவர்கள் ஒருவராக மாறுகிறார்கள். எப்படி பிதா, குமாரன் பரிசுத்தாவி இவர்கள் மூவரும் பிரிக்க முடியாதபடி ஒன்றாக இருக்கிறார்களோ அப்படியாக இருக்க வேண்டும். ஏனென்றால் தேவன் தம்முடைய சாயல்களாக மனுஷனை இருஷ்டித்தார். அவனை தேவ சாயலாகவே சிருஷ்டித்தார். ஆணும் பெண்ணுமாக அவர்களை சிருஷ்டித்தார்.

**சபையின் அடிப்படை அலகு:-**

"அல்லாமலும் உங்களில் இரண்டு பேர் தாங்கள் வேண்டிக்கொள்ளப் போகிற எந்தக் காரியத்தைக் குறித்தாகிலும், பூமியிலே ஒருமனப்பட்டிருந்தால், பரலோகத்தில் இருக்கிற என் பிதாவினால் அது அவர்களுக்கு உண்டாகும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஏனெனில் இரண்டு பேராவது, மூன்று பேராவது என் நாமத்தினாலே எங்கே கூடியிருக்கிறார்களோ, அங்கே அவர்கள் நடுவிலே இருக்கிறேன்"

(மத். 18:19, 20).

கணவனுக்கும், மனைவிக்கும் இடையேயுள்ள உறவே, சபையின் அடிப்படை அலகாகும். மேற்கண்ட வசனத்தில் இரண்டு பேர் ஒரு மனப்பட்டிருந்தால் என்றும், இரண்டு அல்லது மூன்று பேர் எங்கே கூடியிருக்கிறார்களோ என்று

கூறுவதைக் காண்கிறோம். கணவனும் மனைவியும் இயேசுவின் நாமத்தில்கூடி எதாவது ஒரு காரியத்தைக் குறித்து ஒருமனப் பட்டு ஜெபித்தால், அப்பொழுது இயேசு அவர்கள் மத்தியில் இருப்பதினாலே அந்த ஜெபம் வல்லமையுள்ளதாக இருக்கும். சபையில் ஒன்றுகூடி மக்கள் இயேசுவோடு ஜெபிப்பதற்கு இது மிகவும் அடிப்படையான காரியமாகும்.

கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் எடுத்த உடன் படிக்கையின்படி இணைந்து இயேசுவோடுநடக்கும் வேளையில்; அந்த சபையானது வல்லமையுள்ள உறுதியான சபையாக இருக்கும். வீட்டில் ஒற்றுமையில்லை என்றால் சபையிலும் ஒற்றுமை இருக்காது. வீட்டில் பிரச்சனை வரும் என்றால் சபையிலும் பிரச்சனை வரும். ஒரு அவயம் பாடுபட்டால் எல்லா அவயவங்களும் பாடுபடும். ஒன்று கனமடைந்தால் மற்ற அவயங்கள் சந்தோஷப்படும் (I கொரி. 12:26).

**தேவ ஒழுங்கின்படியுள்ள அதிகாரம்:-**

''ஒவ்வொரு புருஷனுக்கும் கிறிஸ்து தலையாயிருக்கிறாரென்றும், ஸ்திரீக்குப் புருஷன் தலையாயிருக்கிறாரென்றும், கிறிஸ்துவுக்குத் தேவன் தலையாயிருக்கிறாரென்றும், நீங்கள் அறியவேண்டுமென்று விரும்புகிறேன்'' (I கொரி 11:3).

''பிள்ளைகளே, உங்கள் பெற்றோருக்கு கர்த்தருக்குள் கீழ்ப் படியுங்கள் இது நியாயம். உனக்கு நன்மை உண்டாயிருப் பதற்கு, பூமியிலே உன் வாழ்நாள் நீடித்திருப்பதற்கும், உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்ணுவாயாக என்பதே வாக்குத்தத்தமுள்ள முதலாம் கற்பனையாயிருக்கிறது. பிதாக்களே, நீங்களும் உங்கள் பிள்ளைகளை கோபப்படுத் தாமல், கர்த்தருக்கேற்ற சிட்சையிலும், போதனையிலும் அவர்களை வளர்ப்பீர்களாக"(எபே.6:1-14).தேவன் ஒழுங்கு படுத்திய அதிகாரம் மேற்கண்ட வசனங்களில் நமக்கு தெளிவாகின்றது.

பிதாவாகிய தேவன் கிறிஸ்துவுக்குத் தலை
கிறிஸ்து புருஷனுக்கு (மனிதனுக்கு) தலை
புருஷன் மனைவிக்குத் தலை,
புருஷனும் மனைவியும் பிள்ளைகளுக்குத் தலை

புருஷனும், மனைவியும் தேவன் ஏற்படுத்திய அதிகாரத்திற்கு உட்பட்டு செயல்படுகிற வேளையில் ஒற்றுமையும், ஒருங்கிணைப்பும் அங்கே இருக்கும். முறையான அதிகாரமும், கீழ்ப்படிதலும் இல்லையென்றால், அங்கு ஒற்றுமை காணப்படாது. புருஷன் கிறிஸ்துவின் அதிகாரத்திற்கு உட்பட்டு செயல்படுகிற வேளையில், கிறிஸ்து சபையில் அன்புகூர்ந்தது போல; தன் மனைவியிடத்தில் அன்பு கூறுகிறான். மேலும் புருஷனானவன் தன் மனைவிக்குத் தன்னை ஒப்புக்கொடுத்து, மனைவியை போஷித்து காப்பாற்றுகிறான் (எபே. 5:25,33). மனிதன் (புருஷன்) இப்படிப்பட்ட அதிகாரத்தில் நடக்கிற வேளையில், மனைவி புருஷனுக்கு கீழ்ப்படிவது சந்தோஷமாக காண்பாள். உண்மையாகவே தேவன் ஏற்படுத்திய அதிகாரத்திற்கு மனைவி கீழ்ப்படிவது அவளுடைய நன்மைக்கே.

மனைவியானவள், சபை கிறிஸ்துவுக்கு எப்படி கீழ்ப்படிகிறதோ, அப்படியே புருஷனுக்கு கீழ்ப்படிய வேண்டும். தன் தகப்பன் இயேசுவுக்கு கீழ்ப்படிவதையும், தன் தாய் தகப்பனுக்கு கீழ்ப்படிவதையும், பிள்ளைகள் பார்க்கிற வேளையில் அவர்கள் கீழ்ப்படிய கற்றுக்கொள்வார்கள். இவ்வகையான அதிகாரமும், கீழ்ப்படிதலும் மற்றவர்களுக்கு பாரமானதல்ல. இது விடுதலையோடு உள்ள வாழ்க்கையும் மற்றவர்களுக்கு ஜீவனை கொடுக்கிற அனுபவமாகும்.

அத்தியாயம் 23

# பிள்ளைகளை தேவனுடைய வழியில் பழக்குவிப்பது நமது கடமை (பொறுப்பு)

**1. தகப்பனின் கடமை:-**

"பிதாக்களே, நீங்களும் உங்கள் பிள்ளைகளைக் கோபப்படுத்தாமல், கர்த்தருக்கேற்ற சிட்சையிலும், போதனையிலும் அவர்களை வளர்ப்பீர்களாக" (கொலோ. 6:4).

மனிதனை தேவன் குடும்பத்தின் தலைவனாக ஏற்படுத்தியிருப்பதினால், பிள்ளைகளை கர்த்தருக்கேற்ற வழியில் போதித்து அவர்களை வளர்ப்பது, அவனுடைய கடமையாக தேவன் கொடுத்திருக்கிறார். புருஷர்கள் அடிக்கடியாக இந்த பொறுப்பை ஏற்க மறுத்துவிட்டு, அப்பொறுப்பை மனைவியிடம் தள்ளிவிடுகின்றனர். ஆனால் தேவன் இந்த பொறுப்பை மனிதனுக்கே (புருஷனுக்கே) கொடுத்துள்ளார். தேவன் எங்கெல்லாம் அதிகாரத்தை கொடுக்கிறாரோ அங்கே பொறுப்பையும் (உத்திரவாதத்தையும்) கொடுக்கிறார். ஆனால் இன்றைக்கு அநேக புருஷர்கள் தங்கள் வீட்டில் அதிகாரம் செலுத்த ஆசைப்படுகின்றனர். ஆனால் அக்குடும்பத்தின் பொறுப்பாளராக இருக்க விரும்புவதில்லை. நீங்கள் பொறுப்பாளராக (உத்திரவாதமுள்ளவராக) இல்லையெனில், நீங்கள் அதிகாரம் செலுத்தவும் கூடாது. ஆனால் அப்படி பொறுப்பாக இல்லாதபடி, அதிகாரம் செலுத்துகிறவர்களுக்கு உண்மையாகவே தேவன் கடுமையான நியாயத்தீர்ப்பை வைத்திருக்கிறார். எனவே விழித்தெழும்புவோம்.

சாமுவேலின் நாட்களிலே ஏலி தனது பிள்ளைகள் தீமை செய்யாதபடி, அவர்களை கடிந்து அடக்காததினாலே, தேவன்

ஏலியை கடுமையாக நியாயம் தீர்த்தார் (1 சாமு. 3:13). ஏலி தனது குடும்பத்தைச் சரியாக நடத்த தவறினதாலே, ஆசாரியத்துவம் ஏலியின் வீட்டைவிட்டு நீக்கப்பட்டு, மற்ற வருக்கு கொடுக்கப்பட்டது. இது என்ன பரிதாபம்!

ஆனால் ஆபிரகாமை குறித்து முற்றிலும் வித்தியாச மான சம்பவத்தை காண்கிறோம்.

''அப்பொழுது கர்த்தர்; ஆபிரகாம் பெரிய, பலத்த ஜாதியாவதினாலும், அவனுக்குள் பூமியிலுள்ள சகல ஜாதி களும் ஆசீர்வதிக்கப்படுவதினாலும், நான் செய்யப் போகி றதை ஆபிரகாமுக்கு மறைப்பேனோ? கர்த்தர் ஆபிரகாமுக்கு சொன்னதை நிறைவேற்றும்படியாய், அவன் தன் பிள்ளை களுக்கும், தனக்குப் பின்வரும் தன் வீட்டாருக்கும், நீங்கள் நீதியையும், நியாயத்தையும் செய்து கர்த்தருடைய வழியை காத்து நடவுங்கள் என்று கட்டளையிடுவான் என்பதை அறிந்திருக்கிறேன் என்றார்" (ஆதி. 18:17-19).

''கர்த்தருடைய வழியை காத்து நடவுங்கள்'' என்று (ஆபிரகாம்)கட்டளையிடுவான் என்பதை அறிந்திருக்கிறேன் என தேவன் சாட்சி பகர்ந்தார். தேவன் ஆபிரகாமை தெரிந்து கொண்டு அவனை நம்பினார். ஏனென்றால், ஆபிர காம் தனது பிள்ளைகளுக்கு; தேவனுடைய வழியைக் குறித்து போதிப்பான் என்று தேவன் அறிந்ததினாலேயே!

**2. கணவன் மனைவி இருவருக்கும் குடும்பத்தில் கூட்டாக உள்ள கடமை:-**

பிள்ளைகளை வளர்ப்பதில் தகப்பன் எப்படி பொறுப்பாக இருக்க வேண்டும் என்பதை இங்கு காண்போம். பழைய ஏற்பாட்டுக் காலத்திலும், புதிய ஏற்பாட்டுக் காலத்திலும், அதே போல இன்றைய நாட்களிலும் கூட, புருஷர்கள் அதிக மான நேரம் வீட்டில் இருப்பதில்லை என்பதை நாம் அறிந் திருக்கிறோம். எனவே, மனைவி (தாய்) அதிகமான நேரத்தை வீட்டிலே பிள்ளைகளோடு நேரத்தை செலவழிப்பவளாக காணப்பட்ட போதிலும், புருஷனுக்கே பிள்ளைகளை கர்த்தருக்

சேர்ந்த வழியில் நடத்தக் கூடிய பொறுப்புள்ளது. மெய்யாகவே இது நடைமுறையில் சாத்தியமாகக் கூடிய காரியம் தானா? நிச்சயம் சாத்தியமாகும். கவனமாக வாசியுங்கள்.

''என் மகனே, உன் தகப்பன் கற்பனையைக் காத்துக் கொள்; உன் தாயின் போதகத்தை தள்ளாதே. அவைகளை எப்பொழுதும் உன் இருதயத்திலே அணிந்து, அவைகளை உன் கழுத்திலே கட்டிக் கொள். நீ நடக்கும் போது, அது உனக்கு வழிகாட்டும்; நீ படுக்கும்போது அது உன்னைக் காப்பாற்றும்; நீ விழிக்கும் போது, அது உன்னோடே சம்பாஷிக்கும்; கட்டளையே விளக்கு, வேதமே வெளிச்சம், போதக சிட்சையே ஜீவ வழி" (நீதி. 6:19-23).

தகப்பனுடைய கட்டளையே விளக்கு. எந்த திசையில் வெளிச்சம் செல்ல வேண்டுமென இந்த விளக்குதான் நிர்ணயம் செய்கிறது. உதாரணமாக, வேதாகம நாட்களிலே மெழுகுவர்த்தியோ, அல்லது திரியினால் எரியக் கூடிய விளக்கோ, பெரிய விளக்கினுள் வைக்கப்படும். வெளிச்சம் உள்ளிருந்து வெளியே செல்வதற்கு ஒரு சிறு திறப்போ, ஜன்னல் போன்ற இடைவெளியோ காணப்படும். இந்த திறப்புதான் வெளிச்சம் செல்லக்கூடிய வழியை நிர்ணயிக்கும். இதைப் போன்றே தகப்பன் எல்லா கட்டளைகளையும் கொடுக்கக் கூடிய விளக்கைப் போன்று இருக்கிறான். பிள்ளைகள் எப்படி நடத்த வேண்டும் என்ற திசையை அல்லது பாதையை நிர்ணயம் பண்ணுவது தகப்பனே.

இந்த தகப்பன் காட்டிய திசையில் பிரகாசிக்கிற வெளிச்சமாக இருப்பதுதான் தாயின் போதனை. இந்த வெளிச்சமானது நடக்க வேண்டிய வழியைக் காட்டுகிறது. தகப்பனுடைய போதனையை அஸ்திபாரமாகக் கொண்டு தாயானவள் தனது பிள்ளைகளுக்கு பிரத்தியோகமான காரியங்களை செய்யும்படி உத்தரவிடுகிறாள்.

இதை சற்று புரிந்துகொள்ளும்படி சில உதாரணங்களைக் காண்போம்.

யாத்திராகமம் 20:1-17 வசனங்களில் தேவன் மோசே யிடம் பத்துக் கற்பனைகளைக் கொடுத்தார். இஸ்ரவேல் ஜனங்களுக்கு மொத்தமாக இந்த 10 கற்பனைகளையும் கொடுத்தார். இது விளக்கைப் போன்றது. இந்த 10 கற்பனைகளுக்குப் பின்னால் பல சட்ட திட்டங்களையும், நியமங்களையும் கொடுத்தார். அவைகள் அவர்கள் தாங்கள் அனுதின வாழ்வில் எல்லா சூழ்நிலைகளிலும், சந்தர்ப்பங்களிலும் தேவன் கொடுத்த கற்பனைக்கு கீழ்ப்படிந்து நடப்பதற்கு வழி வகுத்தது.

உதாரணமாக யாத். 20:12ல் 'கொலை செய்யாதிருப்பாயாக' என்று கூறப்பட்டுள்ளது. அது தேவனுடைய கற்பனை. யாத். 21ம் அதிகாரம் 12-36 வசனங்களை வாசித்துப் பார்க்கும்போது அதில் கூறப்பட்டுள்ள ஒன்பது சட்டங்களும் கொலை செய்தவனுடன் பிரத்தியேகமான முறையில் இடைபடுகிறது. யாத். 21:14ல் ' ஒருவன் பிறனுக்கு விரோதமாகச் சதிமோசஞ் செய்து, அவனைத் துணிகரமாய்க் கொன்று போட்டால் அவனை என் பலிபீடத்தினின்றும் பிடித்துக் கொண்டு போய் கொலை செய்ய வேண்டும்" என கூறப்பட்டுள்ளது. அதே வேளையில் 13ம் வசனத்தில் ஒருவன் பதிவிருந்து கொல்லாமல், தற்செயலாய் கொன்று விட்டால் அவன் ஓடிப்போய் சேரவேண்டிய ஸ்தலத்தை நியமிப்பேன் என் கூறப்பட்டுள்ளது. மேலும் இந்த கட்டளைகள் இன்னும் விளக்கமாக எண். 35:1-34ல் கூறப்பட்டுள்ளது. எனவே நாம் இங்கு தேவன் கற்பனைகளை மாத்திரம் கொடுக்காமல், அதை எப்படி அனுதின வாழ்விலும் சூழ்நிலைகளிலும் செயல்படுத்தவேண்டும் என்பதை புரிந்து கொள்வதற்காக, பல சட்டதிட்டங்களையும் கொடுத்திருக்கிறார் என்பதைக் காண்கிறோம்.

இப்போது வீட்டில் உள்ள நடைமுறை அனுபவத்தைக் காணலாம். எனது பிள்ளைகளை பழக்குவிக்கும்படிக்காக எனது மனைவிக்கு நான் ஒரு கட்டளை கொடுக்கிறேன். என்னுடைய கட்டளை என்னவென்றால் 'நம்முடைய பிள்ளை

கள் தேவன் நமக்கு கொடுக்கும் பொருட்களில் உக்கிராணத்துவம் உள்ளவர்களாக இருக்கும் படியாக அவர்களை பழக்க வேண்டும்" என்பதே. இப்போது எனது மனைவி இந்த கட்டளையை அடிப்படையாகக் கொண்டு போதிப்பதற்கு பல சட்டங்களை பிள்ளைகளுக்கு விதிக்கிறார். அந்த சட்டங்கள் இப்படியாக இருக்கிறது.

**பிள்ளைகளைப் பார்த்து.........**

1. உங்களுடைய பொம்மையை உடைத்து விடாதீர்கள்.

2. பொம்மையை வைத்து விளையாடியபின், அந்த பொம்மையை வைக்க வேண்டிய சரியான இடத்தில் அதை வையுங்கள்.

3. உங்களது பொம்மையை வெளியில் போட்டுவிட்டு வராதேயுங்கள்.

4. நமது உத்தரவில்லாதபடி பொம்மையை, அடுத்த பிள்ளைகள் அவர்கள் வீட்டுக்கு எடுத்துச் செல்ல இடம் கொடாதீர்கள்.

எனது மனைவி நேரடியாக பிள்ளைகளுக்கு அனுதின வாழ்வில், எல்லா சூழ்நிலைகளிலும் எனது கட்டளையை செயல்படுத்துகிறாள்.

இந்த நிலைமையில் செயல்பட தகப்பன் தன் மனைவியிடம் தனது கட்டளையை தெளிவாகக் கூறவேண்டும். தனது மனைவியிடமும் பிள்ளைகளிடமும் தான் கூறிய இந்த கட்டளையை பின்பற்றவேண்டும், என்று தகப்பன் கூற வேண்டும். பிள்ளைகளை இப்படியாக பழக்குவிக்கிற காரியத்தில் தகப்பன் வீட்டில் காரியங்கள் எப்படி நடக்கின்றன என்பதைக் குறித்து கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும்.

மனைவியானவள் புருஷன் சொன்ன கட்டளையை கவனமாக கேட்டறிந்து, பிள்ளைகளுக்கு அவர்களின் அனுதின வாழ்வில், அக்கட்டளையை செயல்படுத்த கவனமாக இருக்க வேண்டும். புருஷன் கூறின கற்பனைக்கு விரோதமாகச்

செய்யாதபடி புருஷனோடு ஒன்றுபட்டு ஐக்கியமாக காணப் பட உண்மையுள்ளவளாக இருக்க வேண்டும்.

நான் அறிந்த சில தாயாரைப் போல இருக்க வேண் டாம். அவர்கள் புருஷன் வீட்டில் இருக்கும் போது உண்மை யாக கீழ்ப்படிவார்கள். புருஷன் வெளியே போன பின்போ அவனது கற்பனையை கைக்கொள்ள மாட்டார்கள். மேலும் சில தாய்மார் பிள்ளைகளிடம் ''உனது அப்பா இதைச் செய்ய சம்மதிக்கமாட்டார் ஆனால் நான் உனக்கு அனு மதிக்கிறேன்" என சொல்லுவதைக் கேட்டிருக்கிறேன். அருமைத்தாயே! உனது வார்த்தைகள் பிள்ளையின் வாழ்வை பாழடிக்கும். அதுமாத்திரமல்ல, இந்த வார்த்தைகள் கூறுவ தினால் தகப்பனுக்குக் கொடுக்க வேண்டிய பயத்தையும், கனத்தையும் பிள்ளைகள் இழந்து போக காரணிகளாக இருக்கிறார்கள். எனவே புருஷன் இல்லை என்று சொன்னால் பிள்ளைகள் கேட்கும் போது தாயும் இல்லை என்றே சொல்ல வேண்டும். இப்படி செயல்படுவது பிள்ளைகள் நல்வழிப் படுத்த சிறந்த முறையாகும்.

## அத்தியாயம் 24

# பிள்ளைகள்!

"இதோ பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்தரம், கர்ப்பத்தில் கனி அவரால் கிடைக்கும் பலன், வாலவயதின் குமாரர் பலவான் கையிலுள்ள அம்புகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள். அவைகளால் தன் அம்பறாத்துணியை நிரப்பின புருஷன் பாக்கியவான்; அவர்கள் நாணமடையாமல் ஒலிமுக வாசலில் சத்துருக்களோடே பேசுவார்கள்" (சங் 127:4-6)

தேவனுடைய வார்த்தையின்படி பிள்ளைகள் தேவன் கொடுக்கக் கூடிய பரிசு, அது ஒரு பலன், அது ஒரு ஆசீர்வாதமும்கூட. "அவைகளால் தன் அம்பறாத்துணியை நிரப்பின புருஷன் பாக்கியவான்" பிள்ளைகள் என்பவர்கள் மேலானவர்கள். வசனம் 5 கூறுகிறது. பிள்ளைகள் பலவான் கையிலுள்ள அம்புக்கு ஒப்பாயிருக்கிறார்கள், நாம் வீரர்களாய் இருக்கிறோம். ஏனெனில் நாம் தேவனுடைய சேனையை சேர்ந்த வீரர்களாக, அவருடைய எதிராளியோடு யுத்தம்பண்ணுகிறோம். யுத்தத்தில் பயன்பட கூடிய கருவியான ஒன்று எதிரியை தாக்குவதற்கும், மற்றொரு வகையில் நம்மை பாதுகாத்துக் கொள்வதற்கும், பயன்படுகிறது. நமது பிள்ளைகள் நம்மோடு ஆவியிலே இணைந்து, நம்முடன் ஒருங்கிணைந்து நிற்கமுடியும். பிள்ளைகளுடன் சேர்ந்து நாம் ஒருங்கிணைந்தவர்களாக எதிரியை தாக்கி அவன் மேல் வெற்றியடைய முடியும். சரியாக பழக்கிவிட்ட பிள்ளைகள் தங்கள் பெற்றோருடன் இணைந்து நின்று தைரியப்படுத்துகிறவர்களாக மாத்திரமல்ல, பெற்றோர்களுக்குப் பதிலாக, தாங்களே யுத்தத்தை சந்திக்ககூடியவர்களாக இருப்பார்கள். இதை குறித்து அதிகமாக பின்வரும் நாட்களில் "குடும்பமாக தேவனுடைய ஊழியம்" என்கிறதான தலைப்பில் காண்போம்.

தேவன் பிள்ளைகளுக்கு அதிகமதிப்பு வைத்திருந்தார். சிறுபிள்ளைகள் தன்னிடத்தில் வர தடைசெய்தபோது, சீஷர்

களைக் கடிந்துகொண்டு ''சிறு பிள்ளைகள் என்னிடத்தில் வரு கிறதற்கு இடம்கொடுங்கள், அவர்களை தடை பண்ணா திருங்கள், பரலோக ராஜ்யம் அப்படிப்பட்டவர்களுடையது" என்றார் (மத். 19:14). அது மாத்திரமல்ல, சிறுபிள்ளைகளுக்கு இடறுதலாய் இருப்பவர்களைப் பார்த்து பயங்கரமாக எச்சரித் துள்ளார்.

''சீஷர்கள் இயேசுவினிடத்தில் வந்து: பரலோக ராஜ்யத்தில் எவன் பெரியவனாயிருப்பான்" என்று கேட்டார் கள். இயேசு ஒரு பிள்ளையைத் தம்மிடத்தில் அழைத்து, அதை அவர்கள் நடுவே நிறுத்தி: ''நீங்கள் மனம் திரும்பிப் பிள்ளைகளைப் போல ஆகாவிட்டால், பரலோக ராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகையால் இந்தப் பிள்ளையைப் போலத் தன்னைத் தாழ்த்துகிறவன் எவனோ அவனே பரலோக ராஜ்யத்தில் பெரியவனாயிருப்பான். இப்படிப்பட்ட ஒரு பிள்ளையை என் நாமத்தினிமித்தம் ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக் கொள்ளுகிறான். என்னிடத்தில் விசுவாசமா யிருக்கிற இந்தச் சிறியரில் ஒருவனுக்கு இடறல் உண்டாக்கு கிறவன் எவனோ, அவனுடைய கழுத்தில் ஏந்திரக்கல்லைக் கட்டி, சமுத்திரத்தின் ஆழத்திலே அவனை அமிழ்த்துகிறது அவனுக்கு நலமாயிருக்கும். இடறல்களினிமித்தம் உலகத் துக்கு ஐயோ! இடறல்கள் வருவது அவசியம். ஆனாலும் எந்த மனுஷனால் இடறல் வருகிறதோ அவனுக்கு ஐயோ! உன் கையாவது, உன் காலாவது உனக்கு இடறல் உண்டாக்கி னால் அதைத் தறித்து, எறிந்துபோடு. நீ இரண்டு கையுடைய வனாய், அல்லது இரண்டு காலுடையவனாய் நித்திய அக்கினி யிலே தள்ளப்படுவதைப் பார்க்கிலும், சப்பாணியாய் அல்லது ஊனனாய் நித்திய ஜீவனுக்குள் பிரவேசிப்பது உனக்கு நலமா யிருக்கும். உன்கண் உனக்கு இடறல் உண்டாக்கினால், அதைப் பிடுங்கி எறிந்துபோடு; இரண்டு கண்ணுடையவனாய் எரிநரகத்தில் தள்ளப்படுவதைப்பார்க்கிலும், 'ஒற்றைக் கண்ணனாய் ஜீவனுக்குள் பிரவேசிப்பது உனக்கு நலமா யிருக்கும். இந்தச் சிறியரில் ஒருவனையும் அற்பமாய் எண்ணாத

படிக்கு எச்சரிக்கையாயிருங்கள். அவர்களுக்குரிய தேவ தூதர்கள் பரலோகத்திலே என் பரமபிதாவின் சமுகத்தை எப்போதும் தரிசிக்கிறார்கள் என்று உங்களுக்குச் சொல்லு கிறேன்'' (மத் 18:1-0).

சிறுபிள்ளைகள் கிறிஸ்துவின் மேல் உள்ள விசுவாசத்தில் இடறுதல் அடைவதற்கு நம்மில் உள்ள சில வழிகளைக் காண் போம். முதலாவதாக, பிரதானமாக பெற்றோர்கள் தங்கள் மாதிரியான நடக்கையினாலே, பிள்ளைகள் இடறிப்போகும் படி செய்கிறோம். எசேக்கியேல் 16:44ல் ''தாயைப்போல மகள் என்று சொல்வார்கள்'' என கூறப்பட்டுள்ளது. பிள்ளையானவள் தாயைப்போலவே பாவம் செய்து தாயைப் போலவே ஆகிவிடுகிறாள். ஒருவர் இப்படியாக கூறினார். உனது மனைவி இன்னும் பத்து அல்லது இருபது வருடங்கள் கழித்து எப்படிப்பட்டவளாக இருப்பாள் என்பதை அறிய விரும்பினால், இப்போது அவளுடைய தாயைப் பார்! தாயைப் போலவே தான் இருப்பாள் எனக் கூறினார். வேதமும் இதைத் தான் வலியுறுத்துகிறது. பையன்களும் அப்படியே தன் தகப்பனைப் போலவே இருப்பார்கள். நீதிமொழிகள் 20:7ல் ''நீதிமான் தன் உத்தமத்திலே நடக்கிறான்; அவ னுக்குப் பிறகு அவனது பிள்ளைகளும் பாக்கியவான்களா யிருப்பார்கள்'' என கூறுகிறது. எனவே பெற்றோர்கள் எதைச் செய்ய பிள்ளைகள் காண்கிறார்களோ அதையே அவர்களும் செய்வார்கள்.

பலமுறை எனது மகன் குறிப்பிட்ட ஒரு காரியத்தை அடிக்கடி செய்வதைப் பார்த்தேன். இந்த காரியத்தை செய்ய யாரிடம் இவன் கற்றுக் கொண்டான்? என என் மனைவியிடம் வினவ, அவள் வியப்போடு என்னைப் பார்த்து: ''உங்களிடம் இருந்து தான். நீங்கள் எப்போதும் அப்படித் தான் செய்கிறீர்கள்'' என்றாள். அருமையான பெற்றோரே! நமது பிள்ளைகள் நம்மை கூர்ந்து கவனிக்கிறார்கள் என்று சிந்தையில் கொள்வோம். ''டேய்! நான் செய்வது போல செய்யாதே; என்று எத்தனை முறை சொல்லுகிறேன்!''

என்று கூறும் பெற்றோரை நான் பார்த்திருக்கிறேன். அன்பானவரே! பிள்ளைகள் முதலாவது எதை காண்கிறார்களோ அந்தப்பாவனையிலே அவர்களும் காணப்படுவார்கள். எனவே நீங்கள் உங்கள் பிள்ளையைப் பார்த்து இதை செய்யாதே, செய்யாதே என மேலும் மேலும் கூறினாலும், அவர்கள் நீங்கள் செய்வதைப் பார்க்கும்போது, நீங்கள் எதை செய்கிறீர்களோ அதையே சரியாக செய்வார்கள். அதன் காரணம், அவன் காண்பதையே உண்மை என்று நம்புகிறானேயல்லாமல், தான் கேட்பதை நம்புவதில்லை. ஏனெனில் தனது பெற்றோர் மேன்மையான, சரியான காரியங்களைத் தான் செய்வார்கள் என நம்புவதால் காண்பதையே தனது வாழ்வில் செய்கிறான்.

2வதாக ஒன்றை நாம் செய்யும்படி சொல்லிவிட்டு நாம் மற்றொன்றை செய்வோமானால் அது மாய்மாலம் ஆகும். இப்படிப்பட்ட மாய்மாலத்தை தான் பரிசேயர்களிடமும், வேதபாரகரிடமும் கண்டபோது, கடினமாக கண்டித்தார். ''ஆகையால் நீங்கள் கைக்கொள்ளும்படி அவர்கள் உங்களுக்குச் சொல்லுகிறயாவையும் கைக்கொண்டு செய்யுங்கள்; அவர்கள் செய்கையின்படியே செய்யாதிருங்கள்; ஏனெனில், அவர்கள் சொல்கிறார்கள், சொல்லியும் செய்யாதிருக்கிறார்கள்''(மத். 23:2). எனவே நாம் வசனத்தை கேட்கிறவர்களாய்மாத்திரமல்ல, அதன்படி நடந்து நல்ல மாதிரியாயிருக்க கவனமுள்ளவர்களாக இருக்க வேண்டும். பிள்ளைகளை நாம் மற்றொரு வகையில் இடறப் பண்ணுகிறோம். அது நமது வார்த்தையினாலேயே! ''பிள்ளைகளே! நீங்கள் கர்த்தர் மேல் விசுவாசமாக இருக்கவேண்டும்" என அறிவுரை கூறுகிறோம். ஆனால் ஒவ்வொரு நாளும் நமது வாயில் இருந்துவரும் என்ன வார்த்தைகளை கேட்கிறார்கள்? நாம் பேசுகிற விசுவாச வார்த்தைகளை கேட்டு தேவன் மேல் நம்பிக்கை வைக்கிறார்களா? அல்லது அவிசுவாசமான வார்த்தைகளை கேட்கிறார்களா? ''இவையெல்லாம் கொடுப்பதற்கு அப்படி பணம் கிடைக்காதே, ஐயோ தெரியவில்லையே நமக்கு சாப்பாடு கிடைக்குமோ கிடைக்காதோ தெரியவில்லையே!?

''எனக்கு ஏதோ வியாதி வரும்போல் தெரிகிறதே! நாம் வயதாகி விட்டால் எப்படி வாழப்போகிறோமோ தெரியவில்லையே!'' இப்படி பயம் நிறைந்த வார்த்தைகளையே பிள்ளைகள் கேட்கிறார்களா? இப்படிப்பட்ட வார்த்தைகளை கேட்பார்களானால் அவர்கள் தேவனுக்கு நேராக வைத்திருக்கும் விசுவாசத்தில் இடறுவது உறுதி.

''இருதயத்தின் நிறைவினால் வாய் பேசும்; மனுஷர் பேசும் வீணான வார்த்தைகள் யாவையும் குறித்து, நியாயத்தீர்ப்பு நாளிலே கணக்கொப்புவிக்க வேண்டுமென்று உங்களுக்கு சொல்லுகிறேன். ஏனெனில், உன் வார்த்தைகளினாலே நீதிமான் என்று தீர்க்கப்படுவாய் அல்லது உன் வார்த்தைகளினாலே குற்றவாளி என்று தீர்க்கப்படுவாய் என்றார்''(மத். 12:34 36,37; யாக். 3:2). ''நாம் எல்லோரும் அநேக விஷயங்களிலே தவறுகிறோம்; ஒருவன் சொல் தவறாதவனானால் அவன் பூரண புருஷனும் தன் சரீர முழுவதையும், கடிவாளத்தினாலே அடக்கிக் கொள்ளக்கூடியவனுமாயிருக்கிறான் என கூறப்பட்டுள்ளது. தேவனுக்குள் பக்தி விருத்திக்கு ஏதுவான வார்த்தைகளை மாத்திரமே பேச கவனமுள்ளவர்களாக இருப்போமாக. பிள்ளைகளை இடறிப் போகப்பண்ணும் மற்றொரு காரணத்தை எபேசியர் 6:4ல் ''பிதாக்களே, நீங்களும் பிள்ளைகளைக் கோபப்படுத்தாமல் கர்த்தருக்கேற்ற சிட்சையிலும், போதனையிலும் அவர்களை வளர்ப்பீர்களாக'' என காண்கிறோம்.

இதை கொலோசெயர் 3:21ல் ''பிதாக்களே, உங்கள் பிள்ளைகள் திடனற்றுப் போகாதபடி அவர்களுக்குக் கோபமூட்டாதிருங்கள்'' என தெளிவாகக் காண்கிறோம். அவர்கள் மேல் கடினப்படும் போது, அவர்களைக் கோபப்படுத்தும் போது அவர்கள் சோர்ந்து போவார்கள். தங்களைத் தாங்களே உள்ளத்தில் குறைத்து கணக்கிட ஆரம்பிப்பார்கள். எனவே அவர்களின் ஆவியை முறித்துப் போடாதீர்கள்.

பெற்றோராகிய நாம் நமது பிள்ளைகளை கோபப்படுத்தாதபடி விசேஷமாக கவனிக்க வேண்டும். நாம் நினைக்கிறபடி, அல்லது நாம் சொல்லுகிற அளவிற்கு அவர்கள் காரி

யத்தைச் செய்யவில்லையென்றால், நாம் பிள்ளைகளின் மேல் கோபமடைகிறோம். நாம் எப்படி பிரச்சனைகளை தீர்க்கின்றோமோ அதே போல், அவர்களும், தங்கள் பிரச்சனைகளை தாங்களே தீர்க்க வேண்டும் என எதிர்பார்க்கிறோம். பெரியவர்களைப் போல தாங்கள் சோர்புகளை மேற்கொள்ள வேண்டுமென எண்ணுகிறோம். ஆனால் பிள்ளைகள் நம்மைப் போல் எண்ணத்திலும், சரீரத்திலும் வளர்ச்சியடையவில்லை என்பதை கருத்தில் கொள்வோமாக. நாம் செய்கின்ற அனைத்தையும் அவர்கள் செய்ய இயலாது. சிறுபிள்ளை செய்ய முடியாத காரியத்தை செய்ய சொல்லுகிற பெற்றோர் அநேகர் உண்டு. அதை நான் பார்த்திருக்கிறேன். இப்படி செய்யச் சொல்லி தொந்தரவு செய்வது பிள்ளைகளின் வாழ்வில் சோர்வையும், கோபத்தையும் ஏற்படுத்தும், ''நான் செய்யும்படி கூறுகிறேன். அவனுக்கு என்ன கோபம் வருகிறது" இப்படிப்பட்ட சூழ்நிலைகள் உருவாகும்போது, பிள்ளைகள் கோபமடைந்து மீறுகிறவர்களாக ஆவதற்கு வழிவகுக்கிறது. நீதி11:29-ல் ''தன் வீட்டைக் கலைக்கிறவன் காற்றைச் சுதந்தரிப்பான்'' என எச்சரிக்கிறது.

மேற்கூறியவற்றை வாசித்த பெற்றோரே! பிள்ளைகளைக் குறித்து உமது நிலை என்ன? பிள்ளையை தேவன் கொடுத்த ஈவு என கருதுகிறோமோ? அல்லது சனியனே! பேயே! நாயே! என்று எரிந்து கொட்டுகிறோமோ? சிந்திப்பீர். நல்ல தீர்மானம் எடுப்பீர். அவர்கள் நமது யுத்தத்தில் பயன்படக்கூடிய கருவி (அம்பு) போன்றவர்கள். அவர்கள் நமது வாழ்க்கையின் நடக்கை, பேச்சின் மூலமாக அவர்கள் தேவனுடைய பாதையில் இடறும்படி செய்கிறோமோ? அப்படியானால் வேதம் என்ன கூறுகிறது? யார் நிமித்தம் இடறல் ஏற்படுகிறதோ, அவர்களுக்கு ஐயோ! எனவே விழித்தெழும்புவோம். நமது நடக்கை பேச்சின் மூலமாக அவர்கள் கிறிஸ்துவுக்குள் கட்டப்படும் படியாக கிறிஸ்துவை நாம் வெளிப்படுத்திக் காட்டுவோம். கர்த்தர் நமக்கு உதவிசெய்வாராக!

அத்தியாயம் 25

# வேத வசனமே வாழ்வில் செயலாக மாறட்டும்!

"நீ உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும்; உம் முழுப்பலத்தோடும் அன்புகூருவாயாக" இன்று நான் உனக்குக் கட்டளையிடுகிற இந்த வார்த்தைகள் உன் இருதயத்தில் இருக்கக்கடவது. நீ அவைகளை உன் பிள்ளைகளுக்கு கருத்தாய் போதித்து நீ உன் வீட்டில் உட்கார்ந்திருக்கிற போதும், வழியில் நடக்கிறபோதும், படுத்துக்கொள்ளுகிற போதும், எழுந்திருக்கிறபோதும் அவைகளைக் குறித்துப் பேசி, அவைகள் உன் கையின் மேல் அடையாளமாகக் கட்டிக்கொள்வாயாக. அவைகள் உன் கண்களுக்கு நடுவே ஞாபகக்குறியாய் இருக்கக்கடவது. அவைகளை உன் வீட்டு நிலைகளிலும்; உன் வாசல்களிலும் எழுதுவாயாக (உபா 6:5,9).

பிள்ளைகளுக்கு தேவனுடைய கட்டளைகளை கருத்தாய் போதிக்க வேண்டுமென மோசே கட்டளையிடுகிறார். அவர்களுக்கு போதிக்கக்கூடிய முறை என்னவென்றால் தொடர்ச்சியாக தேவனுடைய காரியங்களைக் குறித்தே பேசுவதாகும். நீ வீட்டில் உட்கார்ந்திருக்கிறதுபோதும், வழியில் நடக்கிறபோதும் படுத்துக்கொள்ளுகிறபோதும், தேவனுடைய கட்டளைகளைக் குறித்தே பேசவேண்டும். ஒரு நாளின் ஒவ்வொரு சூழ்நிலையிலும்; ஒவ்வொரு நிமிடமும் தேவனைக்குறித்தே பேசவேண்டும்.

உங்கள் பிள்ளைகளுக்கு தேவனுடைய வார்த்தை போதிக்கக்கூடிய சிறந்த வழி எதுவென்றால், அந்த நாளில் சம்பவங்களுக்கு ஏற்ற தேவனுடைய வார்த்தையை ஒப்பிட்டுக் கூறுவதாகும். பிள்ளைகள் சபை கூட்டத்தில் வாரத்திற்கு ஒக்

முறை கற்றுக்கொள்வது சில காரியங்களை மாத்திரமே. ஆனால் அவைகள் அந்த வாரமனைத்திற்கும் போதாது. அவர்கள் கற்றுக்கொள்ளுகிற காரியங்கள் மற்ற நாட்களில் வீட்டில் வைத்து தான் நடைபெறுகிறது. எனவே ஒவ்வொரு நாளும் தேவனுடைய வார்த்தைகள் பயன்படுத்தப்பட வேண்டும்.

எனது பிள்ளைகள் வாழ்க்கைக்குறித்தும், ஒவ்வொரு நாளும் நடைபெறுகிற காரியங்களைக்குறித்தும் என்னிடம் கேட்கிற வேளையில், தேவனுடைய வார்த்தை என்ன கூறுகிறதோ அதையே கூற முயற்சிக்கிறேன். சிறப்பாக சிறுபிள்ளைகள் ஒருவருக்கொருவர் எப்படி உறவு கொள்ள வேண்டும் என்பதை கற்றுக்கொடுக்க வேண்டும். சமீபத்தில் எனது மகன் அவனோடு விளையாடக்கூடிய மற்றொரு பையனால் தவறாக நடத்தப்பட்டதால் அவன் என்னிடம் வந்து, ''அப்பா நான் அவனை வெறுக்கிறேன், நான் அவனோடு ஒரு போதும் விளையாட விரும்பவில்லை என்றான்'' இந்த சந்தர்ப்பமானது மத்தேயு 6:44ல் கூறப்பட்ட ''உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காக ஜெபம் பண்ணவேண்டும்; மன்னிக்க வேண்டும்'' என்ற தேவனுடைய வார்த்தையை அவனோடு பகிர்ந்து கொள்ள ஏதுவாயிருந்தது. மேலும் ரோ. 12:21ல் கூறப்பட்ட ''நீ தீமையினாலே வெல்லப்படாமல், தீமையை நன்மையினாலே வெல்லு'' என்ற வார்த்தையையும் அச்சமயத்தில் பயன்படுத்த முடிந்தது.

சிறுபிள்ளைகளும் தேவனுடைய வார்த்தையை சூழ்நிலைக்கேற்றவாறு பயன்படுத்துவதற்கு கற்றுக்கொடுக்கவேண்டும். தேவனுடைய வார்த்தை தான் தங்கள் வாழ்விற்கு வழிகாட்டி என்பதை அவர்கள் அறிய வேண்டியது அவசியம். இந்த விஷயத்திலும் பெற்றோரின் மாதிரியான வாழ்க்கை மிகுந்த முக்கியம். தனது பெற்றோர் அனுதின வாழ்வில் தேவனுடைய வார்த்தையை செயல்படுத்துவதைப் பார்க்கும் போது பிள்ளைகளும் அதே வழியையே பின்பற்றுவார்.

ஞாயிற்றுக்கிழமை மாத்திரம் தேவனுடைய வார்த்தை தையைப் பிள்ளைகள் கேட்பார்களென்றால், இரண்டு காரியங்கள் சம்பவிக்கும். முதலாவது ஒவ்வொரு வாரமும் சொல்லப்படுகிற வார்த்தைகளை அவர்கள் மறந்துவிடுவார்கள். எனவே வேதவசனம் அவர்களுக்குள்ளே வேர் கொள்வதில்லை. இரண்டாவதாக தேவனுடைய வார்த்தை ஞாயிற்றுக்கிழமைக்கு மாத்திரம், தேவனுடைய வார்த்தை சபை கூட்டங்களுக்கு மாத்திரம் தான் என்றும், அந்த வசனத்தைக் கொண்டு தங்கள் அனுதின வாழ்க்கையில் எந்த பயனும் இல்லை என்ற நம்பிக்கைக்குள்ளாக வந்து விடுகின்றனர். வேத வசனத்தை எப்படி பயன்படுத்துவது என்று தெரியாத அநேக பெரியவர்களிடம் நான் ஆலோசித்துள்ளேன். அவர்கள் வாழ்க்கையில் ஸ்திரமாக நிற்க முடியாதபடி, அநேக பிரச்சனைகளுக்கு உள்ளாகிறார்கள். காரணம், தேவ வார்த்தை எப்படி தங்கள் வாழ்வில் பயன்படுத்த வேண்டும் என்பதை அறியாததினாலேயே! நாம் நமது பிள்ளைகளுக்கு இப்பொழுதே வேத வசனத்தை போதித்து, அதனை செயல்படுத்தக்கூடிய வகையை நாம் கற்பிக்கவில்லை என்றால் வரும் காலத்தில் நமது பிள்ளைகளின் நிலைமையும் பிரச்சனையுள்ளவைகளாகவே இருக்கும்.

மேலும், நமது பிள்ளைகள் தேவ வசனத்தை கற்றுக் கொண்டு செயல்படுத்தும்போதும், அதை சரியான முறையில் பயன்படுத்த நாம் உதவி செய்ய வேண்டும். கடந்த ஆண்டு ஒரு நாள், எனது நான்கு வயது நிரம்பிய மகள் கதறி அழுது கொண்டிருந்தாள். நான் சம்பவித்தது என்ன என காணும் படி ஓடிச் சென்றேன். அப்போது அவள் அண்ணன் அடித்து விட்டான் என கூறினாள். நான் 6 வயது நிரம்பிய அவனிடம் ஏன் தங்கையை அடித்தாய் என கேட்டேன். அவன் என்னை சற்று நேரம் பார்த்துவிட்டு, ''அப்பா வேத வசனம் சொன்ன காரியத்தையே நான் செய்தேன்" என்றான். இதை கேட்ட மாத்திரத்தில் நான் அதிர்ச்சியுற்றேன். பின் என்ன சொன்னாய் என விவரமாகக் கேட்டேன். அவன் நல்லது என கூறி அப்பா வேதத்தில் ''மற்றவர்கள் உங்களுக்கு எதைச்

செய்ய விரும்புகிறீர்களோ அதையே மற்றவர்களுக்கு செய்யுங்கள் என வேதம் கூறுகிறதல்லவா? எனவே தங்கை என்னை முதலாவது அடித்தாள். எனவே அவள் அடியை விரும்புகிறாள் என நினைத்து அடித்தேன் என்றான்". இந்த சந்தர்ப்பத்தில் நான் தேவனுடைய வார்த்தையை நம்முடைய சாதகமான காரியத்திற்கு அல்ல, கவனமாக பயன்படுத்த வேண்டும் என விளக்கிக் கூறினேன். ஒரு பக்கம் அவன் வேத வசனத்தை தன் வாழ்வில் பயன்படுத்த முயலுகிறான் என்பதை அறிந்து சந்தோஷப்பட்டேன்.

அருமை பெற்றோரே! நமது பிள்ளைகளுக்கு வேத வசனத்தை கருத்தாய் அனுதினமும் போதிப்போம். நமது அன்றாட வாழ்வில் வேதவசனத்தை செயல்படுத்துவோம். நமது பிள்ளைகளுக்குச் செயல்படுத்தும்படியாக கற்பிப்போம்.

அத்தியாயம் 26

# பிள்ளைகளின் வளர்ப்பு!

ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நிமிஷமும் பிள்ளைகளை பழக்குவியுங்கள்.

''நீ உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழுஆத்துமாவோடும், உன் முழு பலத்தோடும் அன்புகூருவாயாக. இன்று நான் உனக்கு கட்டளையிடுகிற இந்த வார்த்தைகள் உன் இருதயத்தில் இருக்கக்கடவது. நீ அவைகளை உன் பிள்ளைகளுக்கு கருத்தாய் போதித்து, நீ உன் வீட்டில் உட்கார்ந்திருக்கிற போதும், வழியில் நடக்கிற போதும், படுத்துக் கொள்ளுகிற போதும், எழுந்திருக்கிற போதும் அவைகளை குறித்து பேசி, அவைகளை உன் கையின் மேல் அடையாளமாக கட்டிக் கொள்வாயாக. அவைகள் என் கண்களுக்கு நடுவே ஞாபகக் குறியாய் இருக்கக் கடவது. அவைகளை உன் வீட்டு நிலைகளிலும், உன் வாசல்களிலும், எழுதுவாயாக (உபா. 6:5-9).

ஜனங்கள் தங்களுடைய பிள்ளைகளுக்கு வேதவசனத்தை கருத்தாய் போதிக்க வேண்டுமென இடப்பட்ட கட்டளையை மேலே காண்கிறோம். அதை போதிக்க வேண்டிய முறையாவது தொடர்ச்சியாக தேவனுடைய காரியங்களைக் குறித்து பேசுவதே. உட்காரும்போதும், எழுந்திருக்கும் போதும், நடக்கும் போது, அந்த நாளின் ஒவ்வொரு சூழ்நிலையிலும் தேவகாரியங்களையே பேச வேண்டுமென கூறப்பட்டுள்ளது. பிள்ளைகளுக்கு வேத வசனத்தை போதிக்கக் கூடிய சிறந்த முறை எதுவென்றால், அந்த நாளின் சூழ்நிலைகள் (அல்லது) சம்பவங்களுக்கேற்ற வசனங்களை எடுத்து சுட்டிக்காட்டுவதாகும். பிள்ளைகள் சபை கூட்டங்களில் சில காரியங்களை கற்றுக் கொள்ளலாம். ஆனால் அங்கு சொற்ப நேரமே கற்றுக்-

கொள்கிறார்கள், அவர்கள் பெரும்பாலான காரியங்களை வீட்டில்தான் கற்றுக் கொள்கிறார்கள். எனவே, வீட்டில் ஒவ்வொரு நாளும் வேத வசனங்கள் பயன்படுத்த வேண்டும்

எனது பிள்ளைகள் ஒவ்வொரு நாளும்அன்றாட நிகழ்ச்சிகளை குறித்து என்னிடம் ஏன்?எப்படி என கேள்விகள் எழுப்பும் போது; அதை குறித்து வேதவசனம் என்ன சொல்லுகிறதோ அதையே சொல்ல முயற்சிக்கிறேன். இதில் சிறப்பாக பிள்ளைகள் ஒருவரோடொருவர் எங்ஙனம் இருக்க வேண்டுமென்பதை போதிக்க வேண்டும். சமீபத்தில் எனது மகன் தன்னுடன் விளையாடும் மற்றொரு பையனால் தவறாக நடத்தப்பட்டான். எனது மகன் என்னிடம் வந்து தான் அவனோடு விளையாட விரும்பவில்லை எனவும், தான் அவனை வெறுப்பதாகவும் கூறினான். மத். 5:44-ல் கூறப்பட்ட, ''உங்களை துன்பப்படுத்துகிறவர்களுக்காக ஜெபியுங்கள்'' என்ற வசனத்தை அவனுடன் பகிர்ந்து கொள்ள அது ஏற்ற சமயமாக இருந்தது. மேலும் இதைப் போல் சந்தர்ப்பங்களில் நீ தீமையினாலே வெல்லப்படாமல் தீமையை நன்மையினாலே வெல்லு" (ரோ, 12:21) என்ற வசனங்களை பயன்படுத்துவது அச்சமயத்திற்கு ஏற்றதாக இருக்கும். சிறு பிள்ளைகள் தங்கள் வாழ்க்கையில் வேத வசனத்தை பயன்படுத்தக் கற்றுக் கொடுக்க வேண்டும். வேத வசனம் தங்கள் வாழ்விற்கு வழிகாட்டி என்பதை அவர்கள் அறிய வேண்டும். மறுபடியுமாக பெற்றோரின் மாதிரியான வாழ்க்கை மிகவும் முக்கியம். நாம் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு சந்தர்ப்பங்களிலும் வேத வசனத்தை பயன்படுத்துவதை அவர்கள் கண்டால் அவர்களும் அப்படியே செய்வார்கள் என்பது உறுதி.

**பிள்ளைகள் தங்கள் பெலவீனங்களை மேற்கொள்ள உதவி செய்யுங்கள்:-**

நாம் நமது பிள்ளைகளைக் குறித்து நன்கு அறிந்திருந்தால் மாத்திரமே, அவர்கள் தங்கள் பெலவீனங்களிலிருந்து மேற்கொள்ள நாம் உதவி செய்ய இயலும். நாம் பிள்ளைகளோடு உள்ள தொடர்பை அதிகரிக்க அவர்களோடு நேரம் செல

வழிக்க வேண்டும். தகப்பன் அடிக்கடி வீட்டில் இல்லாதபடி வெளியே சென்றாலும், விசேஷமாக பிள்ளைகளோடு உள்ள உறவை கட்டி எழுப்ப, தங்கள் நேரத்தை செலவழிக்க வேண்டும். தாயும் தனது வீட்டு வேலைகள், உத்திரவாத மான பொறுப்புகள் இவைகளை கவனிப்பதில் சுறுசுறுப்பாக இருக்க, பிள்ளைகளோடு நேரம் செலவழிக்க இயலாமல் போய் விடும். நாம் பிள்ளைகளோடு பேச வேண்டும். அவர் கள் பேசுவதை நாம் கேட்க வேண்டும். அது மாத்திரமல்ல, அவர்கள் நடத்தையை நன்கு கவனித்து அவர்களின் நோக் கத்தையும், மனநிலையையும் குறித்து கலந்து ஆலோசிக்க வேண்டும்.

உங்கள் பிள்ளைகளின் பெலவீனத்தை எங்கே கண்டுபிடிப் பீர்கள்? அது முதலாவது உங்களை காணும்போதே! தாய், தகப்பனுடைய பெலவீனங்கள் எதுவோ அதுவே பிள்ளை களின் பெலவீனங்களாக இருக்கும். நமக்கு அநேகமாக குடும்ப பெலவீனங்கள் உண்டு. அதை ஒரு சந்ததியில் இருந்து மறு சந்ததிக்கு அப்படியே கடத்திவிடுகிறோம். பல தடவை இந்த 'குடும்ப பிசாசுகளையே' நாம் மாற்றி விடு கிறோம். இதனை சில வேத வசனங்களில் இருந்து காணலாம்.

முதலாவது, ஆபிரகாமிலே இதை நாம் காண்போம். ஆதியாகமம் 12:11-20 ஆகிய வசனங்களையும், ஆதி. 20:1-18 உள்ள வசனங்களையும் வாசித்துப் பாருங்கள்.

முதலாவது, எகிப்திலும் பின் கேராவிலும் ஆபிரகாம் தனது உயிருக்கு ஆபத்து வரும் என பயந்ததையும், அதினி மித்தம் சாராள் ராஜாவிடத்தில் சகோதரி என கூறியதை யும் காண்கிறோம். ஆபிரகாம் பயந்ததினால் இப்படிப்பட்ட நிலையில் செயல்பட்டதை காண்கிறோம். இதன் பின் அவனது மகனாகிய ஈசாக்கின் நிலையை கவனியுங்கள். ஆதி. 26:6-11 வரை வாசித்துப் பாருங்கள். ஆபிரகாம் தனது குடும்ப பெலவீனமாகிய பயத்தை தனது மகனாகிய ஈசாக்கிற்கும்

கடத்தி விட்டான். எனவே ஈசாக்கும் பயந்து போய் கேரா ரிலே தன் மனைவியை சகோதரி என அபிமலேக்கு ராஜா விடத்தில் கூறுவதைக் காண்கிறோம் இதே ராஜாவிடத்தில் தான் ஆபிரகாமும், மனைவியை சகோதரி என பயத்தினிமித்தம் கூறினன். தன் தகப்பன் எந்த பயத்தில் இருந்தானே, அதே பயத்தில் மகனும் இருப்பதை காண்கிறோம்.

இதேபோன்ற நிலையை தாவீதின் வீட்டாரிடத்தில் காண்கிறோம். தாவீதிற்கு பெண்களைக் குறித்த காரியத்தில் பெலவீனம் இருந்தது உண்மை. அவனது குடும்ப பெலவீனம் இச்சையாகும். தாவீது பத்சேபாளை இச்சித்து தனது வீட்டுக்கு துக்கத்தை வருவித்ததை II சாமுவேல் 11:12 வசனங்களில் காண்கிறோம். தாவீதுக்கு மனைவிகளும், மறுமனையாட்டிகளும் இருந்ததைக் காண்கிறோம் (II சாமு. 5:13), (I நாளா. 3:1.5). தாவீதுக்கு சுமார் 7 மனைவிகளும் 10 மறு மனையாட்டிகளும் இருந்ததாகக் கூறுகிறது
(II சாமு. 20:3).

தாவீதின் மகனுகிய சாலொமோன் தகப்பனின் இந்த பெலவீனத்தை உடையவனுக இருந்தான். அதை I இராஜா. 11:1-4 வசனங்களில் காண்கிறோம். சாலொமோனுக்கு 700 மனைவிகளும் 300 மறு மனையாட்டிகளும் இருந்ததாகக் காண்கிறோம். இந்த பெலவீனமானது கர்த்தரை விட்டு தூரமாக செல்லும்படி வைத்தது.

எனது குடும்பத்தில் ஒவ்வொரு சந்ததியாக தொற்றி வரும் ஒரு பெலவீனத்தை சில வருடங்களுக்கு முன்பதாக உணர்ந்தேன். பயம் எனக்கு அதிக பிரச்சனையாக இருந்தது. இந்த பயத்தை எனது தாயிடமிருந்தே நான் பெற்றேன் என்பதைக் கண்டேன். எனது தாயாரிடம் பேசும் போது அவர்களது தாயாருக்கும், தாயாரின் தாயாருக்கும் பயம் அதிகமாக இருந்தது என்பதை அறிந்து கொண்டேன். நான் அறிய 4 தலைமுறை வரை பயம் தொடர்ந்து வந்து

கொண்டேயிருந்தது. 100 ஆண்டு காலமானாலும், இந்த குடும்ப பெலவீனமாகிய பயம் தொடர்ந்து கொண்டே வந்தது. ஒருவரும் இதை உணரவும் இல்லை, நிறுத்தக்கூடிய வழியையும் அறியவில்லை. ஆனால் தேவன் 1974 ஆம் ஆண்டு என்னை அதிலிருந்து விடுதலையாக்கினார். எனது மகனிடம் என்னில் இருந்த அதே பயத்தைக் கண்டேன். ஆனால் இனி அது எனது பிள்ளைகள் யாருக்கும் இருக்கப்போவதில்லை. பயத்தைக் குறித்து வேதம் என்ன கூறுகிறது என்பதை யும், அதை எப்படி மேற்கொள்வது என்பதையும் அவனுக்குப் போதிக்கிறோம். குடும்பத்தின் அடிமைத்தனமாகிய பயம் முறிந்தது. எனது மகனுக்கு ஜெயம் உண்டு. நமது பிள்ளை கள் பெலவீனங்களை எப்படி மேற்கொள்ள வேண்டும் என் பதை கற்றுக் கொடுப்பது அவசியம். தங்கள் வாழ்வில் எங் நனம் வேத வசனத்தை பயன்படுத்த வேண்டும் என கற்றுக் கொடுக்க வேண்டும். அப்பொழுது நமது பிள்ளைகள் ஜெயம் கொள்ளுகிறவர்களாக நாம் வளர்க்கிறோம். ஒவ்வொரு சந் ததியும் அதிகமான பலம் கொண்டு கிறிஸ்துவுக்குள் வெற்றி சிறக்கிறவர்களாக காணப்படுவார்கள். ஒரு சந்ததியில் இருந்து மற்றொரு சந்ததிக்கு இந்த குடும்ப பெலவீனமாகிய பிசாசு கடந்து செல்வதற்கு அனுமதிக்கக் கூடாது. பெற் றோராகிய நாம் இதை சரிவர கவனித்தல் முக்கியம்.

## அத்தியாயம் 27

# குடும்ப உறவு முறைகள்

**தண்டனையின் பிரம்பு:-**

எபிரெயர் 12:6ல் "தாம் சேர்த்துக் கொள்ளுகிற எந்த மகனையும் தண்டிக்கிறார்" என்று கூறப்பட்டுள்ளதைக் காண்கிறோம். தண்டிக்கிறார் என்ற வார்த்தைக்கு சவுக்கடி என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது. யூதர்களுக்கு இது பழகின ஓர் வார்த்தை. யூதர்கள் அவர்கள் வழக்கத்தின்படி 39 முறை அடிப்பார்கள். இதைத்தான் II கொரி. 11:24ல் யூதர்களால் ஒன்று குறைய நாற்பது அடியாக ஐந்து தரம் அடிப்பட்டேன் என பவுல் கூறுவதைக் காண்கிறோம். எனவே தேவனும் தான் சேர்த்துக் கொள்ளுகிற மகனை ஒழுங்கு படுத்தும்படியாக அப்படியாக தண்டிக்கிறார்.

பெற்றோராகிய நாம் நம்முடைய பிள்ளைகளை தண்டித்து ஒழுங்கு படுத்தவேண்டுமென கூறியுள்ளார்.

"பிள்ளையை தண்டியாமல் விடாதே; அவனைப் பிரம்பினால் அடித்தால் அவன் சாகான். நீ பிரம்பினால் அவனை அடிக்கிறதினால் பாதாளத்துக்கு அவன் ஆத்துமாவை தப்புவிப்பாயே" (நீதி. 23:13,14).

"பிள்ளையின் நெஞ்சின் மதியீனம் ஒட்டியிருக்கும்; அதை தண்டனையின் பிரம்பு அவனை விட்டு அகற்றும்" (நீதி. 22:15).

"பிரம்பும் கடிந்து கொள்ளுதலும், ஞானத்தைக் கொடுக்கும். தன் இஷ்டத்திற்கு விடப்பட்ட பிள்ளையோ தன் தாய்க்கு வெட்கத்தை உண்டுபண்ணுகிறான்" (நீதி. 29:15).

"பிரம்பை கையாடாதவன் தன் மகனைப் பகைக்கிறான்; அவன் மேல் அன்பாயிருக்கிறவனோ அவனை ஏற்கனவே தண்டிக்கிறான்" (நீதி. 13:24).

நீதி. 23:13, 14ல் கூறப்பட்ட 'அடித்தல்' என்ற வார்த்தையும் 'தண்டித்தல்' என் வார்த்தையைப் போன்றதே.

பிள்ளைகளை தண்டிப்பதற்கு கோல் அல்லது பிரம்பை நாம் கையாட வேண்டும் என்று வசனம் கூறுவதைக் காண்கிறோம். பிரம்பினால் அடித்தால் அவன் சாகான் என வேதம் கூறுவது மாத்திரம் அல்லாத அவன் ஆத்துமாவை பாதாளத்திற்கு விலக்கி விடுவிக்கிறோம் என காண்கிறோம். அது மாத்திரமல்ல, அவன் மதியீனத்தை பிரம்பு அகற்றும் என்றும் காண்கிறோம். பிரம்பு மதியீனத்தை நீக்குவது மாத்திரமல்ல, அவனுக்கு ஞானத்தைக் கொடுக்கும் என காண்கிறோம்.

மேற்கண்ட எல்லா காரியத்திலும் தேவ ஆவியானவரின் நடத்துதலின்படி, எவ்வப்பொழுது தண்டிக்க வேண்டுமோ, அப்பொழுது மாத்திரமே தண்டிக்க வேண்டும். பிள்ளைகளுக்கு என்ன தேவை என்பதை நாம் அறிந்திருப்பதைக் காட்டிலும், கர்த்தர் நன்கு அறிவார். தேவனுடைய வழியில், தேவனுடைய மனோ நிலையிலே, தேவனுடைய இருதயத்தின்படி பிள்ளைகளை ஒழுங்குபடுத்துவதில் நாம் கவனமுள்ளவர்களாக இருக்க வேண்டும்.

தேவன் தமது பிள்ளைகளாகிய இஸ்ரவேலரை கடுமையாக தண்டித்தும், எப்பொழுதும் அவர்களிடம் அன்பு செலுத்தக்கூடிய இருதயம் தேவனுக்கு இருந்தது. அவர்களின் பாவத்தை மன்னித்தார், அதை மறந்தும் விட்டார். நம்முடைய பிள்ளைகளை அப்படியே தண்டித்தும், பின் அன்பு செலுத்துகிறவர்களாகவும், அவர்கள் செய்த தவறை, நாம் மறந்து விட்டு; அவர்களோடு முன்பு உள்ள தொடர்பைப் போலவே தொடர்பு உள்ளவர்களாகவும் இருக்க வேண்டும்.

நாம் நமது கோபத்திலே பிள்ளைகளை தண்டிக்காதபடி இருக்க கவனமாக இருக்க வேண்டும். ஏனெனில் மனுஷருடைய கோபம் தேவனுடைய நீதியை நடப்பிக்க மாட்டாதே! நாம் தண்டித்து ஒழுங்கு படுத்துவதின் நோக்கம் "நீதியாகிய சமாதான பலனைத் தரும்படிக்காகவே".

(எபி. 12:11)

பிள்ளைகளை ஒழுங்குபடுத்தும் முறையில் பிரம்போடு கூட கீழ்க்கண்ட முறைகளையும் பயன்படுத்தலாம். நிபந்தனையையும், காரியங்களுக்கு எல்லையையும் விதித்தல். தேவன் இஸ்ரவேல் ஜனங்களை ஒழுங்குபடுத்திய முறையில் இதுவும் ஒன்றாகும். எனவே, அவர்கள் தேவனின் நிபந்தனைக்கு கீழ்ப்படியாததால் பலமுறை தேவன் அவர்களை அடிமைகளாக ஒப்புக்கொடுத்தார். எனவே பரிசுத்தாவியின் உதவியினால் நாமும் அப்படியே பிள்ளைகளை ஒழுங்குபடுத்தலாம். பிள்ளைகளை ஒழுங்குபடுத்துகிற காரியத்தை விட்டு அடுத்த பகுதிக்குள் செல்லும் முன்பதாக பெற்றோர்கள் அறிய வேண்டிய இரண்டு பிரச்சனைகளை கண்டு கொள்வது நல்லது.

பிள்ளைகள் கோபமடையும்போது தொடர்ந்து கோபத்துடன் அவர்களை இருக்கவிடக்கூடாது. கலாத். 5:20ன்படி கோபம் மாம்சத்தின் கிரியைகளில் ஒன்று. கிறிஸ்தவர்களாகிய நாம் மாம்சத்தின் கிரியைகளை சிலுவையில் அறையவேண்டும். அதே போல நம்முடைய பிள்ளைகளும் மாம்சத்தின் விருப்பங்களை அடக்கி ஆள கற்றுக்கொடுக்க வேண்டும். அவர்கள் தங்களுக்குத் தாங்களே அடக்கியாள தெரியாவிட்டால் மதிலில்லாத இடிந்த பட்டணம் போல் காணப்படுவார்கள். (நீதி. 25:28). மற்றொரு வார்த்தையில் கூறுவோமானால் தங்களது சத்துருக்களை எதிர்க்கக்கூடிய திறமையில்லாமல் காணப்படுவார்கள். எனவே அவர்களுக்கு எந்தவித பாதுகாப்பும் இல்லை. எனவே அவர்கள் உணர்ச்சி வசத்தினால் கட்டுப்படுத்தப்படுகிறார்கள், சூழ்நிலைகளால் கட்டுப்படுத்தப்படுகிறார்கள். மற்றவர்களால் கட்டுப்படுத்தப்படுகிறான். பிறர் தொடர்பாக பிசாசினால் கட்டுப்படக்கூடிய ஓர் இடத்திற்கு வந்துவிடுகிறார்கள்.

இரண்டாவதாக, பிள்ளைகள் பெற்றோர்களுக்கிடையே கிரியை செய்து ஒருவருக்கொருவர் இடையில் விரோதத்தை ஏற்படுத்துகின்றனர். உதாரணமாக மகன் அம்மா

விடம் சென்று "அம்மா அப்பா என்னை விளையாட அனு மதிக்கவில்லை, என்னை திட்டிவிட்டார்கள்" என்று கூறும் போது, ஏன் அடித்தார்கள் என்று தாய் அதைக் குறித்து சிந்திக்காதபடி பையனுக்காக அனுதாபப்பட்டு, "சரி நீ போய் விளையாடு, அப்பா வந்தபின் நான் அவர்களோடு பேசிக் கொள்கிறேன்" என்று கூறினால், மகன் தனது காரியத்தில் ஜெயித்து விட்டான். இதனால் தாய் தகப் பனுக்கு இடையே பிரச்சனை மாத்திரமல்ல, பிள்ளையான வன் மற்ற காரியத்திலும் தகப்பன் கூடாது என்பதை தாயிடம் சென்றால் அனுமதி தருவார்கள் என்று உறுதி யான நம்பிக்கை கொள்ளுகிறான். நாளடைவில் பையன் பெற்றோர் இருவருக்குமே கீழ்ப்படியாதவனாக மாறிவிடு கிறான். எனவே பிள்ளைகளை வளர்க்கும் காலத்தில் தகப்ப னும் தாயும் கலந்து ஆலோசித்து செயல்படவேண்டும். பிள்ளைகள் முன் கணவன், மனைவி வாதாடவோ, சண்டை யிடவோ கூடாது. கடைசியாக கூறுவது யாதெனில் தகப்பன் தன் மனைவி பிள்ளைகளிடம் பயன்படுத்திய அதி காரத்தை சரிதான் என்று கூறவேண்டும். அதே போல் கணவன் பிள்ளையை கண்டித்து அதிகாரத்தை செலுத்தும் போது அது சரிதான் என மனைவி ஆதரிக்கவேண்டும். அப்போது பிள்ளைகள் பெற்றோர் இருவருக்கு இடையே யுள்ள ஒருமனபாட்டை அறிந்து கொள்வார்கள்.

சவுல் சபையை துன்புறுத்தும் போது "சவுலே, சவுலே ஏன் என்னை துன்பப்படுத்துகிறாய்" என இயேசு இடைப் பட்டு கேட்டார். இதில் உள்ள கிறிஸ்துவுக்கும் சபைக்கும் இடையே உள்ள ஒருமனப் பாட்டை போல்; கண வனுக்கும் மனைவிக்கும் இடையே இருக்க வேண்டும்.

அத்தியாயம் 28

# கர்த்தருடைய வார்த்தையை முற்றிலும் கைக்கொள்வதே நமது கடமை

குடும்பத்தில் உள்ள அனைவரும் அனைத்து வேத வசனங்களுக்கும் கீழ்ப்படிய வேண்டும் என அறிவின் பிரகாரமாக ஒத்துக்கொள்கின்றனர். எனினும் அதன்படி வாழ்வதில்லை. அனைத்து வசனங்களும் குடும்ப உறவு முறைகளுக்கு சம்பந்தப்பட்டதே என்பதை நாம் அறிய வேண்டும்.

மனந்திரும்புதலும், மன்னிப்பின் காரியமும் குறித்து ஆண்டவர் கூறும்போது லூக்கா 17:3-5ல் சகோதரன் தான் செய்த தவறுக்காக வந்து மனஸ்தாபப்படும்போது மன்னிக்க வேண்டும் என்றும், மத் 6:14,15-ல் மனுதருடைய தப்பிதங்களை நாம் மன்னித்தால், உங்கள் பரம பிதா உங்களுக்கும் மன்னிப்பார். நீங்கள் மன்னியாதிருந்தால் உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களையும் மன்னியார் என்பதாகக் காண்கிறோம். இவ்வசனத்தின்படி குடும்பத்தில் ஒவ்வொருவரும் மனஸ்தாபப்படவும், மற்றவர்களை மன்னிக்கவும் ஆயத்தமாக இருக்க வேண்டும். தகப்பன்மார்கள் அநேகர் தாங்கள் செய்த தவறுக்காக குடும்பத்தில் மனஸ்தாபப்பட்டு மன்னிப்புக் கேட்பது இல்லை. தகப்பனும், தாயும் வேத வசனத்திற்கு மேலானவர்கள் அல்ல. அவர்கள் வேத வசனத்திற்கு கீழ்ப்பட்டவர்களே! அவர்களும் தவறிழைக்கும்போது ஒருவருக்கொருவர் மன்னிப்புக் கேட்க வேண்டும். அப்போது மாத்திரமே நமது பிள்ளைகளுக்கு நாம் ஒரு நல்ல மாதிரிகளாயிருப்போம். அப்படி இல்லாத பட்சத்தில் தேவனுடைய வார்த்தைக்குக் கீழ்ப்படி என்று பிள்ளைகளிடத்தில் எப்படி சொல்ல இயலும்.

அதுமாத்திரமல்ல. பிலிப்பி 2:3,4; ரோமர் 12:10; 15:1,2-ன்படி மற்றவர்களிடம் அன்பு கூரவேண்டும். பெலவீனமுள்ளவர்களைத் தாங்க வேண்டும். மற்றவர்களின் தேவையை முதலாவது எண்ண வேண்டும். இப்படி குடும்பத்தில் மற்றவர்களின் தேவையை முதலாவது சந்திக்க முற்படுவோமானால், குடும்பத்தில் எத்தனை பிரச்சனைகளை தீர்க்க இயலும் என்பதை சற்று சிந்தித்துப் பாருங்கள். மேலும் எபி 3:13ன்படி ஒருவருக்கொருவர் புத்தி சொல்ல வேண்டும். உற்சாகப்படுத்த வேண்டும். அன்புக்கும் நற்கிரியைக்கும் ஏவப்படும்படி ஒருவரை ஒருவர் கவனிக்க வேண்டும் என்றும் காண்கிறோம் (எபி 10:24). ஒவ்வொருவரும் உற்சாகப்படுத்த வேண்டியது அவசியம். சிறப்பாக சிறுபிள்ளைகள் தேவனுக்கேற்ற வழியில் நடக்க அவர்களுக்கு ஒவ்வொரு நாளும் புத்தி சொல்ல வேண்டும். உற்சாகப்படுத்த வேண்டும். இப்படி குடும்பத்தில் தேவனுடைய வார்த்தையை கொண்டு நடப்போமானால் சமாதானமும் ஒற்றுமையும் குடும்பத்தில் நிலவும். அப்போது தேவனுடைய அன்பில் ஒவ்வொருவரும் வளர இயலும்.

**குடும்பத்தில் பெற்றோரில் ஒருவர் மாத்திரம் இரட்சிக்கப்பட்டவராயிருந்தால்:-**

கணவனும், மனைவியும் ஒருமித்து தேவனுடைய வழியில் நடந்து பிள்ளைகளை கர்த்தருக்கேற்ற வழியில் பழக்குவிக்க வேண்டுமென்பதே தேவனுடைய திட்டமாக இருக்கிறது. இருந்த போதிலும், இன்றைக்கு அநேக குடும்பங்களில் தாய் மாத்திரமே இரட்சிக்கப்பட்ட நிலையில் காண இயலுகிறது. அவர்கள் மாத்திரம் ஆவிக்குரிய பாதையில் நடப்பது சற்று சிரமமானது தான். எனினும் ஒரு தாய் தனது பிள்ளைகளை கர்த்தருடைய வழியிலே நடத்த இயலும். தீமோத்தேயு இதற்கு நல்ல ஓர் உதாரணம். அப்.16:1-3ல் இதைக் காண்கிறோம். அவனுடைய தாய் ஓர் யூத விசுவாசி. தகப்பன் கிரேக்கன். ஆனால் தீமோத்தேயு நற்சாட்சி பெற்றவனாய் காணப்பட்டான். அதை II தீமோ. 1:5ல் காண்கிறோம். தாய் மாத்திரம் இரட்சிக்கப்பட்ட சூழ்நிலையிலே தீமோத்தேயு

வளர்க்கப்பட்டான். அவனை பெரிய தேவனுடைய மனிதனாக வளர்த்தாள். அவனைக்குறித்து பவுல் கூறும்போது ''உங்களை உண்மையாய் விசாரிப்பதற்கு என்னைப் போல மனதுள்ளவன் என்றும், உத்தம குணத்தை உடையவன் என்றும் கிறிஸ்து இயேசுவுக்குரியதையே தேடுகிறவன்'' என்றும் குறிப்பிட்டுள்ளார் (பிலி. 2:8-22). தீமோத்தேயுவின்தாயாகிய ஐனிக்கேயாளுக்கே நல்ல ஓர் தேவ மனுஷனாக தனது பிள்ளையை மாற்ற சாத்தியமாக முடியுமென்றால் அது நமக்கும் சாத்தியமன்றோ. ஒரு வேளை அதற்கு ஜெபமும், பல உபவாசங்களும் தேவைப்படலாம். சில காலங்கள் அதற்காக தேவனுடைய சமுகத்தில் போராட வேண்டியதிருக்கும். அப்படிச் செய்வோமானால் நமது பிள்ளைகளும் தேவனுடைய வழியில் நடக்க நாம் காண்போம்.

**பிள்ளைகள் தவறான வழியில் செல்லாமல் தடுப்பது எங்ஙனம்?**

பல வருடங்களாக கிறிஸ்தவ குடும்பத்தில் வளர்க்கப்பட்ட பிள்ளைகள் பிராயம்வரும்போது தேவனுடைய வழியை விட்டுத் தவறிச் செல்வதைக் கண்டிருக்கிறோம், அக்குடும்பத்திலுள்ள பெற்றோர் மேற்கண்டபடி கர்த்தருடைய வழியில் அவர்களை நடத்தியிருக்கலாம். அவர்களுக்கு முன்மாதிரியான வாழ்க்கை வாழ்ந்திருக்கலாம். ஆனால் அவர்கள் (நியாயாதிபதிகள் 2:10-12,18,19) வசனங்களில் கூறப்பட்டது போல, தேவனுடைய வழியை விட்டுத் தவறினவர்களாக காணப்படுகின்றனர். இவர்கள் கர்த்தருடைய வழியைக் குறித்து போதிக்கப்பட்டவர்கள், இருப்பினும் தேவனுடைய வழியை விட்டுத் தவறிப் போய்விட்டனர். ஏன் இப்படி சம்பவித்தது? ஒரு வேளை சற்று கடினமான காரியமாக காணப்பட்டாலும், இங்கு இஸ்ரவேலரின் நிலையைக் கவனிப்போம். இஸ்ரவேல் புத்திரர் தங்கள் பிதாக்கள் பெற்றுக்கொண்ட வெளிப்படுத்தலின்படியும், அனுபவத்தின்படியும் நடந்து வந்தனர். ஆனால் நியா. 2:10 ''கர்த்தருடைய வழியை அறியாத வேறொரு சந்ததி'' என கூறப்பட்டுள்ளது. அதாவது அவர்கள் தங்கள் பிதாக்களின் தேவனைக்குறித்து அறிந்தார்களேயன்றி தாங்கள் தனிப்பட்ட

முறையில் அறியவில்லை. எனவே சிறுபிள்ளைகள் ஒவ்வொருவரும் தனிப்பட்ட முறையிலே தேவனோடு உள்ள அனுபவம் வேண்டும். தான் அந்த வெளிச்சத்தை பெற்றுக் கொள்ள வேண்டும். எனவே பெற்றோரின் வெளிச்சத்திலே பிள்ளைகள் நடந்து செல்ல இயலாது. பருவம் வருகிற வேளையிலே தாங்கள் தேவனை குறித்த வெளிச்சத்தை அடைய வேண்டும். இதற்கு பெற்றோர் பொறுப்புள்ளவர்களாக காணப்பட வேண்டும். அவர்களை நாம் இரட்சிப்பின் பாதையில் வழி நடத்தினால் மாத்திரம் போதாது. வேறு அனுபவங்களுக்குள்ளும் வழிநடத்த வேண்டும். அவர்கள் ஜெபத்தில் தேவனோடு நேரத்தை செலவழிக்கவும், கிறிஸ்துவோடு தங்களது ஆவிக்குரிய வாழ்க்கையை கட்டி எழுப்பவும் உற்சாகப்படுத்த வேண்டும். இதைக் குறித்து பெற்றோராகிய நாம் அக்கறையுள்ளவர்களாகக் காணப்படவேண்டும். இப்படி அவர்கள் வளரும்போது பெற்றோரின் வெளிச்சத்தில் அல்ல, தாங்கள் பெற்றுக்கொண்ட வழியிலே செல்வார்கள். அவர்கள் தனிப்பட்ட முறையிலே இயேசு கிறிஸ்து அபிஷேகம் பண்ணுகிறவர், பரிகாரி, தேற்றுகிறவர், தேவைகளை எல்லாம் சந்திக்கிறவர், எல்லாவற்றிற்கும் எல்லாம் அவரே என்பதை அறிந்திருக்கும் போது, கிறிஸ்துவை விட்டு ஒருக்காலும் பின்னடைய மாட்டார்கள்.

நமது பிள்ளைகளுக்கு நாம் கொடுக்கக்கூடிய சொத்து, பிள்ளைகளை தேவனோடு சரியான (ஐக்கியத்தை) தொடர்பை ஏற்படுத்திவிடுவதே. அப்போது பிள்ளைகள் பெற்றோரின் கண்காணிப்பின் கீழ் தேவனுடைய வழியில் நடக்கிறார்கள். தங்களுடைய அனைத்து காரியத்தையும் கர்த்தரிடம் இருந்தே எதிர்பார்த்துப் பழகுகிறார்கள். பணம், நிலம், சொத்து அழிந்து போகலாம். காலக்கூற்றினால் தாயும், தகப்பனும் கைவிடலாம் அல்லது மரித்துவிடலாம். ஆனால் பிள்ளைகள் தேவனைகுறித்து அறிந்து கொண்ட ஆழமான உண்மை, வேத வசனத்தைக் குறித்த அறிவு, தாங்கள் பெற்றுக்கொண்ட அனுபவங்கள் பிள்ளைகளின் மீதியுள்ள காலங்களை கிறிஸ்துவுக்குள் உறுதியாக கட்டி எழுப்ப பயன்படும்.

# அத்தியாயம் 29

## "திருத்துவதற்கு தீர்மானி"

**ஒவ்வொரு பெற்றோரும் அவசியமாய் வாசிக்க வேண்டிய கட்டுரை:-**

உத்திரப்பிரதேசத்தில் சில வாரங்களுக்கு முன், ஒரு சபையானது அந்தப் போதகர், அவரது பிள்ளைகளுக்கு குழந்தைப் பருவத்திலேயே நேரம் எடுத்து ஒழுங்குகளைக் கற்றுத் தராததால், அந்தப் பிள்ளைகளாலேயே சின்னாபின்னமாகியது. அந்தப் போதகரின் மகன் அந்த சபையின் ஒரு மூப்பரின் மகளைத் திருமணம் செய்து கொண்டான். இப்போது அவன் வீட்டை விட்டு வெளியேறி ஒரு சோம்பேறியாகவும், பயங்கரக் குடிக்காரனாகவும் மாறித் தன் மனைவியை அடிக்க ஆரம்பித்து விட்டான். அவன் மனைவி தன் தகப்பனிடம் முறையிட்டாள்; தகப்பனோ செயலற்றுப் போன போதகரிடம் முறையிட்டான். ஒரு பிரிவினர் மூப்பரையும், ஒரு பிரிவினர் போதகரையும் ஆதரித்ததினிமித்தம் கிறிஸ்துவின் சபையானது, போதகரின் ஒழுங்கற்ற மகனால் பிரிந்து சின்னாபின்னமானது. போதகர் "என் மகன் என்னைவிட பெரியவனாயிருக்கிறானே அவனை எப்படி அடிப்பது?" என்று கதறினார். சபை மக்களோ, "நீர் அவனை சிறுபிராயத்திலே ஒழுங்கு படுத்தியிருக்க வேண்டும்" என்று கூறினார். ஆனால் அதே சமயத்தில் போதகர் அதிக நேரம் தன் குடும்பத்திற்காக செலவழித்திருந்தால், இதே சபைமக்கள் "நம் போதகர் ஆவிக்குரியவர் அல்ல; ஆத்துமாக்களைக் குறித்து கவலையில்லாமல் உலகக்காரியங்களில் அதிகநேரம் செலவழிக்கிறார்" என்று கூறியிருப்பார்!

தேசம் முழுவதும் இதே நிலை தான் மாறி மாறி உருவெடுத்துள்ளது. ஒரு சுவிசேஷகருடைய மகன் அவருடைய நண்பரிடமிருந்து சுமார் ஒரு லட்சம் ரூபாய்களை ஏமாற்றிக்

களவாடிச் சென்றான். பின்பு அவனுடைய சகோதரன், தன் சகோதரன் செயலுக்காக மன்னிப்புக்கேட்பது போல் வந்து, அன்று இரவிலேயே எழுந்து அவர்களின் டேப்ரிக்கார்டரை யும், பணத்தையும் திருடிச் சென்றான். இவ்வாறு நாம் அடிக்கடி ஏலியின் மக்களைப் போல், ஆவியில் நிறைந்த போதகரின் பிள்ளைகள் ஏமாற்றுவதையும், திருடுவதையும், கொலையும் கூட செய்வது பற்றிக் கேள்விப்படுகிறோம். இந்தப் பிரச்சனைகளுக்கு மூலகாரணம் என்ன? ஏன் அநேக போதகர்கள், சுவிசேஷகர்களுடைய பிள்ளைகள் உதவாக்கரைகளாக உள்ளனர்?

இப்பிரச்சனைகளுக்கு ஒரு காரணம், இவர்கள் மற்ற பிள்ளைகளால் கெடுவதைவிட ஆத்தும விரோதியான "பொல்லாங்களு"லேயே அதிகம் தாக்கப்படுகிறார்கள். எனவே இவ்விதமான தாக்குதலை நாம் இனம் கண்டு இதை எதிர்நோக்கி, ஜெபத்தின் மூலமே விரட்டியடிக்க வேண்டும்.

வேறொரு காரணம், இப்பிள்ளைகள் அடிக்கடி சுவிசேஷத்தை கேட்பதினிமித்தம் இருதயம் கடினப்பட்டு குறை கூறுகிறவர்களாய் மாறுகின்றனர். முக்கியமாக தங்கள் ஊழியத்தில் தேவ மகிமையை இழந்த போதகர்கள் பிள்ளைகள் அதிகம் பாதிக்கப்படுகிறார்கள்.

அநேக, தேவபிரசன்னத்தால் ஆளுகை செய்யப்பட்ட போதகர்களும், சுவிசேஷகர்களும், தங்கள் பெருமையினாலும், கவலையீனத்தினாலும், சோம்பேறித்தனத்தினாலும் அந்த மகிமையை இழந்து போகின்றனர். ஆனாலும் சிம்சோனைப் போல கர்த்தருடைய ஆவியானவர் தங்களை விட்டு எடுபட்டத்தை அறியாதிருக்கின்றனர். ஒரு வேளை அவர்கள் இதைப் பற்றி விழிப்பு அடைந்தாலும், தங்களின் பெருமையினிமித்தமும், சபை மக்களினிமித்தமும், தங்கள் குறைகளை ஒத்துக்கொண்டு, தங்களின் மகிமை இழந்த இடத்திற்குப் "பின் சென்று" மீண்டும் ஆவிக்குரிய வல்லமைகளை பெற்றுக் கொள்வதற்கு துணிவு கொள்வதில்லை.

எப்படியாயினும் இப்பிரச்சனைகளுக்கு முக்கிய காரணம் ஒழுங்கைக் கற்றுக் கொள்வதிலேயே உள்ளது. முக்கியமான பையன்கள் ஒழுங்குபடுத்தப்பட வேண்டும். பொதுவாக நம் இந்தியாவில் பையன்களைவிட பெண்பிள்ளைகள் தான் அதிகம் ஒழுக்கம் போதிக்கப்படுகின்றனர். நம் குழந்தைகளை அதன் ஒன்பதாவது மாதத்திலிருந்தே ஒழுக்கம் கற்றுத்தராவிடில், நாம் மிகவும் தாமதப்படுத்துகிறவர்களாய் இருப்போம். தங்களின் ஒன்பதாவது மாதத்திலிருந்தே அநேகம் பிள்ளைகள் தங்களின் சுய சித்தத்திற்கு இழுக்கப்படுகிறார்கள். இந்தப் பணியானது பெற்றோர்களாகிய "இருவராலும்" செய்யப்பட வேண்டும். அவர்கள் இசைந்த மொழிகளால் இப்பொறுப்பைக் கையாள வேண்டும். ஒரு மகன் ஞானமுள்ள தன் தகப்பனிடம் ஓடிச் சென்று, அம்மா தன்னிடம் கடுமையாக இருப்பதாகக் குறை கூறினான். தகப்பன் தன் மகனை உற்றுப்பார்த்தப் பின், அவனருகே வந்து அவன் இருகாதுகளைப் பிடித்து முறுக்கி, "என் அருமை மனைவியைப் பற்றி என்ன சொன்னாய்? அவளைக் குறைகூற உனக்கு எவ்வளவு தைரியம்?" என்று கண்டித்தார். அதற்குப் பின் அந்த மகன் ஒருபோதும் தன் பெற்றோருக்கு விரோதமாக மற்றவரிடம் குறைகூற முயன்றது கிடையாது. இதுவே "இசைந்த மொழிகளால்" பொறுப்பைக்கையாளுவதாகும்.

19 குழந்தைகளைப் பெற்ற ஜான் வெஸ்லியின் தாயார் சொல்லுகிறார்கள், தன் ஒவ்வொரு குழந்தைகளையும் ஒரு வயது இருக்கும் போதே அமைதியாக அழ கற்றுக் கொடுத்தாராம். இதினிமித்தம் குழந்தைகள் 3-வயது ஆகும் போதே அவைகளின் சித்தம் பூரணமாக பெற்றோர்களுக்குள் கீழ்படுத்தப்படுகிறதாம். 7-வயதுவரை குழந்தைகளின் மிக முக்கியமான வருடங்கள். இந்த வருடங்களில் குழந்தைகள் ஒழுக்கத்தைக் கற்றுக் கொள்ளாவிடில் பின் கற்றுக்கொள்வது மிகக்கடினம். மிக முக்கியமாக இந்த ஏழாவது வயதில் பிள்ளையானவன் தன் வாழ்வில் கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளாவிடில், பின்பாக ஏற்றுக்கொள்வது

மிகக் கடினமே. எனவே பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளி டம் அதிக நேரம் செலவழித்து பிள்ளைகள் ஒழுக்கம் கற்றுக் கொள்ளவும், கிறிஸ்துவை அவர்களின் முன் வயதிலேயே ஏற்றுக்கொள்ளச் செய்வதும் மிக அவசிய நோக்கமாகும்.

நீதி 23:13-ல் ''பிள்ளையைத் தண்டியாமல் விடாதே; அவனைப் பிரம்பினால் அடித்தால் அவன் சாகான். நீ பிரம்பி னால் அவனை அடிக்கிறதினால் பாதாளத்துக்கு அவன் ஆத்து மாவைத் தப்புவிப்பாயே''. பிள்ளைகளைக் கையினால் அல்ல, பிரம்பினாலேயே கண்டிக்க வேண்டும். இது ஒரு ஞானமான ஆலோசனை. இதில் கண்டுகொள்ளும் காரியம் என்ன வென்றால் நம் பிள்ளைகளிடத்தில் பிரம்பை எடுத்து வருவ தற்குள் நம் கோபம் தணிந்து, பிள்ளைகளிடத்தில் நம் உணர்ச்சியின்படி அல்ல, பிள்ளைகள் தண்டிக்கப்படுவதற்கு ஏற்ற அளவின்படி நாம் தண்டிக்க முடிகிறது. இதற்குப் பின் நாம் பிள்ளைகளை தட்டிக்கொடுக்கவோ அல்லது கரங் களில் அன்பாய் தூக்கிக் கொள்ளவோ செய்யலாம். பிரம் பானது தண்டிப்பதற்கும், கரமானது அரவணைப்பதற்குமே ஆகும்.

நாம் நம் பிள்ளைகளைச் சிறந்த ஒழுக்க சீலமாக வளர்க்க!

**முதலாவது - நாம் ஒழுங்குபடுத்தும் உரிமை கொள்ளுதல் வேண்டும்:-**

நாம் பிள்ளைகளிடத்தில் ஒழுங்குபடுத்தும் உரிமை எடுக் காவிடில் பிள்ளைகள் ஆழமான முரட்டாட்ட குணத்திற் குள்ளாகத் தள்ளப்படுவார். பிள்ளைகள் இரண்டகம் பண்ண வழிவகுக்கும். வேதம் சொல்லுகிறது (I சாமு 15:3)ல் ''இரண்டகம் பண்ணுதல் பில்லி சூனிய பாவத்திற்கும், முரட்டாட்டம் பண்ணுதல், விக்கிரகாராதனைக்கும் சரியாய் இருக்கிறது''. இக்குணங்கள் நம் குழந்தைகளிடம் தோன்றா தபடிக்கு நாம் பிள்ளைகளை ஒழுங்குபடுத்தும் உரிமை கொள்ளு தல் மிக அவசியம். நம் பிள்ளைகள், நம்மால் நேசிக்கப் பட்டு, அவர்களில் மகிழ்வுறுகிறோம் என்பதை அறிய

வேண்டும். அல்லாமல், அவர்களின் தொல்லைகளை நாம் சகிப்பவர்களாக அறிந்து கொள்ளக் கூடாது. அவர்களில் நாம் களிகூருகிறோம் என்று அறியும் அதே நேரத்தில் அவர்களின் நன்மைகளுக்காக ஒழுங்கைக் கற்றுத் தருகிறோம் என்றும் அறியவேண்டும். நாம் நம்முடைய கோபத்தைக் காட்டுவதற்காக அல்ல, அவர்களின் அவசியத்திற்காகவே அவர்களைக் கண்டிக்கிறோம் என்பதை அவர்கள் நன்கு உணரச் செய்யவேண்டும். நாம் கண்டிப்பதில் நேர்மையாய் கண்டித்து, ஏன் கண்டிக்கிறோம் என்பதையும் பிள்ளைகளுக்கு விளக்கவேண்டும். நாம் நேர்மையாகக் கருதுவது பிள்ளைகளுக்கு நேர்மையற்றதாய் இருக்கலாம். எனவே பிள்ளைகளுக்கு விளக்கம் கூறுவது அவசியமாகிறது.

**இரண்டாவது-நாம் ஒழுங்குபடுத்தும் தைரியம் கொள்ளுதல் வேண்டும்:-**

நம்முடைய கலாச்சாரத்திற்கு அஞ்சாமல் பிள்ளைகளை ஒழுங்கு செய்தல் வேண்டும். மேற்கத்திய நாடுகளில் பல ஆண்டுகளாக, டாக்டர் ஸ்போக் என்பவரின் போதனை கலாச்சாரமாகப் பின்பற்றப்பட்டது. அவரின் போதனைப்படி பிள்ளைகள் தங்களின் அறியாத, தவறான செயல்களையும் செய்ய அனுமதிக்க வேண்டும். அவர்களைத் தடைசெய்தால் அவர்களின் இனிமையான குண அமைப்புக் கெட்டு விடும். கடந்த 2 ஆண்டுகளாக அமெரிக்காவில், தங்கள் பிள்ளைகளை கண்டித்து ஒழுக்கம் போதித்த பெற்றோர்கள், சமுதாயத்தின் மிகுந்த எதிர்ப்புடனேயே அதைச் செய்தனர். ஆனால் டாக்டர் ஸ்போக்கின் கொள்கை ஓர் "இழந்து போன" சந்ததியை தோற்றுவித்தது. இச்சந்ததியார், தாங்களை யார் என்று அறியாதவர்களாகவும், எங்கே போய்க்கொண்டிருக்கிறோம் என்று உணராதவர்களாகவும், எந்தப் பொறுப்பையும் எடுத்து நடத்த திறமையற்றவர்களான நிலைக்கு ஆளாயினர். அந்நாட்களில் ஸ்வீடனில் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை உணர்ச்சி பூர்வமாகவோ, சரீரபிரகாரமாகவோ தண்டிக்க, சட்டப்பூர்வமாகத் தடை செய்யப்பட்டிருந்தது.

இந்தியாவில் பெரும்பாலான சமுதாயத்தினர் சொல்லு கிறார்கள் "சின்னஞ்சிறு பிள்ளை, அது தன் இஷ்டப்படி செய் யட்டுமே" "பிள்ளை அழுவது சகிக்கவில்லை. அதை அடித்து நொறுக்கு". இன்று பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் பிடிவாதத்தைப்பார்த்து மகிழ்வதையும், பிள்ளைகள் தாயையோ, தகப்பனையோ அடிப்பதைக் கண்டு சிரிப்பதை யும் பார்த்தால் மனதிற்கு மிகவும் வேதனையாய் இருக்கிறது! தன் தகப்பனுக்கும், தாய்க்கும் விரோதமாக உயர்த்தும் எந்தப் பிள்ளையின் கரத்தையும் கடுமையாகக் கண்டிக்க வேண்டும். இப்படிப்பட்ட காரியத்தைப் பார்த்து ஒருபோதும் சிரிக்கக்கூடாது. மாறாக, தைரியமாய்த் திருத்தவேண்டும். நம் சமுதாயம் ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் நாம் திருத்து வதற்கு தைரியம் கொள்ளல் வேண்டும்.

**மூன்றாவது- நாம் ஒழுங்குபடுத்தும் தீர்மானம் கொள்ளு தல் வேண்டும்.**

நாம் களைப்படைந்திருக்கிறோம் என்பதற்காக மாத் திரம் அல்ல, பிள்ளைகள், தவறு செய்யும் ஒவ்வொரு நேரத்திலும் நாம் பிள்ளைகளைக் கண்டித்துத் திருத்த தீர் மானிக்க வேண்டும். பிள்ளைகளின் தாத்தா பாட்டி சொல் வதைப் பொருட்படுத்தாமல், நாம் பிள்ளைகளைத் திருத்த தீர்மானிக்க வேண்டும். பொதுவாக பிள்ளைகளின் தாத்தா பாட்டி, பிள்ளைகளை சிநேக மிருகங்களைப் போலவே வைத் திருந்து மகிழவிரும்புகின்றனரே அல்லாமல், அவர்கள் தன்மை நிமைக்குரிய வித்தியாசங்களை உணர வைக்கும் பெருநோக்கோடு இருப்பதில்லை. சிற்சில சமயங்களில் நாம் பிள்ளையை தனியே ஒரு அறைக்கு அழைத்துச் சென்று அவர்களைத் திருத்த வேண்டிய விதத்தில் பவ்வியமாய் இருத்தவேண்டும்.

**நான்காவது- நாம் நம்முடைய ஜீவியத்தையே ஒழுங்கு படுத்தும் ஆர்வம் கொள்ளுதல் வேண்டும்.**

எபிரெயர் 12:10-ன்படி தேவன் நம்மை அவரின் பரிசுத்தத்தில் பங்குள்ளவர்களாக்கும்படி, நம்முடைய பிர

யோஜனத்திற்காகவே சிட்சிக்கிறார். இப்படிப்பட்டதான சிட்சை எவ்வளவு அருமையானதென்று பாருங்கள்! இப்படிப்பட்டதான சிட்சையை நாம் முறுமுறுக்காமல் மனமகிழ்வுடன் ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும். பிள்ளைகளைப் போலவே நாமும் சிட்சிக்கப்பட்டு அவர்களைப் போலவே ஒழுக்கத்தில் வளர்ந்து வருகிறோம் என்பதை அவர்களுக்குக் கற்றுத்தரவேண்டும். நம்மைத் திருத்தி ஒழுங்கு செய்யும் தேவனின் கரத்தை நாம் முழுமையாக நம்புவதற்கு கற்றுக் கொள்ளுதல் வேண்டும். தேவன் நம்மை அதிகமாக நேசித்து, அருமை இயேசுவைப்போல் மாற்ற தீர்மானித்திருக்கிறார். நம்மை இவ்வுலகில் அவரது சரீரமாய் இருப்பதற்கு அழைத்த ஆண்டவர், நம் ஒவ்வொருவரையும் கிறிஸ்து இயேசுவுக்குள்ளாகப் பூரணப் புருஷராக நிலைநிறுத்த விரும்புகின்றார். இந்த அனுபவத்திற்குள் முதன்மையாக வரவேண்டியவர்கள் நம் அருமைப்பிள்ளைகளே! ஆமென்.

## அத்தியாயம் 30

# இளம் பெற்றோருக்கு ஒரு சிறந்த ஆலோசனை!

"பிள்ளைகளைக் குறித்த பாரம் இல்லாத பெற்றோர்" இல்லை என நிச்சயமாகக் கூறலாம். காரணம் பிள்ளைகள் கீழ்ப்படியாதவர்களாயும், வேதனைப்படுத்துகிறவர்களாயும், பிரச்சனை உண்டுபண்ணுகிறவர்களாயும் காணப்படுவதினாலேயே! இதோ உங்களுக்கு ஒரு சிறந்த ஆலோசனை. கருத்தாக வாசியுங்கள்! கருத்தில் கொள்ளுங்கள்! கடைப்பிடியுங்கள்! நிச்சயமாகவே நமது பிள்ளைகள் சிறந்தவர்களாக மாறுவார்கள். தேவ பக்திக்கேற்ற வழியில் நடப்பார்கள்.

சிறுபிள்ளையாக இருக்கும் பொழுது தானே சரியாக அவர்களை பராமரித்து, பயிற்சியளித்து வளர்ப்போமானால் அவர்கள், குட்டி தேவதூதர்களைப்' போல காணப்படுவார்கள். "பிள்ளையானவனை நடக்க வேண்டிய வழியிலே அவனை நடத்து; அவன் முதிர்வயதிலும் அதை விடாதிருப்பான்" (நீதி 22:6).

நடத்து அல்லது பழக்கப்படுத்து என்ற வார்த்தை மிகுந்த முக்கியமான, அவசியமான வார்த்தை. இதற்கு திட்டங்கள் நிறைந்த எண்ணமும், தளர்ச்சியடையாத தீர்மானமும், நீண்ட பொறுமையும் தேவை. இது மனிதனுக்கும் ஸ்திரீக்கும் கொடுக்கப்பட்ட முக்கியமான பொறுப்பாகும். பிரச்சனை என்னவென்றால் இன்று அநேக பெற்றோருக்கு பிள்ளைகளை எப்படி படிக்க வைப்பது என்பது தெரியவில்லை. ஏதாவது கூறினால் பெற்றோரைப் பார்த்து பிள்ளைகள் நகைக்கிறார்கள். பெற்றோர் என்ன செய்வதென்று அறியாது விழிக்கின்றார்கள். பிள்ளைகளை சரியான பாதையில் நடத்த இருதயத்தில் விரும்புகிறார்கள். ஆனால் அதை நடைமுறைப்படுத்த முடிவதில்லை.

முடிவில் பிள்ளைகள் மற்றவர்களோடு சேர்ந்து அடங்காத முறையில் சுற்றித் திரிய பெற்றோர் உதவியற்ற நிலையில் தவிக்கின்றார்கள். இதினிமித்தம் அநேக பெற்றோர் ஏமாற்றம் அடைகிறார்கள். தாங்கள் அதிர்ஷ்டம் இல்லாதவர்கள் என எண்ணி தங்களைத் தாங்களே நொந்து கொள்ளு கிறார்கள். ஆனால், 'அதிர்ஷ்டம்' என்பது இந்த விஷயத்தில் செய்வதற்கு ஒன்றுமில்லை. இதற்கு கடின உழைப்பு, தேவனு டைய ஆசீர்வாதமுமே இன்றியமையாதது.

எனவே பெற்றோர்கள் செய்ய வேண்டிய சில காரியங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. இவைகள் பிள்ளைகளை பழக்கப் படுத்த பயன்படக் கூடிய 7 வித ரகசியங்கள். பெற்றோர்கள் வித்தியாசமாக இருக்கிறார்கள்; பிள்ளைகள் வித்தியாசமான வர்களாக இருக்கிறார்கள். சூழ்நிலைகளும், சுற்றுப்புறமும் வித்தியாசமாக இருக்கிறது. இருப்பினும் கீழ்க்கண்ட ஆலோசனை சிலருக்காவது உபயோகமாக இருக்கும். இதை வாசிக்கும் நீங்கள் ஒரு பெற்றோராக இருக்கலாம். இது உங்களுக்கு நிச்சயமாக உதவிபுரியும் என்பதில் சந்தேக மில்லை. இவைகள் வேதத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளவைகளே! இதோ அவைகள்.........

**இடைவிடா விழிப்புடன் பிள்ளைகளின் மேல் கவனமாயிருங்கள்:-**

இவ்வுலகிலேயே பிள்ளையை கவனிப்பதற்கு தாய்க்கு நிகரானவர் வேறு ஒருவரும் இல்லை. உங்கள் பிள்ளை சரியான வழி வளர விரும்புவீர்களானால் ''எனது பிள்ளையை கவனித் துக் கொள்ளுங்கள்" என மற்றவர்களிடம் கூறி ½ மணி நேரம் கூட விட்டுச் செல்லாதிருங்கள். ''ஐயோ! எனது குடும்பத் தாயும் வேலைக்குச் சென்றால்தானே வீட்டிற்குத் தேவை யான சாதனங்களை வாங்க இயலும் நன் முறையில் குடும்பம் நடத்த திட்டமிடலாம்" என ஒருவேளை நீங்கள்வாதாடலாம். வீட்டிற்கு தேவையான சாதனங்களைவாங்க தாய் வேலைக்குச் செல்வது நல்லது தான்! நன் முறையில் குடும்பம் நடத்த திட்டமிடுவதும் நல்லதுதான்! ஆனால் என்ன பரிதாபம்! இவை அனைத்தும் இருந்தும் பெற்றோரின் இருதயம் பிள்ளைகளிடம்

நிமித்தமாக உடைக்கப்பட்ட நிலே, வேதனையனுபவிக்கிற நிர்ப்பந்தம், சமாதானமற்ற வாழ்வு! உண்மையான பெற்றோரின் கடமை, விசேஷமாக தாயின் கடமை பிள்ளைகள் என்ன செய்து கொண்டு இருக்கிறார்கள் என எந்நேரமும் கண்ணோக்கமாக இருக்க வேண்டும். பிள்ளைகளை கண்பார்வையிலேயே வைத்திருக்க வேண்டும். பிள்ளைகளை வளர்ப்பதில் வெற்றியடைவதற்கு செலுத்தப்பட வேண்டிய விலைக்கிரயம் அவர்களை எப்போதும் விழிப்புடன் கண்காணித்துக் கொண்டிருப்பதே.

தாயானவள் பிள்ளைகளைக் குறித்து கரிசனையுள்ளவளாகவும், அவர்களுடைய தேவையை சந்திக்கிறவர்களாகவும், அவர்களின் கேள்விக்கு பதில் அளிக்கிறவர்களாகவும், பிள்ளைகள் சரியான தீர்மானத்தை எடுக்க உதவி செய்கிறவர்களாகவும் இருக்க உற்சாக மனதுள்ளவளாக காணப்படவேண்டும். அதுமாத்திரமல்ல, பிள்ளைகளுக்கு சோதனையைக் குறித்து எச்சரிக்கிறவர்களாகவும் இருக்க வேண்டும். பிள்ளைகள் பள்ளியில் இருந்து திரும்பி வரும் போது, அவர்களை அன்புடன் வரவேற்கிறவர்களாக இருக்க வேண்டும். எந்த ஒரு தாயும் தான் வெளியே சென்று வேலே பார்த்துவிட்டு வந்து சோர்புற்று இருக்கிற வேளையில் வீட்டு வேலை ஒரு புறம் இருக்க மேற்கண்ட காரியங்களில் பிள்ளைகளுக்கு உதவி செய்வதில் உற்சாகம் காட்ட இயலாது. எனவே, பிள்ளைகள் சரியான வழியில் நடக்க தவறுகிறார்கள்.

பெற்றோரே! நீங்கள் எதைத் தெரிந்து கொள்ளப் போகிறீர்கள்? உடைக்கப்பட்ட இருதயத்தோடு உள்ள பொருட்கள் நிறைந்த வீடா? இல்லை பிள்ளைகளைக் குறித்து மகிழ்ச்சி பொருந்திய இருதயமா? இதைத் தெரிந்து கொள்ளுதல் உங்களைப் பொறுத்ததே!

**தேவன் உங்களுக்கு அளித்த உத்தரவாதத்தை (பொறுப்பை) குடும்பத்தில் செயல்படுத்துங்கள்:-**

பெற்றோரே வீட்டை பொறுப்பாக நடத்த வேண்டுமென்பது தேவனின் நியாயமே தவிர அது பிள்ளைகளின்

பொறுப்பு அல்ல. ஆதி. 18:19ல் இதைக் காணலாம். உங்கள் குடும்பத்தின் சமாதானம், சந்தோஷம் இவற்றின் மதிப்பை உணருவீர்களானால், தேவன் நீங்கள் தலையாக இருக்கும்படி நியமித்த உத்தரவாதத்தை சரணடையச் செய்யாதிருங்கள். பிள்ளைகள் அவர்கள் இஷ்டம் போல் நடப்பதற்கும், அவர்களை விரும்பினதைச் செய்வதற்கும் விட்டு விட்டு, பிள்ளைகள் நடக்க வேண்டிய வழியைக் குறித்து நாம் திட்டமிடுவதற்கும், அவர்களுக்கு வழிகாட்டுவதற்கும் உத்தரவாதம் இல்லாதவர்களாக இருப்போமானால் நமக்கு நாமே துன்பத்தையும், கவலையையும் வருவித்துக் கொள்ளுகிறோம்.

பூனைக்குட்டியோ, கழுதைக்குட்டியோ, கன்றுக்குட்டியோ அல்லது ஆட்டுக்குட்டியோ சில நாட்களோ அல்லது சில வாரங்களோ தாயிடம் இருந்து விட்டுப் பின் பிரிந்து விடுகின்றன. ஆனால் பையன்களும், பெண் பிள்ளைகளும் அப்படியல்ல. தாயின் சூழ்நிலையிலேயே காணப்படுகின்றார்கள். இது தேவனுடைய திட்டமே! இப்படியாக பிள்ளைகள் பெற்றோருடன் இருக்கும் காலத்தை தேவன் ஏன் கொடுத்திருக்கிறார்? அதின் இரகசியம் பெற்றோர் பிள்ளைகளை இந்நாட்களில் நடக்க வேண்டிய வழியில் நடத்தவும், பிள்ளைகள் கீழ்ப்படிதல் உள்ளவர்களாகவும், சுயநலமற்றவர்களாகவும், பயபக்தியுள்ளவர்களாகவும் இருக்க பழக்குவிக்க வேண்டுமென்பதற்காகவே, அவர்கள் தங்கள் வழிகள் எல்லாம் இரக்கமுள்ளவர்களாகவும், அவர்கள் சிந்தையில் உயர்ந்த எண்ணமுள்ளவர்களாகவும், இருக்க அவர்களை பழக்குவிக்க வேண்டும். பிள்ளைகளை தற்கால வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்துவது மாத்திரம் அல்ல, வரக்கூடிய மறுமையின் வாழ்க்கைக்கும் ஆயத்தப்படுத்தக்கூடிய நீண்டகால வேலை பெற்றோருக்குக் கையளிக்கப்பட்டுள்ளது.

...தற்கு பிள்ளைகளை ஒழுங்கு படுத்தவேண்டும். 'ஒழுங்கு' என்ற வார்த்தையை இன்று யாரும் விரும்புவதும் இல்லை; அதைப் பயன்படுத்துவதும் இல்லை. பெற்றோராக இருப்பவரின்

வேலையின் ஒரு பகுதி தான் ஒழுங்குபடுத்துவது. எப்படி இதை பழக்கப்படுத்துவது? ''ராணி இந்தக் காரியத்தைச் செய்'' என ஒரு காரியத்தைசெய்ய கூறிய பின் அதை அவள் செய்து முடித்திருப்பதை காணவேண்டும். அதுதான் ஒழுங்கு. இந்த மாதிரி வேலைகளில் திரும்ப திரும்ப செய் என அழுத்தி கூறவேண்டியது அவசியமானால் திரும்ப அழுத்தி கூறலாம். எப்படியாயினும் அவர்கள் நாம் சொன்ன காரியத்தைச் செய்திருக்க வேண்டும். அதுவே ஒழுங்கு. இவ்விஷயத்தை குறித்து பவுல் கூறுகிற வேலையில் ''பிள்ளைகளே உங்கள் பெற்றோருக்குக் கர்த்தருக்குள் கீழ்ப்படியுங்கள். இது நியாயம். உனக்கு நன்மை உண்டாயிருப்பதற்கும், பூமியிலே உன் வாழ்நாள் நீடித்திருப்பதற்கும் உன் தகப்பனையும், தாயையும் கனம் பண்ணுவாயாக" என்பதே வாக்குத்தத்தமும் முதலாம் கற்பனையுமாயிருக்கிறது (எபே 6:1-3) என்று கூறுகிறார். கேட்பதற்கு ஒருவேளை, இது பழங்கால ஆலோசனைபோல காணப்படலாம். ஆனால் இந்த வார்த்தை தனது மதிப்பை எவ்வளவும் இழந்து போகவில்லை. வருடங்கள் கழிந்தாலும் வேதவார்த்தைகள் மாறாது. தேவன் பெற்றோருக்கும் தொடர்ந்து ஓர் ஆலோசனையாக பவுல் மூலமாக ''பிதாக்களே, நீங்களும், உங்கள் பிள்ளைகளைக் கோபப்படுத்தாமல் கர்த்தருக்கேற்ற சிட்சையிலும், போதனையிலும் அவர்களை வளர்ப்பீர்களாக" (எபே 6:4) என்றுரைக்கிறார்.

பிள்ளைகளை ஒழுங்கு படுத்துவதற்கு ஒருவேளை நாட்கள் செல்லும். ஆனால் நாம் நாட்களையும், நம் கவனம், நம் நினைவுகளையும் இவைகளில் செலவழிப்போமானால் ஒழுங்கு படுத்தப்பட்ட நல்ல குடும்பத்தை உருவாக்க இயலும். அப்படி இல்லையென்றால் இந்த அமைப்பில் உள்ள வீட்டில் இதை பிள்ளைகள் தங்கள் தனிப்பட்ட வாழ்க்கையில் தேவனுடைய திட்டத்தையும் ஒருக்காலும் உணரமுடியாது. எனவே பிள்ளைகளை ஒழுங்கு படுத்தி கண்டித்து பார்ப்பதற்கு தேவன் நமக்கு கொடுத்துள்ள உத்தரவாதத்தையும், அதிகாரத்தையும் ஜாக்கிரதையாக பயன்படுத்துவோம்.

**பிள்ளைகள் தேவனை விரைவில் கண்டு கொள்ள உதவி செய்யுங்கள் :-**

இது மிகவும் முக்கியமானது. பிள்ளைகள் உள்ளத்தில் இயேசுவைக் குறித்தும், அவரது அன்பைக் குறித்தும் விரைவில் உணரவேண்டும். அவர்கள் வாசிக்க பழகியவுடனே அவர்களாகவே வேதபாடத்தை படிக்கும்படி கற்பியுங்கள். மேலும் 23ம் சங்கீதம், மலைப்பிரசங்கம், 10 கற்பனைகள் போன்ற அறிமுகமான பகுதிகளை மனப்பாடம் செய்யத்தக்கதாக கற்பிக்க வேண்டும். ஒவ்வொரு நாளும் அவர்கள் படுக்கைக்கு போகும் முன்னும், படுக்கையில் இருந்து எழும்பும்போதும் அவர்களாகவே ஜெபிக்கும் பழக்கத்தை ஏற்படுத்துங்கள். இப்படி விலையேறப்பெற்ற நல்ல பழக்க வழக்கங்களில் விருத்தியாகிற வேளையில், இப்பழக்க வழக்கங்கள் வாழ்நாள் முழுவதும் அவர்களோடே கூட இருக்கும். குடும்பமாக தேவனை ஆராதிப்பதைக் குறித்து கூறுகிறவேளையில், பிள்ளைகளை எவ்வளவு சேர்த்து வைத்து ஜெபிக்க இயலுமோ அவ்வளவு சேர்த்து வைத்து ஜெபியுங்கள். பிள்ளைகளை உங்களைச் சுற்றிலும் உட்கார வைத்துக்கொண்டு வேதத்தில் உள்ள பழைய ஏற்பாடு சரித்திர சம்பவங்களை அவர்களுக்காக வாசியுங்கள். அவர்கள் தங்களுக்கு தெரிந்த வார்த்தைகளைக் கூறி ஜெபிக்க உற்சாகப் படுத்துங்கள். இப்படிச் செய்வது ஓர் மகிமையான அனுபவம். காலம் பல சென்றாலும் இவ்வனுபவத்தின் நினைவுகள் ஆழப்பதிந்திருப்பதால் எண்ணத்தைவிட்டு அகலாது.

மற்றொரு முக்கியமான காரியம் என்னவெனில் பிள்ளைகள் தனியாக ஜெபிப்பதும், தனியாக வேதம் வாசிப்பதும் முக்கியமானது. அப்போதுதான் அவர்கள் தனிப்பட்ட முறையில் தேவனோடு உள்ள உறவை கட்டி எழுப்ப முடியும். பிள்ளைகள் ஜெபிக்கிற வேளையில் ஏதேதோ கூறி ஜெபிக்கலாம். அதை கருத்தில் கொள்ள வேண்டாம். முதலாவது அவர்கள் ஜெபிக்கப் பழகட்டும். அவர்கள் ஜெபத்தில் கேட்கிற பெரும்பாலான காரியத்தை பெற்றுக் கொள்வார்கள். தேவன் சிறுபிள்ளைகளின் விசுவாசத்தை

உற்சாகப்படுத்த அப்படி செய்கிறார். இப்படியாக இவர்கள் பழகும்போது தேவனோடு ஒரு நெருங்கிய நட்பும் உறுதியான நம்பிக்கையும் ஏற்பட்டு விடுகிறது.

**பிள்ளைகள் எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருக்கும்படி செய்யுங்கள்:-**

"சோம்பேறியின் கைகள் தான் சாத்தானின் தொழிற் பட்டறை" என்பது முதுமொழியாக இருந்தாலும், இது மெய்யான ஓர் கூற்றுதான். பிள்ளைகள் பெரும்பாலும் சுறுசுறுப்பாக இருப்பார்கள். எனவே நாம் அவர்கள் நல்ல காரியங்களை செய்யும்படியாகத் தூண்டவேண்டும். அப்படியில்லாவிட்டால் குறும்பு செய்வார்கள். இப்படி கூறுகிற வேளையில் பெற்றோர் பிள்ளைகளை அடிமைபோல் நடத்த வேண்டுமென்பது அர்த்தமல்ல. பிள்ளைகள் செய்யும் படியாக ஒன்றன்பின் ஒன்றாக காரியங்களை கொடுக்கவேண் டும். அதே வேளையில் பிள்ளைகள் விளையாடுவதற்கும் நேரம் கொடுக்க வேண்டும். இல்லையெனில் பிள்ளைகள் சந்தோஷ மாக இருக்கமாட்டார்கள். ஆனால் பிள்ளைகள் தங்களு டைய வீட்டில் தங்களின் உத்தரவாதத்தை (பொறுப்பை) உணர வேண்டும். அவர்கள் வளர்ந்துவருகிற வேளையில், அவர்கள் செய்யக்கூடிய வேலையை அவர்களாகவே செய்யும் படி கற்பிக்க வேண்டும். பிள்ளைகள் டெலிவிஷனையோ அல்லது ரேடியாவையோ அல்லது மற்ற பொழுதுபோக்கு காரியங்களில் நேரத்தை செலவழித்துக் கொண்டிருக்கும் சமயம், தாயே இரவு சாப்பாட்டை ஆயத்தம்பண்ணுவதும், பாத்திரங்களை சுத்தம் பண்ணுவதும், வீட்டை சுத்தம் பண்ணுவதும் சரியல்ல. பிள்ளைகளும் சேர்ந்து வேலை செய் யும்படி சிறுவயதிலிருந்தே கற்பிக்க வேண்டும். அவர்கள் தங்களை சுற்றிலும் உள்ள முடிந்த காரியங்களை செய்யும்படி கற்பிக்கப்பட்டுவிட்டால், அது அற்புதமான உதவியா யிருக்கும். தங்கள் வீட்டை சுத்தமாக வைத்திருப்பதும் தங்கள் வீட்டின் வேலையை செய்வது தங்களது கடமை யென்றும், தங்களுக்கு கிடைத்த சிலாக்கியம் என்றும் உணர்ந்துவிட்டார்களானால் தங்கள் காரியங்களை ஒழுங்காக

செய்வார்கள். ஒன்றும் அதை குறுக்கிட்டு திருத்தமுடியாது. தாங்களாகவே வீட்டை சுத்தம்பண்ணவும் தூசியை உதறி பொருட்களை சுத்தமாக வைக்கவும், சொல்லாமலேயே சிறுசிறு வேலைகளையும் தானுக செய்ய ஆரம்பித்து விடுவார்கள். தாங்கள் வேலை செய்வதற்கு எந்த ஒரு பொருளையும் (காசு பலகாரம்) எதிர் பார்த்து செய்ய மாட்டார்கள்.

**பிள்ளைகள் பொறுப்பாக செய்யும்படி காரியங்களை கொடுங்கள் பின் அவர்கள் அதை செய்து முடிப்பதைகவனித்துப் பாருங்கள்:-**

பொறுப்பாக செய்யும்படி காரியங்கள் அவர்களிடம் கொடுப்பது தன்னம்பிக்கை. அவர்களுக்கு கற்று கொடுப்பது மாத்திரமல்ல, அவர்கள் பிந்தின நாட்களில் நம்பிக்கைக்கு உரியவர்களாக மாறுவதற்கும் பெரும் வழி வகுக்கிறது. இதற்கு பல நாட்கள் செல்லும். பிள்ளைகளிடம் ஒரு காரியத்தை செய்யும்படி கூறுவது எளிது; ஆனுல் அதை அப்படியே செய்து முடித்திருக்கிறார்களா என்பதை காண்பது கடினம். ஆனுல் அந்த காரியத்தை அவர்கள் செய்து முடிக்கும் வரை விடாமுயற்சியாக அவர்களை செய்ய சொல்ல வேண்டும். இப்படி செய்யும் போது மாத்திரமே சரியான பண்பு குணத்தை அவர்களுக்குள் உருவாக்க இயலும். இன்றைக்கு பரிதாபநிலை என்ன? பெற்றோர் தன் மகன் குமாரிடம் ஒரு காரியத்தை செய்யும்படி கூறுகிறார்கள், அவன் சரியாக செய்யத்தெரியாத வேளையில் அடுத்த ஒருவனை அழைத்து ''டேய் பாபு, குமாருக்கு இதை செய்யத் தெரியவில்லை. நீ இதை செய்'' என பொறுப்பை அவனிடம் கடத்தி விடுகிறார்கள். எனவே பிள்ளைகள் சிறுவயதிலிருந்தே பொறுப்பற்றவர்களாக அல்லது உத்தரவாதமில்லாதவர்களாக வளருகிறார்கள். அடுத்து ஒரு வேலை சொல்லும் பொழுது எனக்கு தெரியாது; அவன் செய்யட்டும் என இலகுவாக பொறுப்பை கடத்திவிடுவார்கள். அருமையான பெற்றோரே! இப்படிப்பட்ட நிலையை உருவாக்காதீர்கள். அவர்களுக்கு கொடுக்கப்பட்ட வேலையை அவர்களே

செய்து முடிக்கும்படி செய்யுங்கள். முடியாத பட்சத்தில் உதவி செய்யுங்கள். ஆனால் அவர்களே செய்து முடிக்கட்டும். தாய் அல்லது தகப்பன் கொடுக்கும் வேலையை தங்களால் கூடுமான மட்டும் சிறந்த முறையில் செய்ய வேண்டும் என்ற அறிவை பிள்ளைகள் அடையும்படியாக செய்ய வேண்டும். பிள்ளைகள் நாம் கொடுக்கும் பொறுப்பில் இருந்து ஏமாற்றி எந்த வழியிலாவது நழுவ முடியாது என்பதை கற்றிருக்க வேண்டும். அவர்கள் குடும்பத்தின் ஒரு பங்காக இருக்கிறார்கள். எனவே தங்களுக்கும் பொறுப்பு உண்டு என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

மேற்கூறிய வழியில் நாம் அவர்களை வளர்க்கிற வேளையில் வரும் நாட்களில் நம்பிக்கைக்குரியவர்களாக இருப்பார்கள். தங்களை நம்பி கொடுத்திருக்கும் காரியத்தை உண்மையாக செய்ய வேண்டும் என்ற சுபாவம் இயற்கையாக வந்துவிடுகிறது. முடிவாக தனியாக அவர்கள் வாழ்க்கை நடத்த ஆரம்பிக்கும் போது சிறந்த முறையில் குடும்ப வாழ்வை நியமிக்க முடிகிறது.

**புதிய கருத்துகளாகிய பொக்கிஷசாலையை திறவுங்கள்:-**

பிள்ளைகள் தாங்களாக வாசிக்க ஆரம்பித்த பின் நல்ல ஆவிக்குரிய புத்தகங்களையும் பத்திரிக்கைகளையும் அவர்கள் படிக்கும் படியாக கொடுங்கள். பிள்ளைகளுக்குப் புத்தகத்தைப் படிக்க கொடுக்கும் முன்பு முதலாவது நீங்கள் அதைப் படித்து சிறந்த புத்தகம் தானா என்பதை அறிந்திருக்க வேண்டும். மோசமான புத்தகமோ அல்லது நகைச்சுவை கதைகள் அல்லது சிரிப்பை உண்டாக்கும் கதைப் புத்தகங்களோ படிப்பார்களானால், அவைகள் விஷமாக சென்று வாழ்க்கையை கெடுத்துவிடும் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். எனவே பிள்ளைகள் வாசிக்கும் புத்தகத்தை குறித்த விஷயத்தில் மிகவும் கண்டிப்பாக இருக்க வேண்டும். டெலிவிஷன் பார்க்கும் விஷயத்திலும் அப்படியே நேரம் வாய்க்கும் போது எது நல்லது அல்லது கெட்டது என்பதை விளக்கி கூற வேண்டும். பிள்ளைகள் இஷ்டத்திற்கு

எதையும் வாசிக்கவும், காணவும் விடுவீர்களானால் அவர்களின் நிலை பரிதாபமாக மாறுவது மாத்திரமல்ல, நீங்களும் துக்கப்பட வேண்டியதாயிருக்கும். எனவே இதில் கண்டிப்போடு காணப்பட வேண்டும்.

**உங்கள் வீடே பிள்ளைகளைக் கவர்ச்சிக்க கூடிய இடமாயிருக்கட்டும்:-**

பிள்ளைகளை சந்தோஷப்படுத்தக் கூடிய காரியங்களை திட்டமிடுங்கள். அவர்களோடு சேர்ந்து நேரம் செலவழியுங்கள். நீங்கள் பிள்ளைகளை நேசிக்கிறீர்கள் அல்லது விரும்புகிறீர்கள் என்பதை அவர்கள் அறிந்து கொள்ளட்டும். பிள்ளைகள் தங்கள் நண்பரை வீட்டிற்கு குறிப்பிட்ட சமயம் அழைத்து வரட்டும். அவர்களுக்கு நீங்கள் வேதத்தின் சரித்திர பகுதிகளை ( கதைகளை) வாசித்துக் காட்டுங்கள். தாயின் சத்தத்தைக் காட்டிலும் பிள்ளைகள் விரும்பக்கூடிய வேறு இசை ஒன்றும் இல்லை. பிள்ளைகள் பெரியவர்களாக வளர்ந்திருந்த போதிலும், வீட்டிற்கு வரும் போது சிறு பிள்ளைகளைப் போல நம்மையே வாசித்துக்காட்டும்படி கூறுவார்கள். பிள்ளைகள் விளையாடுவதற்கும், படிப்பதற்கும் ஆராய்ச்சி செய்வதற்கும்வீட்டைக் காட்டிலும் சிறந்த இடம் ஒன்றும் இல்லை. வீடு அவர்கள் ஒவ்வொரு நாளும் மனதிலும் சமூக காரியங்களில் வளரும் சோதனைச் சாலையாக காணப்படுகிறது.

இப்படியாக இவர்கள் வளர்ந்து வரும் போது உலகிலேயே தனது வீடு தான் மிகுந்த அழகு உள்ளதென்று பிள்ளைகள் கருதுவார்கள். எனவே தனது இனிய வீட்டை விட்டு அருகில் உள்ள வீட்டிற்கு போகவோ; திரைப்படம் காணவோ அல்லது டி. வி. காணவோ அல்லது தெருவில் சென்று விளையாடவோ போக மாட்டார்கள். ஏனென்றால் வீட்டில் உள்ள சந்தோஷம் வேறு எங்கும் இல்லாத நிலையே!

வருகிற நாட்களில் மேற்கண்ட ஆலோசனையின்படி தேவனுடைய பெலனைப் பெற்று பிள்ளைகளை வளர்க்க தேவன் உதவி செய்வாராக.

## அத்தியாயம் 31

# தாய்!

**ஆத்துமாவை வடிவமைக்கும் அற்புத சிற்பி:-**

ஒரு குழந்தையின் வாழ்வை உருவாக்குவதில் தாய்க்கு இருக்கும் பொறுப்பு மகா பெரியது. அவள் குழந்தையைக் கையில் ஏந்துவதற்கு முன்னால் அவள் வயிற்றிலே குழந்தையை கர்த்தர் வைத்து ஒரு தாய்மை உணர்வைக் கொடுக்கிறார். உலகிலுள்ள நற்குணசாலிகள் அனைவரும் நல்ல தாய்மார்களால் வளர்க்கப்பட்டவர்கள்.

சிம்சோனுடைய பெற்றோர் இந்த பிள்ளையை எப்படி வளர்க்க வேண்டுமென்று தேவ தூதனிடம் கேட்டது மிகவும் கவனிக்கத்தக்கது.

''நமது பிள்ளைகளுக்கு நல்ல தாய்மாரைக் கொடுங்கள். அப்பொழுது நாட்டுக்கு நல்ல பிள்ளைகள் கிடைக்கும்'' என்று தாமஸ் நெல்சன் சொல்லுகிறார்.

அம்மாவின் மடியில் நாம் கற்றுக்கொண்ட நல்ல பாடங்களை வாழ்நாள் முழுவதும் மறப்பதில்லையே.

தாய்மார்களே, எதிர்கால சந்ததியை உருவாக்கும் சிற்பிகள். வருங்கால சந்ததியின் வாழ்வும் தாயின் கையில் உள்ளது. நீரோ மன்னனின் தாய் ஒரு கொலை பாதகி. நீரோ ஒரு கொடுங்கோலன்; ரோம் நகரையே தீக்கிரையாக்கின துரோகி. ஜார்ஜ் வாஷிங்டனுடைய தாயார் ஒரு பரிசுத்த வாட்டி, கனம் பொருந்திய ஸ்திரீ; ஜார்ஜ் வாஷிங்டன் ஒரு கனவான். வெஸ்லியின் தாய் தெய்வீகமானவள்; வெஸ்லியும் அப்படியே ஒரு தேவ மனுஷன். ஜெபிக்கும் தாய்மாருடைய ஜெபிக்கும் பிள்ளைகளையும், பரிசுத்தவாட்டிகளுடைய பிள்ளைகளாகிய பரிசுத்தவான்களையும் நாம் சாதாரணமாகக் காண்கிறோம்.

குடும்பத்தின் சிங்காசனத்தில் மகா ராணியாய் வீற்றிருக்கும் தாய்க்கு ஒப்பானவள் யார்?

இந்நாட்களில் அழகிய பெண்களைப் பார்க்கிறோம்; திறமைசாலியான பெண்களைப் பார்க்கிறோம்; உத்தியோகம் பார்க்கும் பெண்களைப் பார்க்கிறோம்; விவாகரத்து செய்து கொண்ட பெண்களையும் பார்க்கிறோம்; ஆனால் தெய்வீகமான பெண்களைப் பார்ப்பது என்றைக்கு?

ஒரு ஸ்திரீக்கு தேவன் நியமித்த இடம் ஒரு குடும்பம் என்றே நான் எண்ணுகிறேன். அங்கே தான் தேவன் அவளுக்குக் கொடுத்த பொறுப்பை நிறைவேற்ற முடியும்.

தன் கணவனை சந்தோஷப்படுத்துவதும், தன் பிள்ளைகளைப் பராமரிப்பதும் தேவன் அவளுக்கு கொடுத்த பொறுப்பு; அதற்குரிய பிரதிபலன் அவளுக்குப் பரலோகத்தில் உண்டு.

உலக அழகி என்ற பட்டம் பெறுவதைப் பார்க்கிலும், உத்தம மனைவி என்ற பட்டம் பெறுவதே மேன்மையானது.

ஒரு மாபெரும் ஸ்தாபனத்தைக் கட்டி எழுப்புவதைப் பார்க்கிலும், ஒரு அழகிய கிறிஸ்தவ குடும்பத்தைக் கட்டி எழுப்புவதே மேன்மையானது.

நவநாகரீகமான பெண்ணாக இருப்பதைப் பார்க்கிலும், நற்குணமுள்ளவளாக இருப்பதே மேல்.

நம்முடைய பிள்ளைகளுக்கு நல்ல கல்வியைக் கொடுத்து, நல்ல பண்பாட்டைக் கொடுத்து, நல்ல உணவைக் கொடுத்து வளர்த்தாலும் கர்த்தரை அறியாதவர்களாய் வளர்ந்தால் அவர்கள் அஞ்ஞானியிலும் கேடு கெட்டவர்கள் தான்.

உனக்குள்ளே நல்ல கிறிஸ்தவ அனுபவங்கள் இல்லாமல் இருந்தால் உன் குழந்தைகளுக்குள்ளே அது வருவது எவ்வாறு? இன்று ஊழியத்திற்கும், நற்செய்தி பணிக்கும்

அநேக வாலிபர்கள் முன்வரவில்லை. காரணமென்ன? அவர்களைப் பெற்ற தாயார் அப்பிள்ளைகளைப் பணம் தேடுவதற்கும், உலக உல்லாசத்திற்கும், உலக உத்தியோகத்திற்கும் வழி நடத்தியதே.

அநேக ஜெபிக்கும் தாய்மார்களுடைய பிள்ளைகள் உத்தம ஊழியர்களாய் மாறியிருக்கிறார்கள்.

போனர் குடும்பம் என்கிற பிரசித்திப் பெற்ற ஊழியர் குடும்பத்தின் தாய் மிக அதிகமாய் ஜெபிக்கிறவளாய் இருந்தாள். அவளுடைய ஜெபமே பிள்ளைகளை ஊழியர்களாக்கிற்று. சார்லஸ் இன்ஷட் என்ற பிரசித்திப்பெற்ற பிரசங்கியாரின் தாய் ஜெபிக்கும் தாய். அவளுடைய ஐந்து பிள்ளைகளில் நான்குபேர் ஊழியக்காரர்கள்.

ஜெபிக்கும் தாய் உள்ள பீச்சர் குடும்பத்தில் எட்டு பிள்ளைகளில் ஐந்துபேர் ஊழியக்காரர்கள்.

சாமுவேல் ஸ்வும்மர் முஸ்லீம்கள் மத்தியில் ஊழியம் செய்தார். அவருடைய தாயார் ஜெபிக்கும் தாயார். அவர்கள் பிள்ளைகளில் ஐந்து பேர் ஊழியக்காரர்கள். ஒரு பெண் சீன தேசத்தில் ஊழியக்காரி.

பத்தொன்பது பிள்ளைகளைப் பெற்ற சூசன்னு வெஸ்லி அதிகமாய் ஜெபிப்பவளும், தன் பிள்ளைகளை ஆண்டவருடைய வழிகளில் நடத்துகிறவளுமாய் இருந்தாள். அவர்கள் பிள்ளைகள் ஒருவரும் சீர்கெட்டுப் போகவில்லை. உலக பிரசித்திபெற்ற ஜான்வெஸ்லியும், சார்லஸ் வெஸ்லியும் அந்த அம்மாவின் பிள்ளைகள்தான்.

ஒரு நாளில் ஒரு ஊழியக்காரர் ஒரு வீட்டின் கதவைத் தட்டினார். வீட்டின் பிள்ளை கதவைத் திறந்தான். உன் அம்மாவைப் பார்க்கவேண்டும் என்று ஊழியக்காரர் சொன்னார்; யாராவது உடல் நலம் இல்லாமல் இருக்கிறார்களோ? என்று பிள்ளை கேட்டான். அதற்கு அவர் அப்படி அல்ல என்று சொன்னார். உடனே அந்த பிள்ளை,

''அப்படியானால் அம்மாவை இப்போது பார்க்க முடியாது. அம்மா ஒன்பது மணிக்கு ஜெபிக்கப் போனார்கள், பத்து மணிக்கு வருவார்கள்'' பிரசங்கியார் நாற்பது நிமிடம் காத்திருந்து அம்மாவைப் பார்த்துவிட்டு சென்றார். இந்த அம்மாவின் பிள்ளைகளில் இரண்டுபேர் ஊழியக்காரர்கள், ஒருத்தி மிஷனரி.

## சில பெருந்தலைவர்களின் தாய்மார்

''என் அம்மாவின் ஜெபத்தை நான் நினைவு கூருகிறேன், என் வாழ் நாள் முழுவதும் அது என்னைத் தொடர்ந்து வருகிறது''

— ஆபிரகாம் லிங்கன்.

''தேவனே, இன்று நான் உம்முடைய பிள்ளையாய் இருக்கிறேன் என்றால், அது நீர் எனக்குத் தந்த அம்மாவினால்தான்''.

—பரி. அகஸ்டின்.

''என் வாழ்வின் மிக சந்தோஷமான பகுதி என் அம்மா தான்''.

—வாஷிங்டன் இர்வின்.

''இம்மட்டும் நான் சாதித்த எல்லாவற்றிற்காகவும் என் அம்மாவுக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன்''.

—டி.எல்.மூடி.

ஒரு தாய் ஆயிரம் ஆசிரியர்களைப் பார்க்கிலும் சிறந்தவள்.

—ஜார்ஜ் ஹெர்பர்ட்.

''நான் பிறந்தபொழுது என்தாய் என்னைக் கர்த்தருக்கென்று பிரதிஷ்டை பண்ணி நான் ஒரு உத்தம ஊழியனாக வேண்டுமென்று ஜெபித்தார்கள். என்னைத் தன் மடியில் வைத்து யோவான் 3:16ஐ என் தாய் சொல்லித் தந்ததே என் முதல் நினைவு''.

—நியூமேன் ஹால்.

உலக பிரசித்திப்பெற்ற பிரசங்கியாரான C.H. ஸ்பர்ஜனுடைய தாயார் தன் மகனைப் பார்த்து சொன்ன

வார்த்தை. ''உன்னை நான் நீதியின் வழிகளில் நடத்தியிருக்கிறேன். உன்னுடைய தகப்பனும் நானும் உனக்கு நல்ல மாதிரியைக் காண்பித்திருக்கிறோம்; உனக்கு சுவிசேஷத்தைச் சொல்லியிருக்கிறோம்; சமாதானத்தின் வழியைக் காண்பித்திருக்கிறோம். என் மகனே, நீ தெய்வீகமான வழியில் ஜீவிக்கா விட்டால், தேவனுடைய நியாயாசனத்துக்கு முன்பாக நான் உனக்கு சாட்சியிடுவேன் என்பதை மறக்காதே''.

அருமையான தாயே, உன்னுடைய பொறுப்பை உணர்ந்துகொண்டாயா? ஒரு உத்தம மகனை, மகளை உருவாக்கும் உயர் பணிக்காக உன்னைக் கர்த்தர் தெரிந்துகொண்டாரே! அதற்கேற்றபடி வாழ்கிறாயா? உன் பொறுப்பை நிறைவேற்றுகிறாயா? கர்த்தர் தாமே அதற்கேற்ற ஞானத்தையும் கிருபையையும் தருவாராக. ஆமென்.

## அத்தியாயம் 32

# ஜீவ கால வேலை!

''தன் இஷ்டத்திற்கு விடப்பட்ட பிள்ளையோ தன் தாய்க்கு வெட்கத்தை உண்டுபண்ணுகிறான்" (நீதி. 29:15).

ஒரு சகோதரி தன் சிநேகிதியைப் பார்க்கப் போனாள். அவள் தன் அருமையான இரு பிள்ளைகளுடன் இவளை சந்தித்தாள். அப்பொழுது இவள், ''ஆகா! இப்படிப்பட்ட அருமையான பிள்ளைகளுக்காக என் ஜீவனையே கொடுப்பேனே" என்றாள். அதற்கு அந்த சிநேகிதி, ''ஆம், என் ஜீவனைக் கொடுத்துதான் அவர்களை வளர்த்திருக்கிறேன்" என்று மிகுந்த பணிவுடனும், தெளிவுடனும் கூறினாள்.

ஒரு பிள்ளையின் ஆத்துமாவைச் செழிப்பாக்க பெற்றோர் தங்கள் சமயத்தையும், பிரயாசத்தையும் எவ்வளவாய்ச் செலவழிக்க வேண்டுமென்பதை மேலேயுள்ள சம்பவம் தெளிவுபடுத்தும்.

தங்கள் பிள்ளைகளின் ஆத்துமாவைப் பற்றிய பொறுப்புள்ள தாய், பிள்ளைகளை வேலைக்காரிகளிடம் ஒப்படைத்து விட்டு வேலைகளுக்குப் போவதினால் எத்தனை கொடிய விளைவுகளைச் சந்திக்கிறார்கள். அவர்களையும் பிள்ளைகளையும் கட்டியிருக்கும் அன்பின் கயிறு தளர்ந்து போகிறது; பிள்ளைகள் தெய்வ பக்தியை இழந்து போகிறார்கள்; சன்மார்க்க நெறி தவறிப் போகிறது; தேசமும் அழிவுக்கு நேராக விரைந்து செல்கிறது.

**பணத்துக்காகப் பிள்ளையை மறந்த குடும்பங்கள்:-**

1. பெரிய பங்களா, அழகிய கார், வீட்டில் ஒரு வேலைக்காரி மாத்திரம். மனைவி நைஜீரியாவில் ஆசிரியை, புருஷன் அரேபியா ஆயில் கம்பெனியில் கணக்கர். ஒரே மகன் மாணவர் விடுதியில் தங்கி எட்டாம் வகுப்பு படிக்கிறான்.

தாயார் மகனைப் பார்க்க ஆண்டுக்கு ஒரு முறை வருவாள். தகப்பனார் இரு ஆண்டுகளுக்கு ஒரு முறை வருவார்.

மகனுக்கு சாப்பாடு விடுதியில் தங்க அழகிய அறை, கைச்செலவுக்கு மாதம்ரூ. 150. அது போதாது ரூ. 300 வேண்டுமென்று வாதாடுகிறான்.

தினமும் இரவு தவறான முறையில் கெட்ட நண்பர்களோடு சுற்றித் திரிகிறான். கஞ்சா குடிக்கக் கற்றுக்கொண்டான். இருமுறை போலீஸ் பிடித்து எச்சரித்து விட்டு விட்டது.

அவனுக்காக ஜெபிக்க ஊழியர் வரவழைக்கப்பட்டார். "பிள்ளையை பெற்றோராகிய உங்கள் மேற்பார்வையில் பராமரிக்க கூடாதா?" என்று கேட்ட கேள்விக்கு சகோதரியின் பதில் மௌனம் தான்.

2. இந்தியாவில் உயர்ந்த உத்தியோகத்தில் இருக்கும் ஒரு தாய். அவள் கணவன் அரேபியாவில் வேலை செய்கிறார். மூன்று வருடத்துக்கு ஒரு முறை வீட்டுக்கு வருவார். மூன்று வாரம் தங்குவார். புருஷனோடு குடும்பமாக வாழ்ந்த நாட்கள் மொத்தம் 105; பிள்ளைகள் நான்கு.கார் உண்டு; பெரிய மாடி வீடு உண்டு; பிள்ளைகளின் திருமணத்திற்குத் தேவையான ஏராளம் பணம் உண்டு.

**காணப்படாமற் போன பிள்ளை:-**

ஆனால் பிள்ளைகளுக்குத் தகப்பனை சரியாக தெரியாது. மனைவிக்கு வாழ்க்கையில் விரக்தி ஏற்பட்டுவிட்டது. இந்தக் குடும்பத்துக்காக யார் ஜெபித்து என்ன பயன்? (ஆதாரம்—ஜாமக்காரன்).

திருடர்கள் திருடி அவனை எங்கேயோ ஒளித்து வைத்திருப்பார்களானால் முழுத் தேசமும் ஏகோபித்து எழும்பி தேடிக் கண்டுபிடித்திருக்கும். ஆனால், இந்த பிள்ளையைத் திருடர்கள் திருடவில்லை. ஆனால்,

தகப்பன் அப்பிள்ளையை இழந்து போனான்—பையன் சிறுவனாக இருந்த நாட்களில், அவன் தகப்பனை எல்லாம்

தெரிந்தவர் என்று எண்ணிப் பல கேள்விகளைக் கேட்ட பொழுது, ''போ, இப்பொழுது என்னைத் தொந்தரவு செய்யாதே'' எனக் கூறி துரத்திவிட்டானே, அப்பொழுதே தகப்பனின் பிடியிலிருந்து மகன் நழுவி விட்டான். இப்பொழுது முற்றிலும் காணப்படாமற் போனான்.

தாய் அப்பிள்ளைகளை இழந்து போனாள்— அவள் பல வேலைகளால் மிகவும் வருத்தமடைந்து, பிள்ளையை நடத்த வேண்டிய வழியில் நடத்தத் தவறியபோது அவள் தன் பிள்ளையை பரிதாபமாக இழந்து போனாள்.

சபை இழந்து போனது—ஊழியர்கள் தங்கள் சபையில் வரும் பெரியவர்களுக்காக நல்ல ஆவிக்குரிய பிரசங்கங்களை மாத்திரம் செய்து தங்கள் ஞானத்தாலும், ஆவியாலும் பெரியவர்களையும், ஆவிக்குரியவர்களையும் மகிழ்வித்துக் கொண்டிருக்கும் பொழுது சபையின் பிள்ளைகளை இழந்து போனார்கள்.

பிள்ளைகளின் உணர்ச்சிகளை நாம் உணர்ந்து கொள்ளத் தவறியதால் உற்சாகமிழந்து போன உள்ளங்களைபெற்றோரும் சபையாரும் தேடுகிறார்கள். என்ன செய்வது திருப்பிக் கொண்டுவர இயலவில்லை,

**என் மகனை நான் கொல்வேனோ?**

நான்கு வயது பையன் ஒருவன் தன் தகப்பன் ஓட்டிய காரினுள் அகப்பட்டு மரித்துப் போனான். தகப்பன் தன் மகனின் சிறு சவப்பெட்டியின் மேல் கைகளை வைத்துக் கொண்டு கதறினான். ''உன் அப்பா இப்படி செய்யவில்லை. அப்பா உன்னை நேசிக்கிறார். சொந்த மகனுக்கு அப்பா இப்படி செய்யமாட்டார் என்று உனக்குத் தெரியுமல்லவா?''

இந்த சம்பவம் உண்மையிலேயே மிகவும் துக்கமான காரியமே. ஆனால் இதைப் பார்க்கிலும் துக்கமான காரியம் ஒன்று உண்டு. அது என்ன தெரியுமா? பெற்றோர் தங்கள் கெட்ட நடக்கைகளாகிய கார்களினால் தங்கள் உதவியற்ற பிள்ளைகளை நித்திய நரகத்தில் தள்ளுவதுதான்.

**புத்தகத்தை எழுதி முடித்துவிட்டார்:**

ஒரு வாலிபன் நீதிபதியின் முன் குற்றவாளிக் கூண்டில் நின்றான். அவன் நீதிபதிக்கு மிகவும் அறிமுகமானவன். ''தர்மகர்த்தா ஸ்தாபனச் சட்டம்'' என்னும் பிரசித்தமான சட்ட புத்தகம் எழுதிய வக்கீலின் மகன்தான் குற்றவாளிக் கூண்டில் நிற்பவன்.

நீதிபதி:- உன் தகப்பனை உனக்கு நினைவிருக்கிறதா? இவ்வளவு ஒரு பெரிய தகப்பனை நீ எப்படி கனவீனப்படுத்தலாம்?

குற்றவாளி: ஆம், நன்றாக நினைவிருக்கிறது. நான் ஆலோசனைகளுக்காகவும், ஆறுதலுக்காகவும் அவரிடம் சென்ற வேளைகளில் அவர் தான் எழுதிக் கொண்டிருக்கும் பெரிய புத்தகத்திலிருந்து மெதுவாக தலையை உயர்த்தி, ''ஓடு, ஓடு, மகனே ஓடு. எனக்கு அவசர வேலை இருக்கிறது'' என்றார். அவர் புத்தகத்தை முடித்தார். நான் என் வாழ்க்கையை சிறைச் சாலையில் ஆரம்பித்தேன்.

**உலகை சீர்திருத்தும் உதவாக்கரை தாய்:-**

உலகைச் சீர்திருத்தும் உயர்ந்த உள்ளம் கொண்ட தாயொருத்தி இருந்தாள். மிக ஒழுங்கும் ஒழுக்கமும் உள்ளவள், உங்கள் பிரச்சினைகள் அனைத்துக்கும் விடை அவள் கையில் எப்பொழுதும் உண்டு. அவள் கூறும் பரிகாரங்கள் மிகமிக அற்புதமானவை. தேசத்தின் அத்தனைத் தொல்லைகளையும் தீர்க்க ஆண்டவர் கொடுத்த அருள்வாக்கு அவளிடம் உண்டு. எப்பொழுதும் இங்கும் அங்குமாக ஓடிக்கொண்டேயிருப்பாள். சில வேளைகளில்தான் அவளுக்குத் தன் வீட்டில் இருக்க இயலும். அவளுக்கு டிக்கி என்றொரு மகன் இருந்தான். அவன் கை முற்றிலும் கறை படிந்த கையாயிருந்தது. தன் தாயாருக்கு டிமிக்கி கொடுத்தான். பட்டணத்தைப் பயமுறுத்திவிட்டான். ஊரில் மிகப்

துன்மார்க்கன் அவன்தான். பாவம், மகனைத் திருத்தத்தான் அருள் வாக்கு அவனிடம் இல்லை போலும்.

**கோலிக்குண்டு விளையாட்டு:-**

என் மகன் என் பேரிலுள்ள நம்பிக்கையை இழந்து போனான். நான் அதைத் திரும்பப் பெற்றுக்கொள்ள என்ன செய்யலாம் என ஒரு தகப்பனார் கேம்பல்மார்கன் என்னும் தேவ மனிதனிடம் கேட்டார். அவர் அதற்கு ஒரு எளிய விடை கொடுத்தார். ''உன் மகனுடன் கோலிக்குண்டு விளையாடிருப்பார்".

தங்கள் பிள்ளைகளோடுச் சேர்ந்து ஒவ்வொரு நாளும் கொஞ்சம் சமயம் செலவழிக்காத துக்கம் பின்னால் மாறாத துக்கமாக மாறும். பிள்ளைகள் ஒருவேளை பரம பிதாவின் வீட்டிற்குப் போனால் அல்லது சாத்தானின் வலைக்குள் விழுந்துபோனால் நம்முடைய பிள்ளையைக் கவனிக்க வேண்டிய காலத்தில் கவனித்தோமில்லையே என்ற கவலை நம்மை வாட்டி எடுத்துவிடும்.

**உத்தம தாய்மார்:-**

நான் படுக்கைக்குப் போகும்போது என்னைப் பரிவுடன் பார்க்கும் என் அம்மாவின் அழகிய கண்களை நான் ஒரு போதும் மறப்பதேயில்லை. அவள் வார்த்தைகள் மென்மை இருக்கும். என்னை அரவணைக்கும் அவள் கைகள்தான் எவ்வளவு மிருதுவாயிருந்தன. என் உள்ளத்தில் எழும்பிய அத்தனை கேள்விகளையும் அவளிடம் கேட்டேன். நான் செய்த தவறுகளைச் சொல்லும் பொழுது என் அம்மாவின் கண்களில் தான் எத்தனை வேதனை. ஆகவே அக்கண்களுக்காகவே நான் வேதனையுண்டாக்கும் ஒன்றும் செய்யாதிருக்கக் கற்றுக் கொண்டேன்.

-ஜாண் மார்ட்டின்.

நான் ஒவ்வொரு இரவிலும் ஒவ்வொரு பிள்ளையுடன் நீண்ட நேரம் சம்பாஷிப்பேன். திங்கள் மோலியுடன்;

செவ்வாய் ஹெட்டியுடன்; புதன் நான்சியுடன்; வியாழன் ஜானுடன்; வெள்ளி பேட்டியுடன்; இப்படி என் 18 பிள்களுடனும் சம்பாஷிப்பேன். —சூசன்னா வெஸ்லி.

இந்தத் தாயின் மகனை உலகப் பிரசித்திப்பெற்ற ஜாண்வெஸ்லி பிந்தின நாட்களில் எழுதிய கடிதத்தின் ஒரு பகுதி பின்வருமாறு: ''அம்மா, எனக்காக நீங்கள் மிகவும் போராடி ஜெபித்திருக்கிறீர்கள். விடையும் பெற்றிருக்கிறீர்கள். நான் சிறுவனாயிருந்த பொழுது ஒவ்வொரு வியாழனும் என்னுடன் பேசி என்னைச் சீர்ப்படுத்தியது போல இப்பொழுதும் ஒவ்வொரு வியாழனும் என்னுடன் பேசிக் கொண்டிருந்தால் என் இருதயம் இன்னமும் சுத்தமாயிருக்கும் என்று எண்ணுகிறேன்''.

**பிள்ளைகளின் நேரம்:-**

பகலுக்கும் இரவுக்கும் இடைப்பட்ட நேரம் பிள்ளைகளின் நேரமாகும். அம்மா ஒரு கதை சொல்லுங்கள் என்ற சத்தம் உங்களை நோக்கி வருமே! சிலருக்குக் கதைச் சொல்லத் தெரியாது; சிலருக்குச் சமயமில்லை. வளர்ந்த பிள்ளைகளை ''போ, போ, உன் புத்தகத்தைப் படி'' என்று சொல்லி விரட்டி விடுகிறோம். அவர்கள் தங்களுக்குப் பிரியமான புத்தகத்தைப் படிக்கத் தொடங்கி விடுகிறார்கள். பிள்ளைக்கும் தாய்க்கும் இடையே ஒரு குறுக்குச் சுவர் எழும்பிவிட்டது. பின்னால் இச்சுவரை உடைப்பது சிரமம்.

**நீ எந்தத் தாய்:-**

ஒரு தாய் உட்கார்ந்து அருமையான புத்தகம் ஒன்றை உற்சாகமாகப் படித்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவளது சிறிய மகன் ஓடிவந்து புத்தகத்தைத் தட்டியெறிந்து விட்டு என்னைத் தூக்கு என்றான். அவள் உடனே ''குறும்புகாரப் பயலே, ஓடு, உன்னை நல்ல பிள்ளையாக வளர்க்கும் வழியைப் படித்துக்கொண்டிருக்கிறேன். என்னைத் தொந்தரவு செய்கிறாயா?" என்று சொல்லி ஒரு அடி கொடுத்து தன்

பிள்ளையைத் துரத்திவிட்டு அமைதலாகப் புத்தகத்தைப் படிக்கத் தொடங்கினாள். பிள்ளை அழுதுகொண்டே படுக்கைக்குப் போய்விட்டது. இப்பொழுது அப்பிள்ளை ஆராதனைக்கு வருவதில்லை.

மற்றொரு தாய் மிகக் கவனமாக ஒரு புத்தகம் படித்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவள் பிள்ளை அவள் காலைக் கட்டிப் பிடித்துக்கொண்டு அம்மா என்னைத் தூக்கு என்றது. "நான் ஒரு நாளும் இப்புத்தகத்தைப் படித்து முடிக்கப் போவதில்லை. ஆனால் என் பிள்ளையிடம் தேவ அன்பைச் செலுத்தி அவர் சித்தம் செய்யப் போகிறேன்" என்று சொல்லி பிள்ளையை எடுத்து அணைத்துக்கொண்டாள். பிள்ளை மகிழ்ச்சியுடன் படுக்கைக்குப் போனது. இப்பொழுது அது கர்த்தருக்குப் பிரியமான பிள்ளையாக வருகிறது.

அன்புத்தாயே, தகப்பனே, நீ எவ்வித பெற்றோராய் இருக்கிறாய்? கர்த்தர் உன் கையில் தந்த சுதந்திரத்தைக் கவனமாய் வளர்க்க அவர்தாமே கிருபை தருவாராக. ஆமென்.

## அத்தியாயம் 33

# பிள்ளை வளர்ந்தது!

''அப்பொழுது மனோவா: நீர் சொன்ன காரியம் நிறைவேறும்போது, அந்த பிள்ளையை எப்படி வளர்க்க வேண்டும், அதை எப்படி நடத்த வேண்டும்'' என்று கேட்டான் நியா. 13:12. ''அந்தப் பிள்ளை வளர்ந்து ஆவியிலே பலங்கொண்டு'' ............ லூக். 1:80. ''இயேசுவானவர் ஞானத்திலும், வளர்த்தியிலும், தேவகிருபையிலும், மனுஷர் தயவிலும் அதிகமதிகமாய் விருத்தியடைந்தார்'' லூக். 2:40,52. ''பிள்ளை வளர்ந்து, ஆவியிலே பெலன் கொண்டு, ஞானத்தினால் நிறைந்தது. தேவனுடைய கிருபையும் அவர்மேல் இருந்தது''.

நமது வீடுகளில் பிள்ளைகள் பிறக்கும்பொழுது நமக்கு உண்டாகும் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. இந்தப்பிள்ளை வளர்ந்து எவ்வளவு மேன்மையுள்ளவனாயிருப்பான் என்ற அவனது எதிர்காலத்தை பற்றிய நினைவு நம்மைப் பூரிப்பாக்குகிறது.

ஆனால் ஒவ்வொரு நாளும் அந்த பிள்ளையை ஒழுங்காக வளர்க்கும் பொறுப்பை நினைத்தால் ...... அப்பாடா அது எத்தனை கடினம்! பிள்ளைகளை கடிந்துகொள்ள வேண்டிய இடத்தில் கடிந்துகொண்டு, தண்டிக்க வேண்டிய இடத்தில் தண்டித்து, சீர்ப்படுத்தவேண்டிய இடத்தில் சீர்ப்படுத்தி, உற்சாகப்படுத்த வேண்டிய இடத்தில் உற்சாகப்படுத்தி, ஊக்குவிக்க வேண்டிய இடத்தில் ஊக்குவித்து, அவனை (அவளை) நடக்க வேண்டிய வழியில் நடத்துவதில்தான் எத்தனை பாடுகள், எத்தனை வேதனைகள், எத்தனை குறைபாடு!

மனோவாவுக்கும் அவனது மனைவிக்கும் பிள்ளைகள் இல்லை, ஒரு நாள் தேவ தூதன் தரிசனமாகி அவர்

களுக்கு ஒரு மகன் பிறப்பான் என்று கூறினன். மனோவா அவனிடம், ''அந்த பிள்ளையை எப்படி வளர்க்க வேண்டும்? அதை எப்படி நடத்த வேண்டும்?'' என்று கேட்டான்.

இங்கே இரண்டு கேள்விகள் இருக்கின்றன. முதல் கேள்வி எப்படி வளர்க்க வேண்டும்? (How shall we order the child?). அதாவது அவனது வாழ்க்கையின் ஒழுங்கு என்னவாக இருக்க வேண்டும் அல்லது அவனை எப்படி ஒழுங்குபண்ண வேண்டும்?

ஒரு பிள்ளையின் பிற்கால வாழ்க்கையின் ஒழுங்கு அது பிறந்த வீட்டிலேயே பெற்றோரால் அமைகிறது. உன் பிள்ளையின் வாழ்க்கை சீராக அமைய உன் குடும்பம் சீராக இருக்க வேண்டும். தேவ பக்தியுள்ளவனாக வளர அவன் சிறு பருவத்தில் அவ்வண்ணமே பழக்கப்பட வேண்டும். பெற்றோர் பிள்ளையின் எதிர்காலத்தை அதன் சிறு பருவத்திலேயே ஒழுங்கு செய்யவேண்டும். அதை தேவனிடத்தில் மனோவாவைப் போல் கேட்டுப் பெற்றுக் கொள்ள வேண்டும். ஏனெனில் பிள்ளையை வளர்க்க தேவ ஆலோசனை வேண்டும். ஒவ்வொரு நாளும் பிள்ளைகளை கர்த்தரிடம் ஒப்புக்கொடுத்து அவர்களை நடத்தும் முறையை கர்த்தரிடம் கேட்பது அவசியம்.

அடுத்த கேள்வி எப்படி நடத்த வேண்டும்? அவனுக்கு நாங்கள் என்ன செய்ய வேண்டும்? அவனுடைய உடை, நடை எப்படி இருக்க வேண்டும்? அவனது உணவு பழக்கம் எப்படி இருக்க வேண்டும்?

உன் பிள்ளையை சினிமாக்காரியாக்க விரும்பினால் சினி மாக்காரியைப் போல் சிறு பருவத்திலேயே உடுத்தலாம். வேசியாக்க விரும்பினால், பிள்ளையின் உடலை அப்படியே நீ அலங்கரிக்கலாம். காட்சிப் பொருளாக ஆக்க விரும்பினால் பிள்ளைப் பருவத்திலேயே நீ அப்படி நடத்தலாம்.

உன் பிள்ளை பிற்காலத்தில் அமைதலாக, அடக்கமாக தேவ மனுஷனாக, தேவ மனுஷியாக இருக்க வேண்டுமென

விரும்பினால் சிறு பருவத்திலேயே அதற்கேற்றபடி நடத்து, உடுத்து, ஊட்டு, பழக்கு.

மற்றவர்களை மதியாத பிள்ளையாக வளர்த்துவிட்டு அப் பிள்ளை பிற்காலத்தில் மற்றவர்களிடம் உதை வாங்காத மனிதனாக இருப்பான் என்று எதிர்ப்பார்ப்பது விருதாவல்லவா?

சிகரெட் வாங்க உன் மகனைக் கடைக்கு அனுப்பும் நீ அவன் புகை பிடியாதவனாகவும், குடிப்பழக்கம் இல்லாதவனாகவும் வளரவேண்டும், என்று எதிர்ப்பார்ப்பது வீண் அல்லவா? ஆலயத்துக்குப் போகாத நீ உன் பிள்ளை பக்தியுள்ள பிள்ளையாக வளருவான் என எதிர்ப்பார்ப்பது வீண் அல்லவா? கர்த்தருடைய நாளில் பிள்ளையை உன் சொந்தக் காரியத்துக்கு அனுப்பும் நீ அவன் தேவனுடைய பிள்ளையாய் வளருவான் என எதிர்பார்க்கலாமா? அவனை நீ என்னவாக்க விரும்புகிறாயோ அதற்கேற்றபடி அவனை இப்பொழுதே வளர்க்க ஆரம்பித்துவிடு.

முற்காலங்களில் குடும்பங்களில் ஏராளம் பிள்ளைகள் இருந்தார்கள், கூட்டுக் குடும்பங்களில் இருந்தனர். ஆகவே பலருடன் பழகவும், சூழ்நிலைகளுக்கேற்றபடி தங்களை அமைத்துக் கொள்ளவும், பிள்ளைகளுக்குத் திறன் உருவாயிற்று. இக் காலத்தில், ஒன்னே ஒன்னு, கண்ணே கண்ணு என்று வளர்ப்பதால் பிள்ளைகளுக்குத் தாங்கள் வளரப்போகும் உலகம் இன்னதென்று தெரியவில்லை. வேறு அதிகம் பிள்ளைகள் இல்லாதபடியால் முழுக்கவனத்தையும் முழு வசதிகளையும் அவர்கள் மேல் செலுத்துகிறோம். பிள்ளையைக் கண்டிக்க முடியாது. பிள்ளை அழுதால் என்ன வந்து விடுமோ என்கிற பயம்; கேட்பதைக் கொடுக்காவிட்டால் அவன் என்ன செய்வானோ என்கிற பயம். எல்லாமாகச் சேர்ந்து அதை பிள்ளை சீர்கெட்ட பிள்ளையாக மாறுகிறது. அதை நாம் நடத்துவதில்லை. அது நடக்கும் வழியில் அதை விடுகிறோம்.

நண்பா, ஒரு ரோஜாச் செடியை வளர்க்கிறோம். அதை அதன் விருப்பத்தின் படி வளரவிட்டால் உனக்கு ரோஜா பூ

கிடைக்குமா? அப்படியே உன்பிள்ளையையும் வளர்க்க வேண்டியமுறையில் வளர்த்து ''பிரம்பும் கடிந்து கொள்ளுதலும் ஞானத்தைக் கொடுக்கும்; தன் இஷ்டத்திற்கு விடப்பட்ட பிள்ளையோ தன் தாய்க்கு வெட்கத்தை உண்டு பண்ணுகிறான்'' (நீதி. 29:15).

மனோவா பிள்ளையை வளர்ப்பதற்கு தேவ ஆலோசனையைப்பெற்றான். ஆனால் அப்படி வளர்த்தானா? பிள்ளையின் தலையில் சவரகன் கத்தி படவில்லை. நசரேயனாக வளர்க்கப்பட்டான். ஆனால்.........என்ன பெயர் போட்டான்? சிம்சோன் - சூரியனைப்போல். பிள்ளை தேவன் கொடுத்தது. பெயர் சூரியனைப்போல், பெருமையின் பெயர். பூமிக்குரிய பெயர். இன்று அநேகர் அப்படித்தானே செய்கிறார்கள்! பெற்றோர் ஆவிக்குரியவர்கள் பிள்ளையின் பெயர்...நடிகர், நடிகைகளின் பெயர், அரசியல் தலைவர்களின் பெயர், விளையாட்டு வீரர்களின் பெயர், வாயில் நுழையாத வினோதப் பெயர்கள். அப்பெயரே பெற்றோரின் மாயையை வெளிப்படுத்துகிறதல்லவா? உலக நேசத்தையும் வேஷத்தையும் வெளிப்படுத்துகிறதல்லவா?

தன் பிள்ளையை எப்படி நடத்த வேண்டுமென்று கேட்டவன் பிள்ளையை எப்படி நடத்தினான்? பிள்ளையின் விருப்பம்போல் நடத்தினான். அவன் விரும்பின அந்நிய ஜாதிப் பெண்ணை விவாகம் பண்ண அவன் பின்னாலே போனான்.

தன் இஷ்டத்துக்கு விடப்பட்ட பிள்ளை காசாவிலே வேசியின் வீட்டில் வாழ்ந்தான். பின்னர் சோரேக் என்னும் ஆற்றங்கரையிலுள்ள தெலீலாளின் மடியில் உறங்கினான். முடிவென்ன? இரண்டு கண்களும் பிடுங்கப்பட்டுத் தன் சத்துருக்களுக்கு மாவரைத்துக் கொண்டிருந்தான். அவனுடைய கடைசி ஜெபம், ''என் ஜீவன் பெலிஸ்தரோடே கூட மடியக்கடவது!" (நியா. 16:30.)

ஆம், எப்படி வளர்க்கவேண்டுமென்று கர்த்தரிடம் கேட்டான். கர்த்தர் சொல்லியும் கொடுத்தார். ஆனால்

அவன் அப்படி தன் பிள்ளையை வளர்க்கவில்லை. முடிவு சரியில்லை. தாயே, தகப்பனே, உன் சிறு பிள்ளையைக் குறித்து ஜாக்கிரதை!

சாமுவேல் தேவ மனிதன், நற்சாட்சி பெற்றவன். குற்றம் சாட்டப்படாதவன், சவுலை இராஜாவாக்கினவன், தாவீதை அபிஷேகம் பண்ணினவன், இஸ்ரவேலின் நியாயாதிபதி, ஜெபவீரன். ஆனால் அவன் பிள்ளைகளைப்பற்றிய சாட்சி, ''அவனுடைய குமாரர் அவன் வழிகளில் நடவாமல், பொருளாசைக்குச் சாய்ந்து, பரிதானம் வாங்கி நியாயத்தைப் புரட்டினார்கள்... உம்முடைய குமாரர் உம்முடைய வழிகளில் நடக்கிறதில்லை'' (I சாமு. 8:3,5).

ஏலி தேவனைப்பற்றிய வைராக்கியம் உள்ளவன். தன் பிள்ளைகளுக்கு நல்ல வழிகளை உபதேசித்தான். ஆனால் அவ்வழிகளில் அவர்களை நடக்கவைக்கத் தவறினான். முடிவு ''அவன் குமாரர் தங்கள்மேல் சாபத்தை வரப்பண்ணுகிறதை அவன் அறிந்திருந்தும், அவர்களை அடக்காமற்போன பாவத்தினிமித்தம், நான் அவன் குடும்பத்துக்கு என்றும் நீங்காத நியாயத் தீர்ப்புச் செய்வேன் என்று அவனுக்கு அறிவித்தேன்" (I சாமு 3:13) என்று கர்த்தர் சொன்னார். சொன்னபடியே ஏலியின் குமாரராகிய ஒப்னி, பினெகாஸ் என்னும் இருவரும் ஓரேநாளில் இறந்து போனார்கள் (I சாமு 4:17).

''பிள்ளையானவன் நடக்க வேண்டிய வழியிலே அவனை நடத்து: அவன் முதிர்வயதிலும் அதை விடாதிருப்பான்'' (நீதி 22:6).

**அவனை நடத்து:-**

அவன் நடக்கவேண்டிய வழியைச் சொல்லிக்கொடு என்று சொல்லவில்லை; நடத்து என்று சொல்லியிருக்கிறது. பழக்கு, பயிற்றுவி என்பது பொருள். அதாவது நாம் சொல்லிக் கொடுக்கும் காரியங்கள் பிள்ளையின் வாழ்க்கையாக மாற வேண்டும்.

ஒரு பிள்ளையிடம் நல்லது இன்னது' என்று சொல்லிக் கொடுத்தால் அதை அப்படியே அப்பிள்ளை செய்யும் என திட்டமாய்ச் சொல்லமுடியாது. ஒழுங்காயிரு என்று சொன்னால் அது ஒழுங்கற்றும் இருக்கலாம். ஆனால் அதை ஒழுங்காயிருக்கப் பண்ணி ஒழுங்காயிருக்கும் பழக்கம் வரும் வரையிலும் பயிற்றுவித்தால் முதிர் வயதிலும் ஒழுங்காய் இருக்கும்.

பொய்சொல்லாதே என்று உபதேசம் பண்ணினால் பிள்ளை பொய் சொல்லாமல் இருக்கும் என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. ஆனால் உண்மை பேச சொல்லிக் கொடுத்து அது அவனது பழக்கமாய் மாறும் வரையிலும் பயிற்றுவித்தால் முதிர்வயதிலும் அவன் உண்மையையே சொல்லுவான்.

சிறுவயதில் ஏற்றிய பழக்கம் நல்ல துணியில் ஏற்றிய சாயத்தைப் பார்க்கிலும் உறுதியாயிருக்கும். ''இளமையிற் கல்வி சிலையில் எழுத்து''.

பிள்ளையை நடத்த வேண்டுமானால் பெற்றோர் நடக்க வேண்டும். எவ்விதத்திலும் உன் பிள்ளை உன் வழியில் நடக்க வேண்டும் என்ற தீர்மானம் உனக்குள் வரவேண்டும். அதை நடத்தும் ''தொல்லையை'' நீ ஏற்றுத்தான் ஆக வேண்டும்.

திராட்சை பயிரிடுகிறவன் என்ன செய்கிறான்? அது படரவேண்டிய கொப்புகளின்மேல் படர விடுகிறான். தேவையில்லாத கிளைகளை நறுக்குகிறான். (இரக்கம் பாராட்டுவதில்லை!). கொத்தவேண்டியதைக் கொத்தி, வெட்ட வேண்டியதை வெட்டுகிறான். அதன் விருப்பப்படி விடாமல் தன் விருப்பப்படி அதை வளர்த்துகிறான் (நடத்துகிறான்). அது மிகுந்த கனிகளைக் கொடுக்கிறது.

ஆம்; அம்மா, நீயும் உன் பிள்ளையை அப்படித்தான் நடத்த வேண்டும். ஓ! அதை சிரமம் என்கிறாய் அல்லவா? உண்மைதான். மிகவும் சிரமம் என்று நான் சொல்லுகிறேன்.

ஆனால் இப்பொழுது நீ சிரமப்படாமல் வளர்த்தால் பின்னால் அவன் உன்னை அதிக சிரமப்படுத்துவான் என்பது நிச்சயம்.

''ஒரு பிள்ளையை வளர்க்க வேண்டிய விதத்தில் வளர்ப்பது ஒரு அற்புதமான, அழகான, தெய்வீகமான வேலை. அதற்கு உன் இதயமும், உன் மூளையும் இணைந்து நிரம்பட செயல்பட வேண்டியது அவசியம். பிள்ளையைப் பழக்குவது என்பது உன்னைப் பழக்குவதாகும். உன்னைப் போல் உன் பிள்ளையும் இருக்கும். உன் அழுக்கடைந்த கையினால் வளர்க்கப்பட்ட பிள்ளை அழுக்கடைந்த பிள்ளை யாகவே வளரும். உன் கறைபடிந்த உள்ளத்தால் வளர்க்கப் பட்ட பிள்ளை கறைபடிந்த பிள்ளையாகவே இருக்கும்.

நீ செய்யாததை உன் மகனுக்குக் கற்றுக் கொடுக்க முடியாது. கற்றுக் கொடுப்பது வார்த்தைகளால் அல்ல, உன் இதயத்தால். இரு மனங்கள் ஒன்றுக்கொன்று இணைவதே கற்றுக் கொள்ளல் ஆகும். கோபம், சந்தேகம், அன்பு இவைகளை மறைத்துக் கொள்ள முடியாது. உன்னைக் கூர்ந்து கவனிக்கும் உன் பிள்ளையிடமிருந்து, உன் மனதில் எழும்பும் எண்ணங்களை மறைக்க இயலாது. வார்த்தைகளாக அவன் வெளிப்படுத்தாவிட்டாலும், அவன் உன் உணர்ச்சிகளை உணர்ந்துவிட்டான்.

ஆகவேதான் தன் முழு இருதயத்தோடும் கர்த்தரை நேசியாதவர்களுக்கும், தாங்கள் சொல்லுவதைச் செயல் படுத்தாதவர்களுக்கும் தங்கள் பிள்ளைகளை நல்ல வழிகளில் நடத்த இயலாமல் போகிறது.

பனித்துளி காலம் பயனுள்ள நேரம்
பகலவன் வந்தால் பாழ்பட்டு போகும்
பலனோடு மகவு பயனுடன் வாழ
பலனுடை காலம் பார்த்திடு தாயே
தேவனின் பக்கம் இருப்பிடு நோக்கை
தெய்வத்து அன்பை விளக்கிடு தினமே

நாதனின் கண்களில் இடைத்திட்ட தயவு
நாயகன் வழியில் நடத்திடு தாயே

இலக்கு இறைவன் இணையில் நகரம்
இதற்கு இசைவாய் இட்டுச் செல்லு
இணையில் தேவனில் இணங்கும் பொழுது
இசைவாய் ஜெபத்தில் இருந்திடு தாயே

நாட்கள் வேகமாய் ஓடிடும் தாயே
நன்றே தருணம் நாடிடு இன்றே
நலமது நற்பணி கூடிடு நேரம்
நன்றது காலத்தே நாட்டிடு பயிரே

சூளையில் சுடப்பட்ட வெண்கலப் பாத்திரத்திலுள்ள எழுத்தை அழித்து விட முடியாது. ஆனால் அது உலர்வதற்கு முன்னால் அதை இல்லாமல் செய்திருக்கலாம். வெகு சுலபமாக.

"ஒரு பிள்ளை வளரும்போது தாயிடமிருந்து ஆகாரம் (பால்) சாப்பிடுகிறது. அதற்குத் தேவையான அனைத்தும் தன் தாயிடமிருந்து தான் பெற்றுக் கொள்ளுகிறது. முதலில் உடல் பசியை தாய் ஆற்றுகிறாள். பின் அறிவுப் பசியையும் தாய்தான் ஆற்ற வேண்டும். அவள் சிந்தை பிள்ளையின் சிந்தையாகிறது. அது என்ன? இது யார்? இதுஏன்? இப்படி எத்தனையோ கேள்விக் கணைகள். அத்தனையும் அறிவுப் பசி அடங்கவே.

கண்களால் காண்பவை இதயத்திற்குள் பிரவேசிக்கிறது. அதுவே அதன் முதல் பாடம். உன் வீட்டில் தொங்க விட்டிருக்கும் படங்கள், நாட்காட்டியிலுள்ள ஆபாச படங்கள் பிள்ளையின் நெஞ்சை நாசமாக்குகிறது. டி. வி. சாத்தானின் மாபெரும் கண்டுபிடிப்பு பிள்ளைகளை நரகக்கொள்ளிகளாக்க.

பெற்றோரே, உங்கள் பிள்ளைகள் இயேசுவைக் காண வகை செய்யுங்கள்—மனிதர்களையல்ல, இயேசுவையே அவர்

கள் காணட்டும். மரணபரியந்தம் தன்னைத் தாழ்த்திய இயேசு, முடிவுபரியந்தம் அன்பு கூர்ந்த இயேசு, முகங்குப்புற விழுந்து ஜெபிக்கும் இயேசுவையே பிள்ளைகள் அறியட்டும். நான் வளரும் பொழுது இயேசுவைப்போல் ஆவேன் என்று உங்கள் பிள்ளைகள் சொல்லட்டும்.

பிள்ளைகளை பழக்குவது மிக மிக சிரமமான வேலை. அவர்களை வைத்து ஒரு வேலையைச்செய்வதைவிட நாமே செய்வது எளிது. ஆயினும் உன் பிள்ளை தேர்ச்சியடைய அவர்களைக் கொண்டே அவ்வேலையைச் செய்ய வேண்டும். பிள்ளைகள் கடினமான வேலைகளையும் செய்ய வேண்டும். சில பெற்றோர் தங்கள் பிள்ளைகளைக் கடினமான வேலை செய்யவிடாமல் அவர்களை பெலவீனர் ஆக்குகிறார்கள்.

நான் என் சிறு பருவத்தில் அடிமையைப் போல வேலை செய்தேன். என் பிள்ளையாகிலும் சுகமாயிருக்கட்டும் என்று சொல்லி தங்கள் பிள்ளைகளை உதவாக்கரை ஆக்குகிறார்கள்.

பெர்டெட் என்னும் ஒரு நல்ல தகப்பன் தன் மகனுக்குச் சொன்ன நல்ல வார்த்தைகள் பின்வருமாறு: "நீ வேலை செய்ய வேண்டுமென்பதை மறந்துவிடாதே. நீ மண் வெட்டி எடுத்தாலும், எழுதும் பேனாவைக் கையிலெடுத்தாலும், வண்டியை இழுத்தாலும், புத்தகத்தைப் படித்தாலும், குழி தோண்டும் வேலையானாலும், பத்திரிகை ஆசிரியனானாலும் வேறெந்த தொழில் செய்தாலும் நீ வேலை செய்ய வேண்டும். உன் கண்களை ஏறெடுத்துப்பார், இன்று சுகமாயிருப்பவன் நேற்று கடினமாய் உழைத்தவன்தான்".

வேலைசெய்து சாகிறேனே என எண்ணாதே. இப்பொழுது செய்வதுபோல் 30 வயதுக்குமேல் உன்னால் செய்யஇயலாது.

சோம்பல்தான் உன்னைக் கொல்லுமே தவிர வேலை உன்னைக் கொல்லாது. உழைப்பு உன் உணவை இனிமையாக்கும், நித்திரையை இன்பமாக்கும்.

வேலை செய்யாத வாலிபர்கள் உண்டு. அவர்களை உலகம் மதிப்பதில்லை. அவர்களை ஒருவரும் விரும்புவதும்

இல்லை. அவர்களின் பெயர்கூட பின்சந்ததி அறிவதில்லை. அப்படி ஒருவன் இருந்ததை இப்பெரிய உலகம் அறியாது.

ஆகவே வாலிபனே, "உன் மேற்சட்டையைக் கழற்றி எறி. உன் உழைப்பால் உலகில் கொஞ்சம் தூசிகள் எழும் பட்டும். உன் உழைப்பு அதிகரிப்பதற்கொப்ப உன் வாழ்க்கையும் சீர்ப்படும். உன் நாட்கள் மகிழ்ச்சி நிரம்பியதாயிருக்கும். உலகமும் உன்னில் திருப்தியடையும்"

ஒழுங்கு, ஒழுக்கம், அமைதல் உள்ள கிறிஸ்தவக் குடும்பங்கள் உலகிற்கு ஆசீர்வாதமே. ஜான் ரஸ்கின் தன் வீட்டிலுள்ள மூன்று ஆசீர்வாதங்களை எழுதுகிறார். 1. சமாதானம் -அவரது தகப்பனோ தாயோ சண்டை போட்டதையோ, கூக்குரலிட்டதையோ, அவர் கட்டதில்லை. 2. கீழ்ப்படிதல் - அம்மா அப்பாவுக்குக் கீழ்ப்படியா திருந்ததோ, பிள்ளைகள் பெற்றோருக்குக் கீழ்ப்படியாதிருந்ததோ ஒரு நாளும் இல்லை. பெற்றோரின் வாக்குபிள்ளைகளுக்கு தேவ வாக்காகவே இருந்தது. 3. உண்மை - தருவேன் என்று என் பெற்றோர் சொன்னால் நிச்சயமாகத் தருவார்கள். தண்டிப்பேன் என்றால் தண்டிப்பார்கள். உண்மையற்ற வார்த்தை பெற்றோர் பிள்ளைகளிடம் சொன்னதில்லை.

இப்பேர்ப்பட்ட வீட்டில் வளர்ந்த ஒருவர் உலகப் பிரசித்திப் பெற்றவராய் இருந்ததில் ஆச்சரியமில்லையே. பெற்றோரே, உங்கள் பிள்ளைகள் உங்கள் வீட்டைப் பற்றி இப்படி சாட்சி சொல்லுவார்களா?

சில பெற்றோர் தங்கள் பிள்ளைகளிடம் வேடிக்கைக்காகப் பொய்ச் சொல்லுவார்கள். இதனால் பிள்ளைகளுக்கு உண்மையின்மேல் மதிப்பற்றுப் போகும். பாவத்தைக் குறித்த பயமற்றுப் போகும். தன் பிள்ளையிடம் பொய் சொல்லும் தகப்பன் மதியற்றவன். சொல்லும் வார்த்தையை அப்படியே நம்பும் தன்மை பிள்ளைகளுக்கு தேவனால் அருளப்பட்ட ஒரு நல்வரமாகும். அது தேவனுடைய பரிசுத்த சுபாவத்தில்

பிள்ளைக்குக் கிடைத்திருக்கும் பங்கு. பிள்ளையின் களங்கமற்ற தன்மையைக் களம்பண்ணு. அதைச் சத்தியத்தினால் தூண்டி விடு. உன் பொய்யினால் அணைத்துப் போடாதே.

"அன்பற்ற கண்டிப்பு முரட்டாட்டத்தை உருவாக்கும்; கண்டிப்பற்ற அன்பு பேதமையை உருவாக்கும்" என்பதை யும் மறக்க வேண்டாம்.

அத்தியாயம் 34

# தாழ்மையைப் போதிக்கும் சிறு குழந்தைகளை உள்ளந்திறந்து ஏற்றிடுவீர்!

ஏசாயா 16ம் அதிகாரத்தில், ''இருளானது பூமியை மூடிக்கொள்ளும்..." என்று வாசிக்கிறோம். ஆனால் இயேசு ''நீங்கள் உலகத்திற்கு வெளிச்சமாயிருக்கிறீர்கள்'' என்றார். பூமியை மூடியிருக்கும் அந்தகார இருளின் மத்தியில் சபையானது பிரகாசிக்கும் ஒளியாய்த் திகழவேண்டும். ஒளிக்கு இருள் வேறுபட்டிருப்பது போலவே, சபையின் நோக்கானது உலகத்தின் நோக்கிற்கு முற்றிலும் வேறுபட்டதாய் இருக்க வேண்டும். உலகம் பாவத்தில் மடிந்து வீழ்ந்து கொண்டிருக்கும் போது, சபையோ, பரிசுத்தத்தில் மேலோங்கி வளர வேண்டும். பகை வளரும் இவ்வுலகில் சபையோ அன்பில் வளர வேண்டும். பெருமை உலகத்தைப் பீடித்திருக்கும் வேளையில், சபையானது தாழ்மையின் சின்னமாய்த் திகழ வேண்டும். லௌகீக மயக்கத்தால் உலகப் பொருட்களை பிரதானமாய்த் தேடும். உலகின் சபையானது ஆவிக்குரிய தேவனுடைய இராஜ்யத்தைத் தேடுவதில் முதன்மையாய் இருத்தல் வேண்டும். சிறு குழந்தைகளைப்பற்றி சபையின் நோக்கு என்ன? சிறு குழந்தையைப்பற்றி வேதாகமம் வெளிப்படுத்தும் மேன்மையான சத்தியம் யாது?

**இயேசுவின் நாமத்தில் ஏற்றுக்கொள்ள வேண்டிய சிறு குழந்தைகளை இன்றைய உலகம் எதிர்க்கிறது!**

சிறு குழந்தைகளைப்பற்றி இந்த உலகத்தின் நோக்கம் என்ன? இன்றைய உலகம் சிறுகுழந்தைகளுக்கு முற்றிலும் எதிர்ப்பாய் இருக்கிறது. கிட்டத்தட்ட உலகமெங்கும் இப்போது, ஒரு குழந்தை இருந்தால் போதும் என்று சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். உலகத்தின் நோக்கம் இவ்வாறு

இருக்க சபையின் நோக்கோ முற்றிலும் வேறுபட்டதாய் இருக்க வேண்டும். இயேசு சொன்னார், ''...ஒரு பிள்ளையை என் நாமத்தினிமித்தம் ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்ளுகிறான்'' (மத் 18:5). இரண்டு கருத்துக்களை இவ்வசனத்தில் நாம் பார்க்கிறோம்.

ஒன்று, நாம் ''சிறு குழந்தைகளை இயேசுவின் நாமத்தில் ஏற்றுக்கொள்ள வேண்டும்". இப்போது உங்களை அணுகும் கேள்வி இது தான். நீங்கள் உங்கள் ''எல்லாப்" பிள்ளைகளையும் இயேசுவின் நாமத்தில் ஏற்றுக்கொண்டிருக்கிறீர்களா? அல்லது, சிறு பிள்ளைகளைப்பற்றி மனமடியாய் இருக்கிறீர்களா? அல்லது, சில பிள்ளைகள் பிறவாமல் இருந்திருந்தால் நன்றாயிருக்குமே என்று எண்ணுகின்றீர்களா? இவ்வாறு மாறாய் எண்ணுவீர்களென்றால், இந்த உலகத்தில் காணப்படும் இருள் உங்கள் வீட்டிலும் பிரவேசித்து விட்டது! ஆம், உங்கள் வீட்டில் உள்ள ஒவ்வொரு பிள்ளையையும் இயேசுவின் நாமத்தில் உளமுவந்து ஏற்றுக்கொள்ளுங்கள். இதுவரை அப்படி நீங்கள் ஏற்றுக்கொள்ளவில்லையென்றால், அருமையான தகப்பனே, தாயே நீங்கள் ஆண்டவர் முன்பாக இப்போது முழங்காலிட்டு, ''தேவரீர் என் ஒவ்வொரு பிள்ளைக்காகவும் உமக்கு நன்றி. ஒவ்வொரு பிள்ளையையும் இயேசுவின் நாமத்தில் ஏற்றுக்கொள்ளுகிறேன்'' என்று ஜெபியுங்கள். ஒருவேளை உங்கள் பிள்ளைகளில் ஒன்று மற்றொன்றைவிட ஆரோக்கியம் குறைந்ததாய் இருக்கலாம்—அது ஒன்றும் உங்களை வேற்றுமைப்படுத்த வேண்டாம். ஒருவேளை ஒரு பிள்ளை மற்றொன்றைவிட அறிவில் குறைந்ததாய் இருக்கலாம்—அதுவும் உங்களுக்கு எந்த வித்தியாசத்தையும் உருவாக்க வேண்டாம். நாம் அறிவுள்ள கெட்டிக்காரப் பிள்ளைகளையே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றல்ல, ''எல்லா" பிள்ளைகளையும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றே வேதம் நமக்கு விளம்புகின்றது.

இரண்டாவது, நாம் ''சிறு குழந்தைகளை இயேசுவின் நாமத்தில் ஏற்றுக்கொள்ளும்போது, ஏசுவையே ஏற்றுக்

கொள்கிறோம்''. யோவான் 1:12-ம் வசனத்தின்படி நாம் எவ்வாறு இயேசுவை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அறிந்திருக்கிறோம். ஆனால் யோவான் 1:12ம் வசனத்தின் படி இயேசுவை ஏற்றுக்கொள்ளும் அநேக விசுவாசிகள் மத்தேயு 18:5ன்படி இயேசுவை ஏற்றுக்கொள்ளவேயில்லை. பிள்ளைகள் ''ஒரே தொந்தரவு பிடித்ததுகள்" என்று எண்ணு கிறீர்கள். மாறாக, தேவன் பிள்ளைகளை, உங்களை ஆசீர்வதிப் பதற்கும், உங்கள் பரிசுத்தத்தில் உதவிசெய்வதற்கும், உங்கள் தேசத்தில் தேவனுக்கு சாட்சியான பரிசுத்த சந்த தியை உருவாக்குவதற்குமே கொடுத்திருக்கிறார்.

**2. தானும் தன் குழந்தைகளுமாகிய ''குடும்பத்தில்'' முதலா வது ஜெயஜீவியம் செய்தவர்களே தேவனுடைய வீட்டில் தகுதி உடையவர்கள்:-**

ஏசாயா ஓர் தீர்க்கதரிசி. அவன் மனைவியும் தீர்க்கதரிசி யானவள். இவர் சொல்லுவதைக் கவனியுங்கள், ஏசாயா 8:18ம் வசனம் ''இதோ, நானும், கர்த்தர் எனக்குக் கொடுத்த பிள்ளைகளும்...... இஸ்ரவேலில் அடையாளங் களாகவும் அற்புதங்களாகவும் இருக்கிறோம்" இப்படி சொல் வதற்குப் பதிலாக, ஏசாயா, ''நாங்கள் தீர்க்கதரிசிகள். எனவே எங்களால் பிள்ளைகளோடு நேரத்தை வீணாக்க முடி யாது. ஊழியம் செய்ய அன்றி, வீட்டில் நேரம் செலவழிக்க முடியாது" என்று சொல்லியிருப்பானென்றால், இன்று அநேகர் கண்சொருகிய குருடர்களாயிருப்பது போலவே அவனும் அதே கதி ஆகியிருப்பான்.

ஆனால், ஏசாயாவோ, ''நானும், கர்த்தர் எனக்குக் கொடுத்த பிள்ளைகளும்... இஸ்ரவேலின் அடையாளங்களா கவும் அற்புதங்களாகவும், இருக்கிறோம்" என்றார். ஆம்! பிரிய மான சகோதர சகோதரிகளே!! இது தான் தேவனுடைய சபையில் நம்முடைய மேன்மையான அழைப்பு. நம்முடைய இல்லமே நாம் பிரசங்கிக்கும் சுவிசேஷத்திற்கு ஜீவனுள்ள சாட்சி நாம் பிரசங்கிக்கும் சுவிசேஷம் நம் வீட்டில் கிரியை செய்யவில்லையென்றால், மற்றவர்களுக்கு எவ்வாறு பிரசங்

இக்க முடியும். ஒரு சகோதரன் இவ்வாறு கூறினார்: "எனக்கு என் வீட்டில் ஜெயம் இல்லை. ஆனால் நான் வெளியே பிரயாணமாய் சுற்றும் போது ஜெய ஜீவியம் செய்கிறேன். ஆகவே நான் எப்போதுமே வெளியே பிரயாணம் சென்று ஜெய வாழ்வைக் குறித்துப் பிரசங்கிக்க விரும்புகின்றேன்" என்று சொன்னார். இந்த நிலை சரிதானா என்று அச்சகோதரன் ஒரு தேவ மனிதரிடம் வினவினார். அதற்கு அந்த தேவ மனிதன் இவ்வாறு பதில் கூறினார்: "நீங்கள் செய்கிறவிதமாகவே செய்யுங்கள். ஆனால், வெளியே நீங்கள் செல்லும் போது எப்படிப் பிரசங்கிப்பீர்கள்? எனக்கு என் வீட்டில் ஜெய ஜீவியம் இல்லை. ஆனால், வெளியே வரும் போதே ஜெய ஜீவியவாழ்வு வாழ்கின்றேன். என் வீட்டில் ஜெயஜீவியம் இல்லையென்றால் உங்கள் வீட்டிலும் அப்படித் தான் இருக்கும். எனவே நீங்கள் ஜெய ஜீவியம் செய்ய வேண்டுமென்றால் என்னைப் போலவே பல இடங்களுக்குப் பிரயாணம் செய்யும் பிரசங்கியாராய் மாறுங்கள்". என்ற சுவிசேஷத்தைத் தானே கூற முடியும் இது முழுக்க முழுக்க வஞ்சக வேலை!!

நானும் என் பிள்ளைகளும் அடங்கிய குடும்பம் மிக மிக முக்கியம். எனவே தான் நாம் பிள்ளைகளை இயேசுவின் நாமத்தில் ஏற்றுக்கொள்ள வேண்டும். உங்கள் குடும்பத்தை அலட்சியப்படுத்திவிட்டு, ஊழியமே மிக முக்கியம் என்று எண்ணுகிறீர்கள். எல்லா தொழிற்சாலைகளிலும் முதலாவது பயிற்சி வேலை என்று கொடுத்து விட்டுப் பின்பு தான் நிரந்தர வேலை தருவார்கள். அது போல, தேவன் நம்மை முதலாவது நம் வீட்டிலேயே பயிற்சி அளிக்கிறார். "ஒருவன் தன் சொந்தக்குடும்பத்தை நடத்த அறியாதிருந்தால், தேவனுடைய சபையை எப்படி விசாரிப்பான்?" (1 தீமோ. 3:5), பரிசுத்தாவியானவரின் செய்தி இது தான், "நீங்கள் தேவனுடைய வீட்டில் ஊழியம் செய்ய விரும்பினால், முதலாவது உங்கள் வீட்டில் அதிக கவனம் செலுத்துங்கள்". ஆம்! தேவ சபையில் ஊழியம் செய்ய இதுவே தகுதி. எனவே தான் நாம் பிள்ளைகளை சரியான விதத்தில் போதித்து நடத்துவது மிக அவசியமாய் உள்ளது.

சிலர் சொல்லுவார்கள், ''தேவன் எங்களை அநேகருக்கு ஆசீர்வாதமாயிருக்க அழைத்திருக்கிறார்''. வேதாகமத்தில் இதைப்போலவே அழைக்கப்பட்ட ஒருவரைப்பற்றிப் பார்ப்போம். தேவன் ஆபிரகாமைப் பார்த்துக் கூறினார். ''நீ ஆசீர்வாதமாய் இருப்பாய்...... பூமியிலுள்ள குடும்பங்கள் எல்லாம் ஆசீர்வதிக்கப்படும்''(ஆதி. 12:2,3). பூமியிலுள்ள குடும்பங்கள் எல்லாம் ஆசீர்வதிக்கப்படும்படி அழைக்கப்பட்ட ஆபிரகாமைக்காட்டிலும் விசேஷ அழைப்பைப் பெற்றவர்கள் ஒருவரும் இல்லை. ஆனால், அதற்குரிய நிபந்தனையை ஆதி. 18:19-ல் வாசிக்கிறோம். கர்த்தர் ஆபிரகாமுக்குச் சொன்னதை நிறைவேற்றும்படி, ''அவன் தன் பிள்ளைகளுக்கும், தனக்குப் பின் வரும் தன் வீட்டாருக்கும், நீங்கள் நீதியையும் நியாயத்தையும் செய்து கர்த்தருடைய வழியைக் காத்து நடவுங்கள் என்று கட்டளையிடுவான்''. இந்த வசனத்தை வேறுவிதமாய்ச் சொல்வோமென்றால், ''ஆபிரகாம் தன் பிள்ளைகளையும், வீட்டாரையும் குறித்து பொறுப்பு இல்லாமல் இருந்தால், தேவனாகிய ஆண்டவர் ஆபிரகாமை மற்ற குடும்பங்களுக்கு ஆசீர்வாதமாய் வைக்க முடியவே முடியாது''. ஆகவே தான், நாம் நம்முடைய குடும்பத்தைப்பற்றிய முக்கியத்துவத்தை உணர்ந்து செயல்பட வேண்டும்.

**3. குடும்பப் பெண்கள் பிள்ளைகளைப் பராமரிப்பது பிரதான ஊழியமே அல்லாமல் பிரசங்கிப்பதற்கு அவர்கள் கட்டளையிடப் படவேயில்லை:-**

தகப்பன் வெளியே போகும்போது, குடும்பத்தில் உள்ள ஒரு தாயின் பொறுப்பு மிக அதிகமாகிறது. சபையில் உள்ள தாய்மார்கள் உலகத்திலுள்ள தாய்மார்களுக்கு முற்றிலும் வேறுபட்டவர்களாய் இருக்க வேண்டும்.

இவ்வுலக தாய்மார்கள், தாங்கள் பணம் சம்பாதிப்பதற்காக, பிள்ளைகளை அலட்சியம் செய்துவிட்டு, உத்தியோகம் பார்க்க வெளியே சென்று விடுகிறார்கள். சபையிலோ இந்த மனப்பான்மைக்கு முற்றிலும் மாறுபாடு காணவேண்டும்

உங்களின் நோக்கமோ பணம் சம்பாதிப்பது அல்ல. மாறாக, தேவபக்தியுள்ள பிள்ளைகளே, இங்கு ஒரு பாடத்தை நாம் நன்கு உணர்ந்து கற்கவேண்டும். தேவன், தாய்மார்கள் தங்களின் ஊழியத்தை நிறைவேற்றும்படியான முக்கியத் துவத்தை வலியுறுத்துகின்றார். I தீமோ 2:12-ம் வசனத் தில், ''உபதேசம்பண்ணவும், புருஷன்மேல் அதிகாரஞ் செலுத்தவும், ஸ்திரீயானவளுக்கு நான் உத்தரவு கொடுக்கிற தில்லை'' என்று வாசிக்கிறோம். வசனம் தெளிவாய் இருக்கிறது. ''ஸ்திரீகள் வெளியே சென்று உபதேசம் பண்ணக்கூடாது''. அப்படியிருந்தும், இன்று சில ஸ்திரீகள் வேதவசனத்திற்குக் கீழ்ப்படியாமல் வெளியே சென்று உபதேசம் செய்கிறார்கள். இவர்களை தேவன் ஆசீர்வதிக்க வில்லையா? நிச்சயம் ஆசீர்வதிக்கிறார்! எப்படி? தேவ வசனத்திற்கு கீழ்ப்படிந்து ஞானஸ்நானம் எடுக்காமல் C.S.I. ஸ்தாபனங்களில் உள்ள ஜனங்களை ஆசீர்வதிப்பது போல! ஆம்! தேவன் தம் வசனங்களுக்குக் கீழ்ப்படியாத அநேக ஜனங்களை ஆசீர்வதிக்கத்தான் செய்கின்றார். ''ஆனால்'' அவர்கள் தேவனின் மேன்மையான பங்கை நிச்சயம் பெறவே முடியாது. கீழ்ப்படியாமையில் ஜீவிக்கும் அவர்கள், நிச்சயம் ''கிறிஸ்துவின் மணவாட்டி'' ஸ்தா னத்தை அடையவே முடியாது. எவ்வளவுதான் அவர்கள் தேவனைப்பற்றிப் பிரசங்கித்தாலும் கிறிஸ்துவின் மணவாட்டி சுதந்தரத்தை பெறவே முடியாது.

அப்படியென்றால், பெண்கள் வேறு என்ன செய்ய முடியும்? ''...பிள்ளைப்பேற்றினாலே இரட்சிக்கப்படுவாள்'' (I தீமோ 2:15). ஆம்! இதுதான் அவர்களுடைய ஊழியம். வசனம் 12, ஸ்திரீகள் என்ன செய்ய முடியாது என்றும், வசனம் 15 அவர்கள் என்ன முடியும் என்றும் தெளிவாய் கூறுகிறது. ஆனால் இன்று அநேகர் பிள்ளைகளைப் பராமரிப் பதை ஊழியமாய் ஏற்பதில்லை. எனவே, ஒரு பெண் பிரசங் கியைப் பற்றி ஒருக்காலும் மகிழ்ச்சி அடையாதீர்கள். அதற்கு மாறாக, ஒரு நல்ல குடும்பத் தாய்க்காக மகிழ்ச்சி அடையுங்கள். இவ்வாறு தேவன் தங்களுக்கு நியமித்த

ஊழியத்தோடு திருப்தி கொண்டு தங்களைக் கட்டுப்படுத்தின ஸ்திரீகளே கடைசி நாளில் தங்களின் பிரதிபலனைப் பெறுவார்கள்.

**4. பரலோக ராஜ்யத்தில் அற்புத அடையாள ஊழியம் செய்பவன் அல்ல, சிறுபிள்ளையைப்போல தன்னைத்தானே தாழ்த்துகிறவனே பெரியவன்:-**

குழந்தையைப் பாருங்கள். அது தனக்குத்தானே ஒன்றும் செய்து கொள்ள முடியாத நிர்க்கதியான நிலையில் உள்ளது. இங்குதான் நாம் தாழ்மைக்குரிய விளக்கத்தைப் பார்க்கிறோம். மத்தேயு 18:4-ல் இயேசு சொன்னார்: "இந்தப் பிள்ளையைப்போலத் தன்னைத் தாழ்த்துகிறவன் எவனோ, அவனே பரலோக ராஜ்யத்தில் பெரியவனாயிருப்பான்" இதை அப்படியே விசுவாசிக்கிறீர்களா? பூமியில் உள்ள நம் சபையில் பரலோக ராஜ்யம் காணப்படுகிறது. அப்படியெனில், சபையில் பெரியவர்கள் யார்? இன்று உள்ள சபைகளில் யார் பெரியவர்கள் தெரியுமா? கெட்டிக்காரர்கள்!! வரம் பெற்றவர்கள்!! தங்களை பாஸ்டர் என்றும், அப்போஸ்தலர் என்றும் அழைத்துக்கொள்பவர்கள்!! நன்றாகப் பாடுபவர்களும், நன்றாக பிரசங்கிப்பவர்களும், அருமையாய் கூட்டங்கள் ஒழுங்கு செய்பவர்களும் ஆகிய இப்படிப்பட்டவர்கள்தான் இன்று சபையில் பெரியவர்கள். இவர்கள் தாழ்மையுள்ளவர்களாய் இருக்க வேண்டுமென்று அவசியமேயில்லை. ஆனால் இவர்கள் தான் பெரியவர்கள்! பரலோக ராஜ்யத்தில் இப்படிபட்டவர்கள் பெரியவர்கள் என்று வேதாகமத்தில் எங்கேனும் எழுதியிருக்கிறதா? இல்லவே இல்லை. பின் எப்படி இவர்களெல்லாம் இன்றைய சபைகளில் பெரியவர்கள் ஆனார்கள்? இதன் பதில் என்ன தெரியுமா? இப்படிப்பட்ட சபைகளில் தேவனுடைய ராஜ்யம் காணப்படாததினாலேயே!

உலகத்தின் ஆவி அப்படியே இன்றைய சபைகளில் காணப்படுவதால், பாஸ்டர், அப்போஸ்தலர் என்று அழைக்க

படுபவர்கள் சபைகளில் பெரியவர்கள் ஆகிவிட்டனர்! அதற்கு மாறாக எந்த சபைகளில் ''தேவனுடைய ராஜ்யம்'' காணப்படுகிறதோ, அச்சபைகளில் தங்களைத் தாங்களே சிறுப் பிள்ளையைப்போல தாழ்த்துகிறவர்களே பெரியவர்களாயிருப்பார். இன்று, வரங்களுக்கு அல்ல, தாழ்மைக்கே முக்கிய இடம் கொடுக்கிற அதிகம் தங்களைத் தாழ்த்துகிறவர்களே பெரியவர்களாயும் இருக்கிற சபையைப் பார்த்திருக்கிறீர்களா? பாடுவதற்கும், பிரசங்கிப்பதற்கும், வாத்தியக் கருவிகள் போடுவதற்கும் நாம் எதிரானி அல்ல. ஆனால் இப்படிப்பட்டவர்கள் தாழ்மையில்லாமல் இருந்தால் அவர்களுக்கு பரலோக ராஜ்யத்தில் எந்த மதிப்பும் இல்லையே! ஆனால் பரிதாபம், இவர்களுக்கு இன்றைய கிறிஸ்தவ உலகிலே நல்ல மதிப்பு இருக்கிறது!

அதேபோல, சுகமாக்கும் ஊழியம் அற்புத அடையாளங்களின் ஊழியம் உடையவர்கள் இன்றைய சபைகளில் பெரியவர்கள். இப்படிப்பட்டவர்கள் பரலோக ராஜ்யத்தில் பெரியவர்களாயிருப்பார்கள் என்று வேதாகமத்தில் எழுதப்படவேயில்லை. அற்புத ஊழியம் செய்பவர்களே பெரியவர்கள் என்று எண்ணிய என் குருட்டுக் கண்களை தேவன் ஒருநாள் திறந்தார். ''தேவனுடைய பார்வையில்'' அற்புத ஊழியம் செய்பவர்கள் பெரியவர்களே அல்ல. பின் எவ்வாறு இடிக்கப்பட்டவர்கள் இன்றைய கிறிஸ்தவ உலகில் பெரியவர்கள் ஆனார்கள். அதன் பதில் என்னவென்றால், இன்று ஆயிரக்கணக்கான கிறிஸ்தவர்கள் ''மாம்சத்திற்குரியவர்களாய்'' இருக்கிறார்களே அல்லாமல், ''ஆவிக்குரியவர்கள்'' அல்லவே அல்ல. நீங்கள் ஆவிக்குரியவர்களாய் இருப்பீர்களென்றால், நீங்களும் இயேசு சொன்னது போலவே சிறு பிள்ளையைப்போல தாழ்த்துகிறவர்களைப் பரலோக ராஜ்யத்தின் பெரியவர்களாய் ஏற்றுக் கொள்வீர்கள். இன்று நாம் கிறிஸ்துவின் சரீரமான சபையைக் கட்டவேண்டுமென்றால், இவ்வாறு சிறு பிள்ளையைப்போல, தாழ்த்துகிறவர்களை வைத்தே கட்ட வேண்டும்.

**5. பிறரின் அபிப்பிராயத்திலிருந்து விடுதலையாவதே சிறு குழந்தைகள் கற்பிக்கும் தாழ்மையின் இரகசியம்:**

சிறு பிள்ளைகளிடம் நாம் எவ்வாறு தாழ்மையைக் கற்றுக்கொள்ள முடியும்? ஒரு சிறு குழந்தையின் மனதில் எப்படிப்பட்ட சிந்தை சென்றுகொண்டிருக்கும்? நாம் ஒரு கூட்டத்தில் மேடையில் உள்ள மைக்கிற்கு முன்பாக நிற்பதாக வைத்துக்கொள்வோம். இதைப்போலவே ஒரு சிறு குழந்தையும் இந்த மைக்கிற்கு முன்பாக வருகின்றது என வைத்துக்கொள்வோம், இப்போது இந்தப் பிள்ளை அடடா, நான் இக் கூட்டத்தில் எனக்கு, முன் அமர்ந்திருக்கும் ஜனங்களுக்கு என்னைப்பற்றி நல்ல எண்ணத்தை உருவாக்க வேண்டுமே! என்று சிந்திக்குமா? என்னைப்பற்றி மற்றவர்கள் என்ன பேசிக்கொள்வார்களோ? என்று தானே அதிசயித்துக்கொள்ளுமா? மைக்கிற்கு முன்பாக வந்து நிற்கும் அநேகருடைய சிந்தை இப்படிப்பட்டது தான். இது, ''அவர்களிடம் தாழ்மையில்லை'' என்பதையே காட்டுகிறது. இவர்கள் மனிதர்களுடைய பார்வைக்கு முன்பாகவே எப்போதும் நிற்பவர்கள். இவர்களின் எல்லா வார்த்தைகளும், கிரியைகளும் மனிதர்களைப் பிரியப்படுத்தவே முயல்கின்றது. மேன்மையான கிரியைகளை அவர்கள் மேடையில் ஏறி நடத்தினாலும், அவை யாவும் மனிதர்களை கவர்ச்சிப்படுத்தவே! அவர் பேசி முடித்து, திரும்பவும் தங்கள் ஆசனத்தில் அமர்ந்த பிறகும் கூட, ''ஆஹா! என்னைப்பற்றி இப்போது மற்றவர்கள்'' என்ன எண்ணுவார்கள் என்றுதான் சிந்தித்துக் கொண்டிருப்பார்கள்! இந்நிலையில் ஒரு சிறுபிள்ளை இருந்தால், அதன் எண்ணம் எவ்வாறு இருக்கும்? ஆம்! மற்றவர்கள் தன்னைப் பற்றி என்ன சிந்திப்பார்கள் என்ற சிறிதளவு கவலையும், அக்கறையும் அற்றதாய் இருக்கும். ஆ! இதுவன்றோ மேன்மையான விடுதலை!! இவ்வாறு மற்றவர்களுடைய அபிப்பிராயத்திலிருந்து விடுபடும் பூரண விடுதலையே ''தாழ்மை'' யின் இரகசியம்

அல்லது, தேவன் உங்களை எங்கேனும் உபயோகித்திருப்பார் என்றால், உங்கள் எண்ணத்தில், என்ன சிந்தை ஓடிக்கொண்டிருக்கும்? இப்போது அதே சிந்தையை ஒரு சிறு குழந்தையின் சிந்தையோடு ஒப்பிட்டுப் பாருங்கள். இப்போது புரிந்து கொண்டீர்களா? ஆம்! நீங்கள் தாழ்மையை விட்டு எவ்வளவு ஆயிரம் மைல்கள் அப்பால் விலகியிருக்கிறீர்கள்! இந்த சத்தியங்களைப் பகிர்ந்து கொள்ளும் எனக்கு எப்படி இவையெல்லாம் தெரியும்? எப்படியென்றால், உங்களுக்கு இருக்கும் மாம்சம் போலவே எனக்கும் இருப்பதால் தான்! என்னுடைய எண்ணங்களில் என்ன சிந்தை ஓடுகிறது என்றும் நன்கு அறிவேன்! ஆனால் இப்போது நான் சொல்லுகிறேன், ''தேவன் என் மாம்சத்தில் குடியிருக்கும் மதியீனத்தை அறியும் படியாக, என் கண்களை திறந்திருக்கிறார்''. இப்போது நான் என் நேரங்களை, என்னை நானே சோதித்து நியாயம் தீர்க்கவும் செலவிடுகின்றேன். மீண்டுமாக நான் ஒரு குழந்தையாய் மாறும் உன்னத இரட்சிப்புக்காக அதிகப் பிரயாசப்படுகின்றேன். இயேசு அப்படித்தான் இருந்தார். அவர் ஜனங்கள் முன் நின்ற போது, ஒரு சிறுபிள்ளையைக் காட்டிலும் வேறு வித்தியாசமாய் நிற்கவே இல்லை. நாமும் இதே ஸ்தானத்திற்கு வந்து விட்டால், அந்த விடுதலையின் அனுபவம் எவ்வளவு பெரியதாய் இருக்கும்!

அத்தியாயம் 35

# 'திருமண தீர்மானங்களில் தேவ சித்தம்'

இன்றைய நாட்களில் தேவ பிள்ளைகள் திருமண தீர்மானங்களில் தேவ சித்தம் செய்யத் தவறியதால், தேவனுடைய மேன்மையான ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொள்ள முடியாமல் மற்றவர்களையும் ஏன், சிலர் தேவனையும் குறை கூறி பரிதாபமாய் ஜீவித்துக் கொண்டிருக்கிறார்கள். இக்கடைசிக் காலத்தில் தேவ ஜனங்கள் மத்தியில் காணப்படுகிற புளித்தமா, அவர்கள் குடும்பங்களில் திருமண சந்தர்ப்பங்களில் வெளிப்படுகிறதை காண்கிறோம். ஓர் தேவ மனுஷன் இங்ஙனம் கூறினார்: ஒரு விசுவாசியின் உண்மையான நிறம் (தன்மை) திருமணம் அல்லது மரண சந்தர்ப்பங்களில் வெளிப்படுகிறது. ஆம்; இது எவ்வளவு உண்மை!

இந்நாட்களில் தேவ சித்தம் செய்ய வேண்டும் என்று பிரசங்கிக்கிற, அறிந்திருக்கிற ஊழியர்கள், விசுவாசிகள் தங்கள் குடும்பங்களில் திருமண காரியத்தை முடிவு செய்வதை பல சந்தர்ப்பங்களில் பார்த்து, இதை வாசிக்கிற நீங்களாவது இந்த அடிமைத்தனத்திலிருந்து விடுதலையாக வேண்டுமென்ற பாரத்துடன் இந்த ஆலோசனைகளை எழுதுகிறேன்.

பொதுவாக உலகத்தார் பெண் பார்த்து மூன்று காரியங்களை அடிப்படையாக வைத்தே அதைத் தீர்மானிக்கிறார்கள். நிறம், ஜாதி, பணம் இவைகளுக்கு மட்டுமே முக்கியத்துவம் அளித்து, தேவ சித்தம் செய்யவேண்டும் என்பதையே மறந்து போகிறார்கள். இந்த உலகத்தின் ஆவி தேவ ஜனங்கள் மத்தியிலும் காணப்படுவது எவ்வளவு பரி

தாபமான காரியம். உலகத்தார் ஒரு மாப்பிள்ளையைப் பார்த்து முடிவு செய்யும் போதும், அழகு, அந்தஸ்து, அறிவு இவைகளை அடிப்படையாக வைத்தே முடிவெடுக்கிறார்கள். இவ்வளவு பணம் ரொக்கம் தராவிட்டால் அல்லது இந்த அளவு நகை போடாவிட்டால் பெண் வேண்டாமென முடிவு செய்துவிடுகிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு தேவ சித்தம் செய்ய வேண்டுமென்ற அறிவு இல்லாததினால் அப்படிச் செய்கிறார்கள். ஆனால் தேவபிள்ளைகளோ தாங்கள் எல்லாக் காரியங்களிலேயும் தேவசித்தம் செய்யவேண்டுமென்று அறிந்திருந்தும், அதிகமானவர்கள் திருமண காரியங்களில் மட்டும் தங்கள் சித்தத்தையே சாதிக்க விரும்புகிறார்கள். தேவன் நம்முடைய சித்தத்திற்கு விரோதமாக ஒருபோதும் கிரியை செய்யமாட்டார்.

ஓர் தேவ பிள்ளை தன் மகனுக்கு பெண் பார்க்கச் சொன்ன சமயம், பணமும் குணமும் உள்ள பெண்ணைப் பாருங்கள் என்றார். தேவ சித்தம் என்ன? குணசாலியான ஸ்திரீயைக் கண்டுபிடிப்பவன் யார்? (பணசாலியான ஸ்திரீ அல்ல) என்றே வேதம் கூறுகிறது (நீதி. 31:10). மற்றொரு தேவ பிள்ளை தன் மகனுக்கு பெண் பார்க்கச் சொன்னபோது ஆச்சரியப்படத்தக்கதாய் பணம், ஜாதி, நகை ஒன்றுமே வேண்டாமென்று சொன்ன போதிலும், பார்ப்பதற்கு நல்ல நிறமாய், அழகாய் மட்டும் இருக்க வேண்டும் என்று சொன்னார்கள். மறு சமயம் என்னைப் பார்த்து கர்த்தர் அவர்களுடன் பேசினதாகவும், தங்கள் குறையை அறிக்கையிட்டு தேவன் தமக்குச் சித்தமான பெண்ணை மாத்திரம் தந்தால் போதும். எந்த நிபந்தனையுமில்லாமல் கர்த்தரிடம் ஒப்புக்கொடுத்து விட்டதாகச் சொன்னார்கள். ''சௌந்தரியம் வஞ்சனையுள்ளது; அழகும் வீண். கர்த்தருக்குப் பயப்படுகிற ஸ்திரீயே புகழப்படுவாள்'' என்று வேதம் கூறுகிறது. எவ்வளவு உண்மை (நீதி 1:30). இந்த தாயாரைப்போல கர்த்தருடைய சித்தத்திற்கு மட்டும் பிரதான முக்கியத்துவம் கொடுத்து திருமண விஷயங்களில் தீர்மானிக்கிறவர்கள் பாக்கியவான்கள். அல்லேலூயா!

ஓர் தேவ பிள்ளை இவ்வாறு ஜெபித்தார்: ''ஆண்டவரே உம்முடைய சித்தத்தின்படி ஆகக்கடவது. ஆனால் அது மேரி யாக இருக்கட்டும்" என்றாராம். இப்படித்தான் அனேகர் தேவ சித்தம் செய்ய வேண்டுமென்ற அறிவோடு அனுபவத்தில் தங்கள் சித்தத்தையே சாதிக்க தேவனிடம் அவர் சித்தத்தை தங்களுடைய சித்தத்திற்கு மாற்றியமைக்கும்படி ஜெபிக் கிறார்கள். இப்படிப்பட்ட ஜெபம் தேவனுக்கு அருவருப் பானது (நீதி. 28:9). அவர் உண்மையாகவே தேவ சித்தம் செய்ய மனப்பூர்வமாய்விரும்பியிருப்பாரானால் அவர் கீழ்கண்டவாறு ஜெபித்திருப்பார். ''கர்த்தாவே, நான் மேரியை திருமணம் பண்ண யோசிக்கிறேன். உமக்குச் சித்த மானால் மட்டும் இதை வாய்க்கும்படி செய்யும். இல்லா விட்டால் இதை நிறைவேற விடாதேயும்'' என்று தேவ சித் தத்திற்கு பூரணமாய் ஒப்புவித்து ஜெபித்திருப்பார். தேவ பிள்ளையே உம்முடைய நிலைமை என்ன?

### உங்கள் துணையை தெரிந்து கொள்வது எப்படி?
### முதலாவது தேவன் சித்தத்தை அறியும்படி ஜெபியுங்கள்:-

தேவன் ஆதாமுக்கு ஏற்ற துணையை உண்டாக்குவேன் என்றாரே, ஒழிய, அழகான துணை என்று கூறவில்லை (ஆதி 2:18). ஆகையால் உண்மையான இருதயத்தோடு கர்த்தருடைய சித்தத்தை அறியும்படி உங்கள் இருதயத்தை திறந்து கர்த்தரிடம் இக்காரியத்தை எந்த நிபந்தனையும் போடாமல் ஜெபிக்க ஆரம்பியுங்கள். ஒரு தேவனுடைய மனுஷன் இப்படியாக பிரசங்கிப்பார். கலியாண காரியத்தி லாவது கர்த்தர் சித்தம் கண்டு பிடிக்கத் தெரிய வேண்டாமா என்பார். இன்றைக்கு கர்த்தருடைய சித்தப்படி ஏற்ற துணை யைப் பெற்றுக் கொள்வதற்குப் பதிலாக, தங்களுடைய சித்தப்படி படிப்பு, பணம், பதவி இவைகளை வைத்து தீர்மானித்து தலைவலியைப் பெற்றுக்கொள்கிறார்கள். நீங்களோ தேவ சித்தத்தைக் கண்டு பிடிக்கும் வரை காத் திருந்து ஜெபியுங்கள். ஒரு விசுவாசி மற்றொருவிசுவாசியையே திருமணம் செய்வதே தேவ சித்தம் (II கொ. 6:14). ஆனால் எந்த விசுவாசி, ஏற்ற துணை என்று கர்த்தரே அறிவார்.

ஆகவே தைரியமாய் நிபந்தனை இல்லாமல் கர்த்தருடைய சித்தத்திற்கு ஒப்புக்கொடுத்து ஜெபித்து தேவ சித்தத்தை கண்டுபிடியுங்கள்.

**இரண்டாவதாக தேவசித்தத்தை எப்படியும் நிறைவேற்றுங்கள்:-**

நீங்கள் தேவ சித்தத்தை கண்டு பிடித்த பின்பு சிலர் நினைக்கிறது. போல அவ்வளவு எளிதாக அதை நிறை வேற்றிட முடியாது. ஏனெனில் உங்கள் வாழ்க்கையில் தேவ சித்தம் நடக்க விரும்பாத சத்துருவாகிய பிசாசு எல்லாவிதத் திலேயும் அதை தடை செய்ய முயற்சிப்பான். ஆனால் நீங்கள் பயப்படத் தேவையில்லை. நீங்கள் தேவனுக்குக் கீழ்படிந்து, அவர் சித்தம் செய்ய மாத்திரம் மன உறுதியாயிருக்கும் போது எந்த ஒரு மனுஷனும், எந்த ஒரு சாத்தானுடைய வல்லமையும் உங்களைக்குறித்த தேவ சித்தத்தை கெடுக்கவே முடியாது. ஆமென்!

என்னுடைய சொந்த வாழ்க்கையில் மேற்கூறிய இரண்டு காரியங்களை நான் செய்தபடியால் கடந்த 14வருட விவாக வாழ்க்கையில் ஒரு தடவை கூட நான் திருமண காரி யத்தில் தீர்மானம் செய்ததற்காக வருத்தப்பட்டதேயில்லை. கர்த்தர் கொடுத்த ஏற்ற துணையாகிய என் மனைவிக்காய் கர்த்தரை எப்பொழுதும் துதித்துக் கொண்டே இருக்கிறேன்.

ஆனால் அநேகர் அழகைப்பார்த்து, அந்தஸ்து ஆஸ்தி களை மட்டும் பார்த்து, தேவ சித்தத்திற்கு முதலிடம் கொடுக் காததால் வேதனையுடன் ஏன், நான் திருமணம் செய்தேன் என்று தங்களை நொந்து கொண்டு கசப்போடே காலத்தை கழித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இதை வாசிக்கும் தேவ பிள்ளையே உங்கள் ஒருவருக்கும் இங்ஙனம் நேரிடாதபடி திருமண காரியங்களில் தேவ சித்தம் கண்டுபிடித்து, தடைகளை மேற்கொண்டு தேவ சித்தத்தை மட்டும் நிறைவேற்ற தேவன் கிருபை செய்வாராக. ஆமென்:

## அத்தியாயம் 36

# ஏற்ற துணையை உண்டாக்குவேன்!

தேவன் முதலாவது திருமணத்தை ஏதேன் தோட்டத்திலே நடத்தி வைத்தார். சபையை பூலோகத்தில் ஸ்தாபிக்கும் முன்னமே,பள்ளிக்கூடமோ, ஸ்தாபனங்களோ, ஏற்படுமுன்னமே, தேவன் விவாகத்தை (குடும்பத்தை) ஸ்தாபித்தார். தேவன் சிருஷ்டித்த பின் எல்லாவற்றையும் நல்லது என்று கண்டவர்: மனுஷன் தனிமையாயிருப்பது நல்லதல்ல. ஏற்ற துணையை அவனுக்கு உண்டாக்குவேன் என்றார் (ஆதி 2:18) ஒருவேளை தேவன் நீங்கள் விவாகமில்லாமல் இருக்கும்படி விரும்புகிறார் என்று வைத்துக் கொள்வோம். தேவன் சில ஆண்களையும், பெண்களையும் விவாகமில்லாமல் இருக்கும்படி அழைக்கிறார் என்பது உண்மை (எல்லோரையும் அல்ல). அப்படி அழைக்கப்படுவது தேவனுடைய வரம். அப்படி அழைக்கப்படாதவர்கள் வேகிறதைப் பார்க்கிலும், விவாகம்பண்ணுகிறதே நலம். இப்படிப்பட்ட விஷயத்தில் ஆண்களும், பெண்களும் தேவன் தங்களுக்கு ஏற்ற துணையைத் தரும்படி அவரை விசுவாசித்து, அவருக்கு காத்திருந்து, அவரிடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டும். தேவன் சர்வ ஞானமுள்ளவர். அவர் எல்லாவற்றையும் ஞானமாய் சிருஷ்டித்தார். இந்தக் குடும்பக் காரியத்திலும் புருஷன் மனைவியை துணையாகக் கொடுப்பதிலும் சரியாய் நன்றாய் செய்கிற நல்ல தகப்பன்.

உலகப் பிரகாரமான தாய் தகப்பன் ஒருவேளை பணத்திற்காக சுயநலமாகப் பொருத்தமில்லாத அல்லது ஏற்காத துணையை ஏற்படுத்த யோசிக்கலாம். ஆனால் நம் கர்த்தர் ஒருபோதும் ஏற்ற துணையை கொடுப்பதில் தவற மாட்டார். ஆம், அவர் உண்மையுள்ளவர்.

உதாரணமாக 6 அடி உயரமுள்ள பெண்ணுக்கு 4 அடி உயரமுள்ள ஆண் ஏற்ற துணையாயிருக்க முடியாது என்று சுபாவமே நமக்கு போதிக்கிறது. M. A. படித்த பட்டதாரி

மாப்பிள்ளைக்கு எழுத படிக்க தெரியாத பெண் ஏற்ற துணை அல்ல என்று பொது அறிவே இன்று நமக்கு கற்பிக்கிறது. 20 வயது மாப்பிள்ளைக்கு 35 வயது பெண் சரியான துணை யல்ல என்பதை ஜெபித்து பார்க்காமலேயே அறிந்திருக் கிறோம். ஏற்ற துணையைகண்டு பிடிக்கிற பொறுப்பை கர்த்த ரிடம் விட்டுவிட்டால் ஆதியிலே ஆதாமுக்கு ஏற்ற துணையை உண்டாக்குவேன் என்றவர் நிச்சயமாய் சரியான துணையை ஏற்படுத்தி தருவார். ஆமென்.

இந்த விஷயத்தில் தாய் தகப்பனும் பிள்ளைகளும், ஊழியர்களும், கர்த்தரை சார்ந்து அவரை விசுவாசித்து அவர் நடத்துதலின்படி கீழ்ப்படியும் போது தேவன் ஏற்ற துணைகளை ஏற்படுத்தி தரமுடியும் வேதத்திலே ஈசாக்குக்கு பெண் பார்க்கும்படி தன் ஊழியக்காரானை எலியேசரிடம் ஆபிரகாம் கட்டளையிட்ட பொழுது என் தேசத்துக்கும், என் இனத்தாரிடத்திற்கும் போய் பெண் பார் என்று சொன்ன வசனத்தை வைத்து (ஆதி. 24:4) இன்று விசுவாசி களும் தங்கள் ஜாதியிலே தான் பெண் மாப்பிள்ளை பார்க்க வேண்டும் என்று தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். வேத வசனத்தின்படி பரிசுத்த ஜாதியாகிய விசுவாச விசுவா சியை மட்டுமே திருமணம் செய்ய வேண்டும் என்பது கர்த்தருடைய சித்தம். அந்நிய நுகத்திலே அவிசுவாசி களுடன் பிணைக்கப்படாதிருப்பீர்களாக; நீதிக்கும், அநீதிக் கும் சம்பந்தமேது? ஒளிக்கும், இருளுக்கும் ஐக்கியமேது? கிறிஸ்துவுக்கும், பேலியாளுக்கும் இசைவேது? அவிசுவாசியு டனே விசுவாசிக்குப் பங்கேது? என்று கர்த்தருடைய வார்த்தை தெளிவாக கூறும்பொழுது (II கொரி. 6:14,15). ஒரு விசுவாசி அவிசுவாசியை (ஆண்டவருக்கு தங்களை அர்ப் பணிக்காதவர்களை) திருமணம் செய்து கொள்ளும்படி சொல் லப்பட்டால் ஜெபம் பண்ணி முடிவு செய்கிறேன் என்று சொல்லத் தேவையில்லை. இது தேவ சித்தம் என்று ஜெபிக் காமலேயே திடமாக உறுதியாக சொல்லி விடலாம்.

ஈசாக்கு ஏற்ற துணையாகிய ரெபெக்காளை ஆண்டவர் ஏற்படுத்தி கொடுப்பதற்கு ஆபிரகாமும், ஈசாக்கும்,

எலியேசரும் கர்த்தரை விசுவாசித்து, ஜெபித்து, கர்த்தருடைய வழி நடத்துதலை பெற்று கீழ்ப்படிய வேண்டிய திருந்தது. ஆபிரகாம் கர்த்தரை விசுவாசித்தான், எலியேசரை நம்பினான், எலியேசர் கர்த்தரிடம் ஜெபித்தான், கர்த்தருடைய வழிநடத்துதல் பெற்று ரெபெக்காளை அழைத்து வந்தான். ஈசாக்கு கர்த்தரை விசுவாசித்து தகப்பனையும், தகப்பனுடைய ஊழியக்காரனையும் நம்பி ரெபெக்காளை தனக்கு மனைவியாக்கிக்கொண்டு, அவளை நேசித்து ஆறுதல் அடைந்தான் (ஆதி. 24:67).

பணத்தின் அடிப்படையிலோ, ஜாதி அடிப்படையிலோ வைத்து மாத்திரம் விவாகத்தை நிச்சயிப்பீர்களானால், கர்த்தர் உங்களுக்கு கொடுக்க இருக்கிற ஏற்ற துணையை இழந்து விட்டு, தேவ சித்தத்தை மீறி வேதனைக்குள்ளாவீர்கள். உங்கள் குடும்ப வாழ்க்கை தேவனுக்கு மகிமையாய் ஆசீர்வாதமாய் இருக்க முடியாது.

விவாகஞ் செய்கிற நிலைமையில் வந்திருக்கிற வாலிப சகோதரனே, சகோதரியே, அருமையான பெற்றோரே, ஊழியர்களே, ஆபிரகாமைப் போல, எலியேசரைப் போல, ஈசாக்கைப் போல கர்த்தரை நம்பி, விசுவாசித்து ஜெபித்து அவர் நடத்துதலைப் பெற்றுக்கொண்டு உங்களுக்கோ, உங்கள் பிள்ளைகளுக்கோ, விசுவாசிகளுக்கோ தேவன் ஏற்ற துணை உண்டாக்கும்படி கீழ்ப்படிவோமாக, அனுமதிப்போமாக.

## அத்தியாயம் 37

# வாலிபமே கர்த்தரை தேட சரியான பருவம்!

''கர்த்தரை கண்டடையத்தக்க சமயத்தில் தேடுங்கள்" (ஏசா. 55:6). கர்த்தரை கண்டடையத்தக்க சரியான சமயம்:

**வாலிபப் பிராயமே:-**

தேவன் நம் வாழ்க்கையை மிக அழகாக நேர்த்தியாய் திட்டமிட்டு அமைத்திருக்கிறார். தேவன் அமைத்த திட்ட மிட்ட நேர்த்தியான அந்த உன்னத நிலையில் நம்மை பொருத்தி, தேவசித்தப்படி நம்மை இணைத்து கொள்வது மிக உத்தமமான தேவசெயலாகும். ஆனால் தேவன் நம்மை வைக்கும் இடத்தில் நாம் சந்தோஷமாய், மகிழ்ச்சியாய் இருக்க வேண்டியது நம் கடமை.

தேவனின் மகத்துவம் நிறைந்த வேதத்தில் பெண்மை இனமும் அங்கம் வகிக்கிறது. என்பதை நோக்கும்போது, தேவன் நம்மீது வைத்த சிநேகமும், கரிசனையும் தான் என்ன வென்று சொல்ல விவரிக்க இயலா!

பெண்மை என்பதற்கு அடக்கமும், அமைதியும் நிறைந்த மென்மையானவள் என்ற பொருள்படும். ஆனால் நமக்கும் இந்த மென்மைக்கும் வெகு தூரம். நம் நிலையோ இந்த மென்மைக்கு நேர் மாறானது. அந்தோ பரிதாபம்! எத்தனை வேதனைக்குரிய நிலை தேவனுடைய சகாயத்தையும், இரக்கத் தையும், தயவையும் பெற்று, இந்த அவல நிலையை தேவ பெலனால் மாற்ற தேவன் கிருபை செய்வாராக

வேத அடிப்படையில் வ்ாலிப பிராயத்தில் எப்படி ஆண்டவருக்காய் வாழவேண்டுமென்பதை நாம் பார்ப் போம். ''உன் இளமையைக்குறித்து ஒருவனும் உன்னை

அசட்டை பண்ணுதபடிக்கு, நீ வார்த்தையிலும், நடக்கையி லும், அன்பிலும், ஆவியிலும், விசுவாசத்திலும், கற்பிலும், விசுவாசிகளுக்கு மாதிரியாயிரு (1 தீமோ. 4:12). விசுவாசத் தில் உத்தம குமாரனாகிய (வாலிபனை) தீமோத்தேயுவுக்கு அப்போஸ்தலனாகிய பவுல் அடியார் எழுதிய புத்திமதிகளும், கட்டளைகளும் நிரம்பின நிருபத்தின் ஓர் வசனமே "மாதிரி யாய் இரு'' என முடிந்தது ஆகும். அவர் 15 வயதினிலே தேவனுடைய பிள்ளையாய் மாற்றப்பட்டார் என்பது வேத வல்லுனர்களின் ஆராய்ச்சி கூற்றாகும். ஆனால் ஏழு வருடங் களுக்குள் 'நற்சாட்சி' பெற்றவன் (அப். 16:1,2). நற் சாட்சி பெற்றதன் காரணம் மாதிரியாய் இருந்ததால் தான். எனவே நமக்கும் மாதிரியாய் ஜீவிக்க முடியும் என்பதற்கு சவாலான எடுத்துக்காட்ட முடியாத காரியத்தை தேவன் வேதத்தில் இடம் பெற செய்திருக்க மாட்டார். நம்மைச் செய்யவும் சொல்லமாட்டார். தேவன் பெலப்படுத்தும் போது நம்மால் மாதிரியாய் இருக்க முடியும்.

அப். 1:8ம் வசனத்திலும் தேவன் வானத்திற்கு எடுத்துக் கொள்ளப்படுமுன் கடைசியாய் சொல்லிப் போன வார்த்தை யும் அதுவே ''சாட்சிகளாயிருப்பீர்கள்''. வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பரிசுத்தாவியின் அபிஷேகத்தைப் பெற்றுக் கொண்டால், மாத்திரமே சாட்சியாய், மாதிரியாய் ஜீவித்து நற்சாட்சி பெறமுடியும். வயதானவர்கள் மரிக்கும் போது கடைசிமணி நேரத்தில் சொல்லிப் போன வார்த்தைகளை கூடுமான வரை 98 சதவீதம் நிறைவேற்றுவார்கள். அழிந்து போகிற மனிதன் கடைசி வார்த்தைக்கு அப்படிப்பட்ட மதிப் பும், நிறைவேறுதலும் இருக்குமானால், அழியாத இன்றும் ஜீவிக்கிற நம் ஆண்டவரின் வார்த்தைக்கு பயமும், மதிப்பும் நிறைவேற்ற பிரயாசப்படுதலும் எத்தனை அத்தியாவசிய மன்றோ!

முதலாவது, வார்த்தையில் மாதிரியாயிருக்க கட்டளை, இது தான் பெண்களுக்கு இயலாத காரியம். நம் வார்த்தை யினாலேயே நம்மை ஆண்டவரும் நியாயம் விசாரிப்பார் (மத். 12:37). வார்த்தைகளை பேசுவதில் ஜாக்கிரதையாய்

இல்லையெனில் நம் தேவபக்தியும் வீணாகி விடுமே(யாக்.1:26; 1 : 19). பேசுவதற்கு பொறுமையாயும் இருப்போம். (நீதி 1:19)ம் வசனத்தின்படி பாவம் செய்கிறோம்.

வார்த்தையினாலேயே எதிர்த்து பேசுவது, முறுமுறுப்பு, சண்டை, விவாதம், பல தீமைகள் வருகிறது யாக்கோபு நிருபத்தை அதிக கவனமாய் வாசித்துக் கைக்கொள்வோம்.

இரண்டாவது, நடத்தையில் மாதிரி தீமையை விட்டு விலகுவது (நீதி. 16:17). பொல்லாததை விட்டு விலகுவது (I தெச. 5:22), விட்டதை தொடாதிருப்பது(II பேது. 2:22). சுகபோகமாய் வாழ்ந்திருப்பது, மாயையைப் பின்பற்றுவது இருப்பது இவையாவும் நடத்தையின் மாதிரியாய் இருப்பதற்கு உதாரணங்கள் அல்லது ஆதாரங்களாகும். அருமையான தங்கையே! உன் உள்ளத்தில் தீமை பொல்லாதது, மாயையானது, தேவனுக்கு பிரியம் இல்லாதது என ஆண்டவர் உணர்த்தினாலும், திரும்ப அதே காரியங்களை தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறாயே ஏன்? பரிசுத்த ஆவியானவர் அடிக்கடி உன் உள்ளத்தில் பாவம், நீதி, நியாயத்தீர்ப்பைக் குறித்தும் கண்டித்து உணர்த்தின போதிலும், ஆவியானவரின் சத்தத்தை அலட்சியப்படுத்தின நேரங்களும் எவ்வளவோ உண்டே! அவைகளை அறிக்கை செய்தால் மன்னிக்க தேவன் ஆயத்தமாய் இருக்கிறார். ஆனால் நம்நிலை என்னவென்று ஆராய்ந்து பார்க்கவேண்டியது அவசியம்.

தீமையை விட்டு விலகுவது செம்மையானவர்களுக்கு சமனான பாதை (நீதி 16:17). செம்மையாக்குவதன் மறுபொருள் மாதிரியாய் இருக்க பிரயாசப்படுதலாகும். சமனான பாதையில் நடந்தால் இடறி விழாது, சாட்சியாய் ஜீவிக்க முடியும். சுத்தமுள்ளவன் தன் கிரியையில் செம்மையானவன் (நீதி 21:8). செம்மையானவனோ தன் வழியை நேர்ப்படுத்துகிறான் (நீதி 21:29). நம்முடைய முற்பிதாக்களுக்கு தங்கள் வழிகளில் (கானானாகிய பரம வாக்குத்தத்த தேசத்திற்கு) போகையில் தங்கள் இருதயத்தைச் செவ்வைப் படுத்தாமலும்,(சங் 78:8) உள்ள சந்ததியாரிடம்

பிரியமுள்ளவராய் இல்லாது போனுர். இஸ்ரவேல் ஜனம் தேவனுடைய வார்த்தைக்கு செவிகொடாது போனதால் தான் மிக அங்கலாய்ப்புடனும்,ஏக்கத்துடனும் பரிதாபக் குரலும் கலந்த தொனியில் ஆண்டவர் சொல்லுகிறர்(சங் 81:8, 11;எரே 8:7). நாரை முதலாய் தன் வேளையை அறிகிறது. காட்டுபுரு, கொக்கு, தகைவிலான் குருவியும் காலத்தை அறிகிறது. அந்தோ பரிதாபம்! நாமோ ஆறறிவு உள்ளவர்கள் அறிவில்லாது இருக்கிறோம் என வேதம் கூறுகிறது (ஏசா 1:13).

செம்மையாய் நடக்கிறவனுக்கு என் வார்த்தைகள் நன்மை செய்யாதோ? என்ற கேள்விக்கு நம் வாழ்க்கை தேவனிடமிருந்து நன்மையாக பெற்றுக்கொண்ட பதிலாக இருக்கட்டும். பிரியமான தங்கையே! ''உன் வழிகளிலெல்லாம் (வாழ்கை முழுவதும்) இயேசுவையே நினைத்துக்கொள். அப்பொழுது உன் பாதைகளைச் (நடத்தையை) செவ்வைப் படுத்துவார்" (நீதி 3:6).

வேதவசனத்தின் நடத்துதலுக்கு நம்மை ஒப்புக்கொடுக்கும்போது தேவனின் பூரண ஆளுகையும், ஆசீர்வாதமும் நமக்கே உரித்தாகி நம் மீது இறங்கும். செம்மையானவர்களுக்கு இருளிலே வெளிச்சம் உதிக்கும் (சங் 112:4). நம் இருள் நிறைந்த வாழ்கை ஒளிவீச செம்மையாய் நடப்போம். கர்த்தருடைய முகம் நம்மை நோக்கியிருக்க செம்மையாய் நடப்போம் (சங் 11:7). தேவனுடைய இரட்சிப்பு நம்மில் வெளிப்பட செம்மையாய் நடப்போம் (சங் 50:23). தேவன் தாமே நமக்கு தம் அளவில்லாத கிருபையால் செம்மையாய் நடக்க உதவி செய்வாராக.

பாகம் 2

செம்மையாய் நடக்க வேத வசன ஆலோசனைகள் பழையவைகளாகிய நம் துர்க்குணம், பொல்லாப்பு (I கொ 5:8) மாம்சத்தின் கிரியைகள் யாவையும் ஒழித்து விட்டு புது சிருஷ்டியாய் மாற (1) புதிய மனுஷனை தரித்துக்கொள்ள

வேண்டும் (எபே 4:23,24). உள்ளத்தில் புதிய ஆவியுடன் தேவசாயலாய் மாற வேண்டும்.

புதிய மனுஷனை எதிர்க்க பிசாசு தந்திரமாய் போராட கெர்ச்சிக்கிற சிங்கம் போல் எழும்பிவரும்போது தனிமையாய், வெறுமையாய் உள்ள புதிய மனுஷனும் சத்துருவை எதிர்க்க முடியாது. எனவே தான் பவுல் அப்போஸ்தலர் எபேசியருக்கு எழுதின நிருபத்தில் கூறியிருக்கிற போர்க் கவசங்களாகிய (2) தேவனுடைய சர்வாயுத வர்க்கத்தை தரித்துக்கொள்ள வேண்டும் (எபே 7:11.13).

நம் நீதி அழுக்கான கந்தை (ஏசா 64:6). தேவநீதியென்னும் மார்க்கவசம் தரித்துக்கொள்வது மிக மிக அவசியம். போரில் மார்பு அல்லது இருதயம் அடிபடாது, தாக்கப்படாது, பாதிக்கப்படாதபடி பாதுகாப்பது மிக அவசியமானது. நம் நீதியாகிய பக்தி, பரிசுத்தம், தியாகம் யாவும் அழுக்கான கந்தை. கந்தையென்றால் ஒட்டை அல்லது கிழிசல் அல்லது கந்தல் என்றுதான் அர்த்தம். அதிலும் அழுக்கான கந்தை எனில் எதிரியின் ஆயுதம் ஒட்டை வழியாக மார்பை தாக்க கூடும். எனவே தேவனின் (3) நீதி என்னும் மார்க்கவசம் தரித்துக் கொள்ளவேண்டும்.

தேவ நீதியுடன் அப். பவுல் தெசலோனிக்கே நிருபத்தில் விசுவாசம், அன்பு என்னும் மார்க்கவசத்தையும் இரட்சிப்பின் தலைச்சீராவையும் தரித்துக்கொள்ள வலியுறுத்துகிறார் (I தெச 5:8). (4) பூரணசற்குணத்தின் கட்டாகிய அன்பைத் தரித்துக் கொள்ளுதல் மிகவும் அவசியமானது (கொ 3:14). அன்பு தான் வாழ்க்கைக்கு அஸ்திபாரக்கல். அஸ்திபாரமே சரியில்லாதிருப்பின் வாழ்க்கை என்னும் கட்டிடம் ஆட்டம் காணும் நிலைதான்.

Love is not a virtue; but a unlovable person என்பது ஓர் ஆங்கில சொற்றொடர்.

அன்பு கிரியையில் வெளிப்பட வேண்டும். தேவன் நம்மீது வைத்த அன்பை தமது செல்வக் குமாரனாகிய ஒரே

பேருனவரை என்னையும், உங்களையும் மீட்க அனுப்பினதே தேவ அன்பு வெளிப்பட்டதான செயலாகும். அன்பு தாழ்ச்சி ஏற்படுவதின் காரணம் குற்றங்கள் பெரிதாய் நம் கண்களுக்கு தெரிவதால் தான்.

Faults are thick when love is thin எதிர் மறை
Faults are thin when love is thick நேர் மறை

முதல் வாக்கியத்தின்படி நம் வாழ்க்கையுள்ளதா? அல்லது இரண்டாம் வாக்கியத்தின்படி உள்ளதா?

ஆராய்ந்து பார்த்து அறிக்கை செய்து ஆண்டவரின் அரியணையை நெருங்கி, அவரையே அண்டிக்கொண்டு அன்பின் சொருபியை தம் அன்பை ஊற்ற கெஞ்சுவோம். நம் வாழ்க்கையை செம்மைபடுத்தி, அந்தகார கிரியைகளை அகற்றி தள்ளிவிட்டு, (5) ஒளியின் ஆயுதங்களைத் தரித்துக் கொள்வோம் (ரோ 13,12). தரித்துக்கொண்ட எல்லாவற்று டன் நிலைத்து நிற்க (6) ஜெபத்திலே உறுதியாய் தரித்திருப் பது அவசியம் (ரோ 12:12).

புதிய மனுஷனுய் மாறி, சர்வாயுத வர்க்கம், நீதி (விசுவாசம் அன்பு) மார்க்கவசம், அன்பு, ஒளியின் ஆயுதங்கள் எல்லாவற்றையும் அணிந்து அல்லது தரித்துக் கொண்டு ஜெபத்தில் அமர்ந்திருந்து ஊக்கமாய், கருத்தாய், தாழ்மையாய் ஜெபித்து இறுதியில்.........

இயேசு கிறிஸ்துவையே தரித்துக் கொள்ளவும் வேண்டும் (ரோமர் 13:14).

கடைசியாக சகோதரியே, சந்தோஷமாய் நற்சீர் பொருந்த மேலே கொடுக்கப்பட்டுள்ள தீர்மான கருத்துக் களை கவனமாய் கைக்கொள்வோம்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கிருபை உங்கள் அனைவரோடுங்கூட இருப்பதாக. ஆமென்!

அத்தியாயம் 38

# வாலிப பெண்களுக்கு தற்பரிசோதனை கேள்விகள்!

1. வாலிபத்தில் கர்த்தரை நினைக்கிறீர்களா?
2. ஒழுங்காக வேதம் வாசிக்கிறீர்களா?
3. தினசரி தனி ஜெபத்தில் நேரம் செலவிடுகிறீர்களா?
4. தாயை மதித்து, தாய்க்கு கீழ்ப்படிகிறீர்களா?
5. தகப்பனை கனம் பண்ணுகிறீர்களா?
6. வெளிப்படையான வீண் அலங்காரத்தை வெறுக்கிறீர்களா?
7. உடலை மறைத்து அடக்கமாக உடை உடுத்துகிறீர்களா?
8. பிறர் கவனத்தை ஈர்க்கும் கவர்ச்சியான ஆடை, அலங்காரத்தை வெறுக்கிறீர்களா?
9. அமைதியாக, அடக்கமாக பேசுகிறீர்களா?
10. பெண்ணுக்குரிய நாணத்துடன் நடக்கிறீர்களா?
11. ஆண்கள் உடையை தரிக்காமல் பெண்மைக்குரிய ஆடையை மட்டும் விரும்புகிறீர்களா?
12. சமையலில் தாய்க்கு உதவி செய்து வருங்கால வாழ்விற்கு ஆயத்தமாகிறீர்களா?
13. பள்ளி, கல்லூரி, வேலை ஸ்தலம், பஸ் டாப் முதலிய இடங்களில் அமைதியாக நடந்து கொள்கிறீர்களா?
14. தவறான இரகசிய தொடர்பு இல்லாமல் உண்மையாயிருக்கிறீர்களா?

15. எதிர் பாலரிடம் அளவோடு பழகுகிறீர்களா?

16. உங்கள் கண்கள் நேராய்ப் பார்க்கிறதா?

17. நீங்கள் வாசிக்கும் புத்தகங்கள் கர்த்தருக்கு பிரிய மானவைகளா?

18. உங்கள் தோழிகளின் நட்பு கர்த்தருக்கு ஏற்றது தானா?

19. உங்கள் உடன்பிறந்த மூத்தவர்களுக்குக் கீழ்ப்படிந்து, இளையர்களிடம் அன்பு கூறுகிறீர்களா?

20 எதிர்கால வாழ்க்கையில் முன்னேற ஜெபத்தோடு பிரயாசப்படுகிறீர்களா?

21. உலகப்பிரகாரமான - சினிமா, நாடகம் போன்ற வற்றை வெறுக்கிறீர்களா?

உன் வாலிப பிராயத்தில் உன் சிருஷ்டிகரை நினை (பிர 12:3).

**ஜான் வெஸ்லியின் சட்டங்கள்:-**

1. யாரைப்பற்றிய தீமையையும் நம்பாதே. கேள்விப் படும் எல்லாக் காரியங்களிலிருந்தும் நன்மையானதை உருவாக்கப்பார்.

2. யாரைக்குறித்தும் தீமையாய் பேசாதே. தீமைக்கு காரணமானவரை அல்லது தீமையாகப் பேசப்படு பவரைக் கண்டு பேசும்வரை உன் எண்ணங்களை வெளி யிடாதே.

3. ஒருவரிடம் குறையொன்றைக் காண்பாயானால், அன் போடு அதை அவரிடமே தெளிவாகக் கூறு.

4. பயபக்தியாயிரு; 'கர்த்தருக்கு பரிசுத்தம்' என்பதே உனது குறிக்கோளாக இருக்கட்டும். வீண் பேச்சு களுக்கு விலகு.

5. ஜாக்கிரதையாய் இரு; வீண் பொழுது போக்காதே. தேவைக்கு மிஞ்சி அதிகமான நேரத்தை ஒரு இடத்தி லும் செலவழிக்காதே.

6. ஆண் பெண்ணோடும், பெண் ஆணோடும் பேசும்போது உங்கள் பேச்சு சுருக்கமாகவும், கவனம் உள்ளதாகவும் இருக்கட்டும்.

7. எல்லாவிதமான ஆசை இச்சைகளுக்கும் எச்சரிக்கையாயிரு. யாவருக்கும் ஊழியக்காரனாக சுவிசேஷத்தை அறிவி.

8. காலம் தவறாதே. ஒவ்வொரு வேலையையும் அதனதன் குறித்த வேளையில் செய்.

9. பாவத்திற்கேயன்றி வேறொன்றைக் குறித்தும் வெட்கப்பட வேண்டாம்.

10. எல்லாக் காரியங்களிலேயும் உன் சொந்த விருப்பத்தின்படி செய்ய நாடாதே.

# வாலிபருக்கு (ஆண்) தற்பரிசோதனை கேள்விகள்!

1. வாலிபத்தில் ஆண்டவரை அதிகமாக நினைக்கிறாயா?
2. தினசரி வேதம் வாசிக்கிறாயா? வேதத்தை தியானிக்கிறாயா?
3. தினமும் கொஞ்ச நேரமாவது தனியாக ஜெபிக்கிறாயா?
4. கிறிஸ்தவன் என்று சொல்வதற்கு வெட்கப்படாமலிருக்கிறாயா?
5. இயேசுவை பற்றி பிறருக்கு சொல்கிறாயா?
6. தாயை மதித்து தகப்பனை கனம்பண்ணி கீழ்படிகிறாயா?
7. பெற்றோருக்கு உதவி செய்கிறாயா?
8. சபை கூடுதலுக்கு ஒழுங்காக செல்கிறாயா?
9. சபையின் காரியங்களுக்கு ஈடுபட்டு உழைக்கிறாயா?
10. பெரியவர்களை மதிக்கிறாயா ?
11. படிப்பு வேலைவிஷயங்களில் கவனம் செலுத்துகிறாயா?
12. நேரத்தை வீணாக்காமல், சும்மா சுற்றித்திரியாமல் காலத்தைப் பயன்படுத்துகிறாயா?
13. கெட்ட நண்பரின் கூட்டத்தை விட்டு விலகுகிறாயா?
14. பாலிய இச்சைக்கு இடங்கொடாமல் இருதயத்தைக் காத்துக் கொள்கிறாயா?
15. எதிர்பாலரிடம் (இளம் பெண்களிடம்) அளவுக்கு மீறி அநாவசியமாக பேசாமல் கட்டுப்பாட்டுடன் இருக்கிறாயா?

16. உமது உடை, அலங்காரம் கண்ணியமாக இருக்கிறதா? அளவோடு இருக்கிறதா?

17. உமது பார்வையிலும், சிந்தனையிலும் பரிசுத்தம் இருக்கிறதா?

18. நீர் வாசிக்கும் புத்தகங்கள் அறிவுக்குரியதும் ஆவிக்குரியதும் மட்டும்தானா?

19. இரகசிய பாவத்தை விட்டு விலகியிருக்கிறாயா?

20. நவ நாகரீக மோகத்தை வெறுக்கிறாயா?

21. தவறான இரகசிய தொடர்பு இல்லாமல் இருக்கிறாயா?

22. உடன் பிறந்தவர்களிடம் அன்பாயிருக்கிறாயா?

23. உமது நடத்தை வீதியிலும், பஸ் நிலையத்திலும், கல்லூரியிலும் பரிசுத்தமாக உள்ளதா?

24. ஸ்டிரைக் போராட்டம், கிளர்ச்சி இவைகளிலிருந்து விலகியிருக்கிறாயா?

25. புகை பிடித்தல், போதை பொருட்கள் போன்ற பாவத்திலிருந்து விடுதலை உண்டா?

26. எதிர்கால வாழ்க்கையில் முன்னேற ஜெபத்தோடு பிரயாசப்படுகிறாயா?

27. உலகப்பிரகாரமான—சினிமா, நாடகம், சூதாட்டம் போன்றவற்றிலிருந்து விலகியிருக்கிறாயா?

**வாலிபனே!**

**"வாலிப பிராயத்தில் உன் சிருஷ்டிகரை நினை"**

## அத்தியாயம் 40

# காத்துக் கொள்ளுங்கள்!

''சமாதானக் கட்டினால் ஆவியின் ஒருமையைக் காத்துக் கொள்வதற்கு ஜாக்கிரதையாயிருங்கள்'' (எபேசியர் 4:3).

உங்கள் குடும்பத்தில் சமாதானம் இருக்கட்டும். ஆவியின் ஒருமைப்பாடு இருக்கட்டும். அந்த அன்பின் ஐக்கியத்தைக் காத்துக் கொள்ள வேண்டுமே என்ற உணர்வு உங்கள் உள்ளத்தில் இருக்கட்டும்!

குடும்பங்களில் சந்தேகம் ஏற்பட்டு, உடைந்து சிதறுவதற்கு அநேக காரணங்களுண்டு. முக்கியமாக மூன்று காரணங்களை உங்களுக்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அவைகளை அப்புறப்படுத்த தீர்மானிக்கும் போது நிச்சயமாகவே மெய் சமாதானம் குடும்பத்தில் நிலவும்.

### 1. பழைய பாவ ஜீவியத்தை வர்ணிக்காதே:-

''முந்தினவைகளை நினைக்க வேண்டாம்; பூர்வமானவைகளைச் சிந்திக்க வேண்டாம்'' (ஏசாயா 43:18).

அநேகர் தங்கள் திருமணத்திற்கு முன் வாழ்ந்த அருவருப்பான வாழ்க்கையைத் தன் துணையோடு பகிர்ந்து கொள்வதினால், கணவனின் இருதயம் மனைவியை நம்புவதில்லை; மனைவியின் உள்ளம் கணவனை நம்புவதில்லை. சந்தேகப் பிசாசு தலைவிரித்து ஆட ஆரம்பிக்கிறது. கணவன் சும்மா வெளியில் போய்விட்டு வந்தால் கூட, பழைய காதலியை சந்தித்து விட்டு வருகிறானாக்கும் என்று எண்ணி மனைவி உள்ளம் குமுறுகிறாள். எரிமலையாய் வெடிக்கிறாள்.

இன்றும் சிலர் தங்கள் பழைய வாழ்க்கையை பற்றி தெரிவிக்காவிட்டாலும் கூட மனத்திற்குள்ளே சதா அந்த நினைவாயிருக்கிறார்கள். கர்த்தர் கொடுத்த துணையோடு மனப்பூர்வமாய் மகிழ்ந்து வாழ்க்கையை நடத்தாமல், வேறு ஆட்களை நினைத்துக் கொண்டு, அவரை திருமணம் செய்தே

னில்லையே, அவனை மணமுடித்திருந்தால் மகிழ்ச்சியாயிருந்திருப்பேனே என்றெல்லாம் புகைந்து கொண்டிருக்கிறார்கள். இந்த நினைவுகள் கர்த்தருக்கு அருவருப்பானது.

திருமணத்திற்கு முன்பே உன் பழைய வாழ்க்கையை கர்த்தரிடம் அறிக்கையிட்டு விட்டுவிட்டு, பரிசுத்த ஆவியானவரின் ஒத்தாசையால் புதிய வாழ்க்கையை, பரிசுத்த ஜீவியத்தை ஆரம்பித்து விடு.

**2. குடும்பத்தில் அந்நியரை பிரவேசிக்க விடாதே** ''புருஷன் தன் தகப்பனையும் தன் தாயையும் விட்டு, தன் மனைவியோடே இசைந்திருப்பான். அவர்கள் ஒரே மாம்சமாயிருப்பார்கள்'' (ஆதி 2:24).

குடும்ப வாழ்க்கையில் கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் வருகிற எல்லா அந்நியரையும் தீர்மானமாய் விலக்கு. கர்த்தர் ஒருவனது தகப்பனையும் தாயையும் கூட விட்டு மனைவியோடு இசைந்திருக்கவேண்டும் என்று தெளிவாக கூறுகிறார். அநேக குடும்பங்களில் கணவன் தன் சகோதர சகோதரிகளின் சொல்லைக் கேட்டு மனைவியை அற்பமாய் எண்ணுகிறார்கள். இன்னும் சிலர் தன் மனைவியைப் பற்றி அந்நியர் கூறும் சரித்திரங்களையும் கணவனைப்பற்றி ஊரார் கூறும் அநியாயங்களையும் கேட்டு நம்பி தங்கள் குடும்பங்களைப் பாழாக்குகிறார்கள்.

**3. குடும்பத்தில் சத்துருவை பிரவேசிக்க விடாதே!** குடும்ப வாழ்க்கையில் பிசாசை, மோசம் போக்கும் சாத்தானை நுழையவிடாதே. அவன் தந்திரமாய் நினைவுகளில், சிந்தனைகளில், கனவுகளில் ஊடுருவுவான். ஒரு குடும்பத்தை எனக்குத் தெரியும். அங்கே மனைவிக்கு இரவில் வரும் சொப்பனமெல்லாம் கணவன் மற்ற பெண்களோடே உல்லாசமாய் இருப்பது போல் இருக்கும். கணவனுக்கு வரும் சொப்பனமெல்லாம் மனைவி மற்றவர்களுடன் மோசமாய் நடப்பதுபோல இருக்கும். காலையில் எழுந்ததும் இரண்டு பேருக்கும் ஓயாது சண்டைதான். இது முற்றிலும் பிசாசின் கிரியை. கணவனும் மனைவியும் ஜெபத்தில் இணைந்து அதட்டினால் பிசாசு ஓடிப்போவான்.

தேவபிள்ளையே, குடும்ப ஐக்கியத்தைக் காத்துக் கொள்.

## அத்தியாயம் 41

# மூன்று வித பணிகள்!

**"பார், பிடுங்கவும், இடிக்கவும், அழிக்கவும், கவிழ்க்கவும், கட்டவும், நாட்டவும் உன்னை நான் இன்றைய தினம் ஜாதிகளின் மேலும், ராஜ்யங்களின் மேலும் ஏற்படுத்தினேன் என்று கர்த்தர் என்னுடனே சொன்னார்"**

**எரேமியா 1:10.**

இதில் ஒரு தேவ ஊழியனுடைய மூன்று விதமான பணி குறிக்கப்படுகிறது.

1) தாறுமாறாகக் கட்டப்பட்டுள்ளதை அழிக்க வேண்டும்.

2) சரியான முறையில் திரும்பக் கட்ட வேண்டும்.

3) புதிதாகக் கட்டிய இடத்தை நிரப்ப வேண்டும்.

இந்த குடும்ப ஆசீர்வாத முகாமிலும் முதலாவது தேவன் நம்மை நொறுக்கினார்; இரண்டாவது நம்மை கட்டினார். இப்பொழுது நம்மை நிரப்ப விரும்புகிறார்.

அப்போஸ்தலர் 1:8ன்படி தம்முடைய வல்லமையினால் நம்மை நிரப்ப விரும்புகிறார். "இந்த தெய்வீக வல்லமையைக் குறித்து அறிவது உங்களுக்கடுத்ததல்ல; இதைப் பெற்று அனுபவிப்பதே உங்களுக்குரியதாகும்". அப்போஸ்தலர் 1:7-8ல் பரிசுத்த ஆவியானவரையும், தேவ வல்லமையையும் இணைத்தே கூறப்படுகிறது. பரிசுத்த ஆவியானவரை நீங்கள் பெறும்போது தெய்வீக வல்லமையைப் பெறுவீர்கள். இதே உண்மையை மத்தேயு 7:7-11 ஒறும்,

லூக்கா 11:9-11 ஏரூடும் ஒப்பிட்டு நோக்குங்கால், பரிசுத்த ஆவியானவரையும் அவரது வரங்களையும் இணைத்துக் கூறப் படுகிறது. வரங்களை செயல்படுத்தும் வல்லமையுள்ள ஒரு மனிதனைக் குறித்து கேள்விப்படும்பொழுது ஆச்சரியப்படு வீர்கள். அவனுக்கு முன்பாக தாழ விழவும் முனைவீர்கள். இத்தகைய மனிதர்களை தேவனுடைய பக்தர்கள் என்றும், அவருடைய பரிசுத்தவான்கள் என்றும் கூறி, உங்களை பாவி கள் என்றும், அருகதை அற்றவர்கள் என்றும் கூற முற்படு வீர்கள். ஆனால் வேதக்கூற்றின்படி நீங்களும் வரத்தை வெளிப்படுத்தலாம். ''தேவன் உன்னதத்திற்கேறி சிறைப் பட்டவர்களை சிறையாக்கிக் கொண்டு போனீர்; தேவனாகிய கர்த்தர் மனுஷருக்குள் வாசம் பண்ணும் பொருட்டு, துரோகி களாகிய மனுஷர்களுக்காகவும் வரங்களைப் பெற்றுக் கொண் டீர்" என சங்கீதம் 68:18-ல் காண்கிறோம். அப்போஸ்தலன் பவுல் ''......முன்னே நானும் நசரேயனாகிய இயேசுவின் நாமத்திற்கு விரோதமாய் அநேக காரியங்களை நடப்பிக்க வேண்டுமென்று நினைத்திருந்தேன்.

அப்படியே நான் எருசலேமிலும் செய்தேன். நான் பிர தான ஆசாரியர்களிடத்தில் அதிகாரம் பெற்று, பரிசுத்த வான்களில் அநேகரை சிறைச்சாலைகளில் அடைத்தேன். அவர்கள் கொலை செய்யப்படுகையில் நானும் சம்மதித் திருந்தேன்.

சகல ஜெப ஆலயங்களிலும் நான் அவர்களை அநேகந் தரம் தண்டித்து தேவதூஷணஞ் சொல்லக் கட்டாயப்படுத்தி னேன். அவர்கள் பேரில் மூர்க்கவெறி கொண்டவனாய் அந் நியப் பட்டணங்கள் வரைக்கும் அவர்களைத் துன்பப்படுத்தி னேன்" (அப். 26:9-11). துரோகியாகிய பவுல் மூலம் தேவன் விசேஷித்த அற்புதங்களைச் செய்தார் (அப். 19:11). இயேசு மாம்சத்திலிருந்த நாட்களில் அவரோடு உண்டு, உறங்கி, நெருங்கி வாழ்ந்து, அவருடைய திருவாய்மொழி களைக் கேட்ட சீஷரும் அவர் உயிர்த்தெழுந்தார் என்ற செய்தியை நம்பவேயில்லை (மத். 28:11; மாற் 16:11; 13:14; லூக். 24:1,11). ஆனாலும், இவர்களுக்கும் தேவ

னுடைய வரங்கள் செயல்பட்டன. நீங்களும் வரங்களைச் செயல்படுத்தலாம். எலியா நம்மைப் போல பாடுள்ள மனிதன் (யாக். 5:17). எலியாவின் கைகளுக்கு நீர் வார்த்தவன் எலிசா (II இராஜா. 3:11). இவர்களையும் தேவன் அசாதரணமாக பயன்படுத்தினார். உங்களையும் பயன்படுத்தக் கூடும். தம்மைப்பற்றி உத்தம இருதயத்தோடிருக்கிறவர்களுக்குத் தம்முடைய வல்லமையை விளங்கப் பண்ணும்படி, கர்த்தருடைய கண்கள் பூமியெங்கும் உலாவிக் கொண்டிருக்கிறது (II நாளா. 16:9). தாம் செய்தவற்றை நீங்களும் செய்ய வேண்டுமென்று எதிர்பார்கிறார் இதிலும் பெரிதானவற்றை நிறைவேற்ற வேண்டுமென்று விரும்புகிறார் (யோவான் 14:12). இப்பொழுதே அக்கினி பற்றி எரிய வேண்டுமென்று ஆசையோடு நிற்கிறார் (லூக். 12:49). நீங்கள் போகுமிடமெல்லாம் ஜீவ தண்ணீருள்ள நதிகள் பாய வேண்டுமென்று தேவன் விரும்புகிறார் (யோ. 7:37-38). I கொரி. 12:5-8-ல் குறிப்பிட்ட ஒன்பது வரங்களையும் உடையவர்களாக, வெளிப்படுத்துகிறவர்களாக நாம் இருக்க வேண்டுமென்று அவர் வாஞ்சிக்கிறார். அவர் வாஞ்சையை நிறைவேற்ற நாம் செய்ய வேண்டியது என்ன?

1) தாகமாயிருக்க வேண்டும்—தாகமாயிருந்தேன் என்றல்ல, இப்பொழுதே தாகமாயிருக்க வேண்டும்.
2) தேவனைக் கேட்க வேண்டும்.
3. வேத வாக்கியம் சொல்லுகிறபடி விசுவாசிக்க வேண்டும் (யோவான் 7:37-38; லூக் 11:9-13).

தயாராக சமைத்து வைக்கப்பட்டிருந்த ஆகாரத்தை, கேட்கும் தன் மகனுக்கு தகப்பன் எடுத்துத் தருவது எவ்வளவு நிச்சயமோ, அவ்வளவு நிச்சயம் பரமபிதா பரிசுத்தாவியானவரைத் தருவது (லூக் 11:11-13). மூப்பர்கள் கைகளை வைப்பதினால் வரங்கள் உங்களுக்கு உண்டாகும் (II தீமோ. 1:6,7). அப்போஸ்தலர்கள் ஜெபம் பண்ணி கைகளை வைத்த போது பரிசுத்தாவியானவர் அவர்கள்

மேல் வந்தார் (அப்போ. 8:16-19). இப்பொழுதும் விசுவாசத்தோடு கேட்டு பெற்றுக் கொள்ளுங்கள். மூப்பர்கள் உங்களுக்கு உதவி செய்வார்கள். (மூகாமியர் ஜெபித்து, பரிசுத்தாவியானவரையும், வரத்தையும் பெற்றுக் கொண்டார்கள்). நானும் என் வீட்டாருமோ வென்றால், கர்த்தரையே சேவிப்போம் என்ற இம்முகாமின் கருப்பொருள் யோசுவா 24:15ல் உள்ளது. 14ஆம் 15ஆம் வசனங்களில் யோசுவாவின் உறுதிமொழியோடு கூட ஜனங்களுக்கு ''கர்த்தரையே சேவியுங்கள்" என்ற கட்டளைத் தருகிறான். ஆனால் அவர்களோ, ''நாங்களும் கர்த்தரைச் சேவிப்போம்'' என்றார்கள் (வச. 18). யோசுவாவும், நீங்கள் அவரைச் சேவிக்க மாட்டீர்கள் என்றான். ஜனங்கள் யோசுவாவை நோக்கி, ''அப்படியல்ல நாங்கள் 'கர்த்தரையே' சேவிப்போம் என்றார்கள்" (வச. 21). அப்பொழுது யோசுவா ஜனங்களை நோக்கி ''கர்த்தரை சேவிக்கும்படிக்கு நீங்கள் அவரைத் தெரிந்து கொண்டதற்கு நீங்களே சாட்சி'' என்றான் (வச. 22). அதற்கு அவர்கள் ''நாங்களே சாட்சிகள்" என்றார்கள் (வசனம் 23). ''நம்முடைய தேவனாகிய கர்த்தரையே சேவித்து அவர் சத்தத்திற்கே கீழ்படிவோம்'' என்றார்கள் (வச. 24).

நாமும் இந்த நாளிலே ''நம்முடைய தேவனாகிய கர்த்தரையே சேவித்து அவர் சத்தத்திற்கே கீழ்படிவோம்'' என்ற தீர்மானத்தோடு கடந்து செல்வோம். கர்த்தர் நம்மை ஆசீர்வதிப்பாராக! ஆமென்.

# இப்புத்தகத்தைப் பற்றி ... ...

★ குடும்பத்தின் குறைவும் இயேசுவின் நிறைவும்

கிறிஸ்தவ குடும்பம் பரலோகத்தின் வாசல்

குடும்ப வாழ்வில் வரும் மோசங்கள்

கணவன் விரும்பும் மனைவி!

தலை சிறந்த புருஷனின் தன்மைகள்

குழப்பம் இல்லாத குடும்ப உறவு

வாலிப வயதே சரியான வயது

திருமண தீர்மானங்களில் தேவ சித்தம்

திருந்துவதற்கு தீர்மானி!

**இன்றைய பல தேவ மனிதர்களின் தேவ செய்திகள்**

**... அடங்கிய இப்படிப்பட்ட புத்தகம்**

**வெளிவருவது இதுவே முதல் தடவை.**

GOD ORDAINED FAMILY /TAMIL/ MAY. 88 /FIRST EDITION